# கல்கி

வைரவிழா ஆண்டு

KALKI
2.6.2002
ரூ. 6.00

# நெல்லைச் சிறப்பிதழ்

அதிக பக்கங்கள்

சூன்யம் வைத்தது போல், வீடே அமானுஷ்யமாக இருந்தது. யார் முதலில் பேசுவது. அதுவும், என்ன பேசுவது? தெரியாமல் கன்னத்தில் கை வைத்தவாறே அமர்ந்திருந்தனர்.

அடுத்த வாரம் திருமணம்.

ஒரு பக்கம் வேலை ஜரூராக நடந்து கொண்டிருந்தது. அப்பாதான் பெரிதும் பாதிக்கப்பட்டிருந்தார்.

பசங்களைவிட, பொண்ணுமீது தான் அதீத ப்ரியம் காட்டினார்.

செல்லம்மா என்றால் உயிர். அவள் இப்படிச் செய்திருக்கக் கூடாதுதான்.

"டொக்... டொக்... டொக்..."

கதவு தட்டப்பட, எல்லோருடைய பார்வையும் கதவு பக்கம் திரும்பியது.

பெரியவன் தான் எழுந்து கதவைத் திறந்தான்.

வாசலில் அர்விந்த் நின்றிருந்தான். அவனது முதுகுக்குப்பின், செல்லம்மாவைப் பார்த்ததும், பெரியவனின் முகத்தில் இரத்தம் பாய்ந்தது.

"உள்ளே போய்ப் பேசலாமே?" என்றான் அர்விந்த்.

பதிலேதும் பேசாமல் முன்னே செல்ல, இருவரும் பின் தொடர்ந்தனர்.

செல்லம்மாவைப் பார்த்ததும், எல்லோருடைய முகத்திலும் நூறு வோல்ட் பல்பு மின்னியது.

சின்னவன் எப்பவுமே முரடன் தான். உள்ளுக்குள்ளே குமுறிக் கொண்டிருந்த துக்கம், கோபம் வெளியேற வாய்ப்பு கிடைத்ததும் வெடித்துச் சிதறியது.

"டேய்!"

அப்பா தடுப்பதற்குள், அர்விந்தின் முகத்தில் ஒரு குத்து விழுந்தது. செல்லம்மா பதறிப் போனாள்.

உதட்டோரம் உப்புக் கரித்தது. கட்டை விரலால் தொட்டுப் பார்த்தான்.

பிசுபிசுத்தது.

அந்த தர்மசங்கடமான சூழ்நிலையைப் பெரியவன்தான் சமாளித்தான்.

"மன்னிச்சிடுங்க" என்றான்.

"பரவாயில்லைங்க" சிரிக்க முயற்சி...

சொந்த வீட்டில் அந்நியமாக உணர்ந்தாள் செல்லம்மா. தூணோரம் நின்றிருந்தவளின் கைகளைப் பிடித்து, அப்பாவை நோக்கி அழைத்து வந்தான்.

"உங்க பொண்ணு, இந்த வீட்டைவிட்டு வெளியில் வந்தபோது, எப்படி இருந்தாளோ அப்படியே இருக்கா, முழுசா. மன்னிச்சிடுங்க" அப்பாவின் கைகளில் செல்லம்மாவை ஒப்படைத்தான்.

இரண்டடி நடந்தவன் நின்று, திரும்பி செல்லம்மாவைப் பார்த்து "வரேன், செல்லா" என்று வேகமாக நடந்தான்.

நெஞ்சு முழுவதும் செல்லம்மாதான் நிறைந்திருந்தாள்.

மூன்று வருட காதல். அவ்வளவு சுலபத்தில் மறக்க இயலுமா? இருந்தும், சின்ன ஆறுதல். அவன் மனசு இப்படித்தான் நினைத்துக் கொண்டிருந்தது:

'ஓடிப்போன தங்கை திரும்பி வீட்டிற்கு வந்திருந்தால், எப்படி இருக்கும்?'

# காதல் வலி

தவன்


• புதுமைப்பித்தன்


• முகம்மது மீரான்


• தமயந்தி


• முத்துக்குமாரசா


• தளவாய் இராமசாமி

# நெல்லையின்

தமிழால் நெல்லைக்குக் கிடைத்த புகழின் பின்னணியில், தன்னலம் பாராமல் உழைத்த இலக்கிய கர்த்தாக்கள், எழுத்தாளர்கள், இமைப்பொழுதும் சோராத இலக்கிய அமைப்புகள் என்று பட்டியல் போட்டால் இங்கே பக்கங்கள் போதாது என்றாலும் எட்டயபுரம் ஈன்றெடுத்த உலக மகாகவி பாரதிக்கு முன்பும், பாரதிக்குப் பின்புமாய் ஒரு சில இலக்கிய முகங்களை மட்டும் இங்கே சந்திப்போம்.

"தென்பாண்டிச் சீமைக்காரர்கள் பிறவிக் கதைக்காரர்கள்'' என்பார் வெங்கட்சாமிநாதன். ஆனால் தமிழ்க் கவிதையிலும் சிறந்து விளங்கியவர்கள் நெல்லைக்காரர்கள் என்பதற்கு, குற்றாலக் குறவஞ்சியை இயற்றி, துள்ளும் கவியோசையால் செவிகளை நனைத்த, தென்காசி மைந்தர் திரிகூடராசப்ப கவிராயர் ஓர் எடுத்துக்காட்டு. இவரோடு குற்றாலத்தின் இலக்கியச் சிறப்பு முடிந்து விடுகிறதா என்ன? டி.கே.சியை எப்படி மறப்பது! குற்றால மாமுனிவர் டி.கே. சிதம்பரநாத முதலியாரைக் கேள்விப்படாத தமிழர்களே இருக்க முடியாது. தமிழ்நாட்டின் தாகூர் அவர். முகத்திலும் கண்களிலும் அவ்வளவு ஒளி. தமிழுக்காகவே வாழ்க்கையின் பெரும்பகுதியைச் செலவழித்தவர்.

கம்பராமாயணத்தை எடுத்துக்கொண்டு கம்பனின் ஒவ்வொரு பாட்டுக்குள்ளும், புதைந்துகிடக்கும் இலக்கியச் சுவையை, தமது பேச்சுத் திறமையால் வெளிப்படுத்தி எல்லோரையும் கம்பரசத்தில் மூழ்கடித்தவர். அவரது வீட்டில் காலை பத்து மணிக்கு இலக்கிய நிகழ்ச்சி ஆரம்பமாகும். 'ரசிகமணி' டி.கே.சி என்ற அவரது பெயராடு இணைந்து கொண்ட பட்டத்தைப் போலவே, கம்பரை ரசித்து, வந்திருப்பவர்களையும் ரசிக்க வைத்துவிடுவார். அவரது தமிழைப் பருக வருவோரில், ராஜாஜி, மீ.ப. சோமசுந்தரம், நீதிபதி மகாராஜன், இராமநாதபுரம் அரசர், காரைக்குடி சா. கணேசன், கல்கி கிருஷ்ணமூர்த்தி என்று ஜாம்பவான்களும் அடங்குவர். இலக்கிய விருந்துக்குப் பிறகு மதியம் நாவுக்கும் நல்ல விருந்து. 'அண்ணி' என்று மரியாதையுடனும், அன்புடனும் அழைக்கப்பட்ட திருமதி. டி.கே.சி ருசிகரமான விருந்து பரிமாறுவார். உணவு இடைவேளைக்குப் பிறகு மீண்டும் கம்பரின் காட்சிகளைக் கண்முன் நிறுத்தத் தொடங்கிவிடுவார் டி.கே.சி.




தமிழ் மேடைகளில் ஆணித்தரமான கருத்துகளை, அடுக்குநடையில் பேசி தமிழ் வளர்த்த மற்றொருவர் 'சொல்லின் செல்வர்' ரா.பி. சேதுப்பிள்ளை. சாகித்ய அகாடமி துவக்கப்பட்ட அடுத்த ஆண்டே, 1955ல் முதல் விருதை, தமது 'தமிழ் இன்பம்' கட்டுரைகளுக்காக பெற்று நெல்லைக்குப் பெருமை சேர்த்தார் இந்தப் பெருமகன். தவிர தமது சொத்து மற்றும் புத்தக விற்பனையிலிருந்து கிடைக்கும் ராயல்டி போன்றவற்றை நெல்லை மருத்துவ

மனைக்கு உயில் எழுதி வைத்துள்ளார். இவர் பிறந்தது நெல்லை இராசவல்லிபுரத்தில். ஆச்சர்யம்! இதே ஊரில் பிறந்த வல்லிக்கண்ணன் சிறுகதையிலும் புதுக்கவிதையிலும் சாதித்துவிட்டு, 'புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்' திறனாய்வு நூலுக்காக 1978ல் சாகித்ய அகாடமி விருது வென்றார். இவர்கள் தவிர மீ.ப. சோமசுந்தரம், பி.ஸ்ரீ. ஆச்சார்யா, அ. சினிவாசராகவன், கு. அழகிரிசாமி, தொ.மு.சி. இரகுநாதன், ஆதவன் சுந்தரம், சு. சமுத்திரம், கி. இராஜநாராயணன், தோப்பில் முகமது மீரான், தி.க. சிவசங்கரன் என்று இதுவரை பன்னிரண்டு பேர் சாகித்ய அகாடமி விருதுகளைக் குவித்திருக்கிறார்கள்.

ஆனால் விருதுகள் எதுவும் பெறாவிட்டாலும், தமிழ்ச் சிறுகதைகளை உலகத் தரத்துக்கு எடுத்துச் சென்ற புதுமைப்பித்தனை விடுத்து தமிழ்ச் சிறுகதை வரலாற்றை எழுதுதல் கடினம். "நெல்லை நகரின் வண்ணார்பேட்டையைச் சார்ந்த புதுமைப்பித்தனின் 'சிந்தனைச் சுதந்திரம்' காரணமாக, மற்றவர்கள் கையாளமுடியாத விஷயங்களைத் தைரியமாகவும் லாகவமாகவும் இவரால் கையாள முடிந்தது" என்று விமர்சித்தார் க.நா.சு.

# இலக்கிய நகி!

இன்றும் நெல்லையில் வாரம் தவறாமல் கூடி தொல்காப்பியர் முதல் பாரதிதாசன் வரை தமிழ்ப் பேசுகின்ற இலக்கிய அமைப்புகளுக்குப் பஞ்சமில்லை. அவற்றில் பொருநை இலக்கிய வட்டத்தின் சாதனையை நீங்கள் நம்பித்தான் ஆகவேண்டும். 1984 நவம்பர் நான்காம் நாள் முதல்கூட்டத்தோடு தொடங்கிய பொருநை இலக்கியவட்டம், இதுவரை ஒரு ஞாயிறுகூட தடைபட்டு நின்றதில்லை. அடுத்த ஆண்டு நவம்பரில் ஆயிரமாவது கூட்டத்தைத் தொடப்போகும், பொருநையின் புரவலர் தளவாய் இராமசாமி.




நவீன இலக்கிய உலகிலும் எண்ணற்ற அமைப்புகள் துடிப்பான இளம் எழுத்தாளர்களின் முயற்சியில் இயங்கி வருகின்றன. அவற்றில் புத்தம் புதிதாகத் தோன்றியிருப்பது, 'குரல்'. எழுத்தாளர் தமயந்தியின் முயற்சியால், எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்கள், மாணவர்கள், பேராசிரியர்களை ஒன்றிணைத்துள்ள இந்த அமைப்பு, வளரும் இலக்கியத்தைப் பேசுவதற்காகத் துவக்கப்படவில்லையாம். 'மைலாஞ்சி' கவிதைத் தொகுதியினால் மத நட வடிக்கைக்கு ஆளான கவிஞர் எச்.சி. ரசூலுக்கு இழைக்கப்பட்டது போன்று எழுத்தாளர்களுக்கு இழைக்கப்படும் அநீதிகளையும், நெல்லை காட்டு நாய்க்கன் சமூகத்தைச் சேர்ந்த பட்டதாரி மாணவர் செந்தில்வேல் முருகனுக்கு அவரது வீட்டில் பன்றிகள் வளர்க்கப்படவில்லை என்பதால் ஜாதி சான்று தர அரசு மறுத்தது போன்று மாணவர்களுக்கு இழைக்கப்படும் அநீதிகளையும் எதிர்த்துப் போராடுவதுதான் குரலின் செயல்திட்டம்.

தீவிர இலக்கிய அமைப்புகளைப் போல - நெல்லையில் தோன்றிய தனிப் பெரும் பதிப்புத் துறை நிறுவனம், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம். 1920ல் தொடங்கப்பட்ட இந்த நிறுவனம் நெல்லை தவிர இன்று சென்னை, திருச்சி, மதுரை, சேலம், கோவை, கும்பகோணம் என்று பரந்து விரிந்து சங்க இலக்கிய நூல்களைப் பதிப்பித்து விற்பதில் சாதனை படைத்துக்கொண்டிருக்கிறது. வா. திருவரங்கனார், பத்மஸ்ரீ வா. சுப்பையா சகோதரர்களால் தொடங்கப்பட்ட இந் நிறுவனத்தின் தற்கால மேலாண்மை இயக்குனராக இருந்து வருகிறார் இரா. முத்துக் குமாரசாமி. டாக்டர் மு.வ உரை எழுதிய திருக்குறள் புத்தகத்தின் நூற்று அறுபத்து ஒன்பதாவது பதிப்பை, தற்போது வெளியிட்டிருப்பதே இந் நிறுவனத்தின் பெருமையைப் பறை சாற்றும்.

## நீங்கள் கேட்டவை - தராசு

● கே.சுதர்ஷன், தூத்துக்குடி.

*? வாணியம்பாடியில் செங்கை சிவம் வேட்பு மனு தள்ளுபடி செய்யப்பட்டு பின்னர் ஏற்றுக் கொள்ளப்பட்டதன் மர்மம் என்ன?*

! தேர்தல் கமிஷன் நோக்கில் தர்மம் இல்லை; மர்மம்தான் இருக்கிறது. அதனால்தான் ஒவ்வொரு தடவையும் ஒவ்வொரு விதமாக தேர்தல் விதிகளை அர்த்தம் பண்ணிக் கொண்டு வெவ்வேறு வித முடிவுகளை அதிகாரிகள் எடுக்க நேர்கிறது. மொத்தத்தில் ஒரே சொதப்பல்!

● எஸ்.முரளி, குறிஞ்சிப்பாடி.

*? அரசு வலுவாகத்தான் உள்ளது என்று பிரதமர் சொல்கிறாரே?*

! கட்டடம் உறுதிதான்; அஸ்திவாரம்தான் 'டான்ஸ்' ஆடிக் கொண்டிருக்கிறது.

# காங்கிரஸ் த.மா.கா இணைந்தால் யார் தலைவர்?

● அ. தாசன்,
பெங்களூர்.

*? குஜராத் கலவரத்தை மோடியுடன் சேர்ந்து இல் அடக்கி விடுவாரா?*

! இல் பதவியில் உள்ளவரை கலவர நாய்



● 'மாயா' வோட்டு!



● இப்போதும் குழந்தை!

வாலைச் சுருட்டிக் கொள்ளும் என்று நம்பலாம். ஆனால் அவர் என்றென்றைக்கும் குஜராத் அரசுக்குப் பாதுகாப்பு ஆலோசகராக இயங்க முடியாதே! அதனால்தான் மோடிக்குப் பதில் நடுநிலையாளராக ஒருவர் முதல்வர் பதவி ஏற்க வேண்டும் என்பது.



* 'உறுதி' மொழி!

● எல்.எம்.மங்கை, திருவண்ணாமலை.

? 'பசி' என்பது மனிதனுக்கு வரமா? சாபமா?

! வரம்தான். அதனால்தானே உழைக்க வேண்டும் என்ற எண்ணத்தில் போராடுகிறான்.

● எம்.சுப்ரமணி, விராலிப்பட்டி. ❒

? மாயாவதி அரசுக்கு நம்பிக்கை வாக்கெடுப்பில் எதிர்பார்க்காதபடி ஆறு வோட்டுகள் அதிகமாகக் கிடைத்திருப்பது எதைக் காட்டுகிறது?

! பணம் பாதாளம் வரை பாயும் என்பதை!

● பா.கு.மணிவண்ணன், திருப்பூர்.

? உங்களைப் போன்ற பத்திரிகைகள் விலை உயர்வு செய்வதற்கு மட்டும் ஏதேனும் காரணம் சொல்வீர்கள்; நாங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும். ஆனால் அரசு வரி உயர்வு என்றால் மட்டும் அதற்கு நாங்கள் எதிர்ப்பு காட்ட வேண்டும்... இது நியாயமா?

! பத்திரிகைத் துறையின் செலவு அதிகரிப்பதற்கும் அரசின் வரிவிதிப்பு மற்றும் பொருளாதார நோக்குதான் காரணம் என்பது அறிக!

● பொன்.இலக்கியா, மதுரை - 16.

? காங்கிரஸ் - த.மா.கா. இணைப்புக்குப் பின் யார் தலைவர்...?

! சோனியா சொல்லுவாங்க!



* தற்காலிகத்...

● ஆர்.அப்துல் சலாம், திருச்சி - 21.

? 'நான் குழந்தையாக இருந்த காலத்தில் பிளாஸ்டிக் பொருட்கள் மார்க்கெட்டுக்கு வரவில்லை. அப்போது அன்றாட வாழ்க்கை ஸ்தம்பித்து விட்டதா?' என்று ஜெயலலிதா கேட்கிறாரே...?



* ... தீர்வுதான்!

! பிரச்னையே அதுதானே! இப்போது பிளாஸ்டிக் உபயோகம் மிக அதிகம். பிளாஸ்டிக் உற்பத்தியையும் புழக்கத்தையும் நம்பி ஏராளமானவர்கள் அத்தொழிலில் முதலீடு செய்துள்ளனர். இரவோடிரவாக பிளாஸ்டிக்குக்குத் தடைவிதித்தால் அவர்கள் கதி என்ன? பல விதங்களில் பிளாஸ்டிக் உபயோகித்து வருவோர்தான் எப்படி திடீரென்று நிறுத்துவார்கள்? அதனால்தான அவகாசம் தரப்பட வேண்டும் என்பது.

● சு.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்.

? நேபாளத்தில் சம்ஸ்கிருத பல்கலைக் கழகத்தை மாவோ. தீவிரவாதிகள் எரித்துள்ளார்களே! சம்ஸ்கிருத மொழியை யாரும் சொல்லித்தரக் கூடாது என்று கூறி, சம்ஸ்கிருத ஆசிரியர்களைத் தாக்கியும் வருகிறார்களாமே?

! மகா அபத்தம். இங்கும் (புதுவையில்) சம்ஸ்கிருத பாரதி நடத்திய வகுப்புகளில் புகுந்து அடித்துள்ளனர் சி.பி.ஐ. நேஷனல் லீகைச் சேர்ந்தவர்கள். அர்த்தமற்ற மொழி வெறிக்கு அரசியல் தூண்டல்களே காரணம் என்று அறிய சோர்வு ஏற்படுகிறது. சென்னை பல்கலையின் இசைத் துறையில், தமிழுக்கு முதலிடம் என்று சொல்லி மும்மூர்த்திகள் கிர்த்தனை



* கல்தா!

களை (சம்ஸ்கிருதம், தெலுங்கு) பி.ஏ. பாடத்திலிருந்தே நீக்கிவிட்டதை அறிய, இந்த மகா அசட்டுத்தனத்தை எண்ணி அழுவதா சிரிப்பதா என்றே புரியவில்லை!

● இரா.திலீப், திருச்சி - 14. ★

? மாருதி போன்ற வெற்றிகரமான அரசு நிறுவனத்தைத் தனியார்மயம் ஆக்குவது சரியா?

! முற்றிலும் தனியார் மயமாக்கவில்லை. அரசின் பங்கை 49 சதவிகிதமாகக் குறைத்துக்கொண்டு சுஸுகியுடையதை 51ஆக உயர்த்த அனுமதித்துள்ளது. இதன் மூலம் நிர்வாகக் கட்டுப்பாடு சுஸுகியிடம்; அரசுக்கு லாபத்தில் பங்கு உண்டு; பொறுப்பு குறைவு - சரியான நடவடிக்கைதான்.

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்.

? 'பிரபாகரனைப் பிடிக்க ராணுவத்தை அனுப்ப வேண்டுமென்று தீர்மானம் போட்டவர்கள், இந்திய

**□ ரூ.100 பரிசு பெறுபவர் :**
**எம்.சுப்ரமணி, விராலிப்பட்டி, விரணம்பட்டி அஞ்சல், சிந்தாமணிப்பட்டி (வழி), குளித்தலை வட்டம், கரூர் மாவட்டம் - 621 301.**

**★ ரூ.50 பரிசு பெறுபவர் :**
**இரா. திலீப், சி3/153, பெல் டவுன்ஷிப், திருச்சி - 620 014.**

பாராளுமன்றக் கட்டடத்தை தாக்கிய பாகிஸ்தானுக்கு ராணுவத்தை அனுப்ப வேண்டுமென தீர்மானம் போடாதது ஏன்?...' என்று வைகோ கேட்டுள்ளாரே?

! அதான் இப்போ அம்மா 'உத்தரவு' போட்டுட்டாங்களே! பாகிஸ்தான்மீது இந்தியா போர் தொடுக்கணும்னு... டிசம்பர் 13ல் அவங்க முதல்வராக இருக்கலியே!

● பி.எஸ். முருகேஷ், ஈரோடு - 1.

? இ.காங்கிரசுடன் த.மா.கா. இணைவதால் யாருக்கு லாபம்?

! ஒற்றுமையாயிருந்து சுறுசுறுப்பாக இயங்கினால் ஜாதி-மதச்சார்பற்ற, தேசிய நோக்குடைய கட்சிகள் அனைத்துக்குமே லாபம். கூடவே தமிழகத்துக்கும் இந்தியாவுக்கும்கூட லாபம். உட்கட்சிப் பூசல் தொடர்ந்தால் இதர கட்சிகளுக்கு லாபம்! குறிப்பாக, திராவிடக் கட்சிகளுக்கு லாபம்.

# அருள் மொட்டு!

நவதானியங்களை ஆஞ்சநேயருக்குப் படைத்து எடுத்துச் செல்வது வழக்கம்.

- ரமேஷ் சர்மா, நெல்லை

## குரங்கணி முத்துமாலை அம்மன்

திருநெல்வேலி - திருச்செந்தூர் நெடுஞ்சாலையில் தென் திருப்பேரைக்கு அருகில் அமைந்துள்ள ஸ்தலம் குரங்கணி. பொருநை நதியின் தென் கரையில் பொதிகைத் தென்றல் வீசிவரும் வழியில் ராமபிரான் தன் வானரச் சேனையை அணி வகுத்ததால் இத்தலம் 'குரங்கணி' என்ற பெயர் பெற்றது.

இராவணன் சீதா தேவியைக் கவர்ந்து செல்லும்போது சீதாதேவி இராமபிரானுக்கு அடையாளம் தெரியப்படுத்துவதற்காக, தமது ஆபரணங்களைக் கழற்றி வீசிய போது அவளுடைய முத்து மாலை தாமிரபரணி கரையில் விழுந்தது.

அம்மாலை ஜோதிப் பிழம்பாய் மாறி, கோடி சூரியனாய்ப் பிரகாசித்தது. அதனைக் கண்டு கண் கூசிய பேரருளாளர் ஒருவர் ஒரு மண் பாண்டத்தால் முகத்தை மறைத்துக் கொண்டு சென்று முத்து மாலையை மூடிவிட்டார். சீதா தேவியின் பொன்னொளியை மூடிவிட்டார். சீதா தேவியின் பொன்னொளியில் தோன்றிய அந்த முத்துமாலையே குரங்கணி முத்து மாலை அம்மனாக பூஜிக்கப்படுகிறது.

துளசிதாசர் எழுதிய ராமாயணத்தில் சீதா தேவியை ராவணன் சிறை எடுத்துச் சென்றபோது மாயாசீதா தேவிதான் இலங்கைக்குச் சென்றாள். உண்மையான சீதா தேவி மறைந்தாள் என்கிறார்.

மறைந்த உண்மையான சீதா தேவி இங்கே குரங்கணியில் குரங்கணி அம்மனாக ஜோதி வடிவாய் ஆனாள் என்று குரங்கணி முத்து மாலை அம்மன் தலபுராணம் கூறுகிறது.

- ருக்மணி, சிதம்பரம்

## கடையநல்லூர் ஆஞ்சநேயர்

தென்காசிக்குத் தெற்கே மதுரை மெயின் ரோட்டில் உள்ள கடையநல்லூர், இஸ்லாமியர் அதிகம் வாழும் பகுதியாக இருந்தாலும் குளக்கரையில் உள்ள ஆஞ்சநேயர் கோவில் மிகவும் பிரசித்தி. மற்ற கோவில்களில் கூப்பிய கைகளுடன் ராமபக்தராக காட்சியளிக்கும் ஆஞ்சநேயர் இங்கே நம்மைக் காக்கும் மாவீரனாகக் காட்சி அளிக்கிறார். இங்குள்ள விவசாயிகள் அறுவடை செய்த நெல், கரும்பு,

## கடவுளுக்கே கல்யாண பத்திரிகை!

ஸ்ரீ கைலாச நாதர் சமேத நித்திய கல்யாணி அம்மன் ஆலயம் கடையத்தில் வயல்களுக்கு இடையே கம்பீரமாக அமைந்துள்ளது.

திருமணமான மாப்பிள்ளையும் பெண்ணும் தம்பதி சமேதராக ஸ்ரீ

லாசநாதர் சமேத நித்திய கல்யாணி அம்மனைத் தரிசித்த பின்பே இல் வாழ்வைத் துவங்குகின்றனர். இதேபோல் திருமணம் நிச்சயமாகி பத்திரிகை வந்தவுடன் அதை திரு கைலாசநாதர், திருமதி நித்திய கல்யாணி என்று எழுதி முதல் அழைப்பை கடவுள் சன்னதியில் வைக்கும் வழக்கமும் உள்ளது!

இக்கோவிலில் உள்ள விருட்சமான வில்வ மரத்தில் காய்க்கும் வில்வங்காய்களை உடைத்தால் உள்ளே சிவலிங்க வடிவம் இருப்பதும் அதிசயம்.

'காணி நிலம் வேண்டும் பராசக்தி' என்று முண்டாசுக் கவியைத் தட்டி எழுப்பியதும், நித்திய கல்யாணி தான். பிராமணர் அல்லாதவர்க்குப் பூணூல் அணிவித்து பிராமணர்களாக மாற்றிய பாரதியை ஊரே ஒதுக்கியபோது அவர் மனைவி செல்லம்மா கணவருக்கு உணவு வழங்கியது இவ்விடத்தில்தான்.

- ஜெனக சங்கரி,
கோவை

## உலகுக்கு அன்னை; ஊருக்கு மகள்!

திருநெல்வேலிக்கு மேற்கே 50 கி.மீ. தூரத்தில் அமைந்துள்ள கீழாம்பூர் கிராமத்தில் ஆண்டு தோறும் நடைபெறும் வசந்த அழைப்புத் திருவிழா வெகு சிறப்பு.

கீழாம்பூரில் வசித்த முதியவர் ஒருவரின் கனவில் உமையவள் தோன்றி, தான் கிணற்று நீரில் அமிழ்ந்து கிடப்பதாகவும், தன்னை மீட்டு சிவசைலத்திலுள்ள தன் கணவருடன் சேர்த்துவிடுமாறும் கூறி மறைந்தாள்.

மறுநாள், தெருவின் நடுவில் இருந்த கிணற்றில் இறங்கித் தேட, எழில் கொஞ்சும் அன்னையின் சிலை கிடைத்தது.

கீழாம்பூருக்கு மேற்கே 3 கி.மீ. தூரத்திலுள்ள சிவசைலத்தில் பசு ஒன்று தினமும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் பால் சொரிவதாக ஒருவர் சொல்ல, அந்த இடத்தில் தோண்ட, அழகிய சிவலிங்கம் ஒன்று கிடைத்தது. அன்னையையும் அப்பனையும் பிரதிஷ்டை செய்து அங்கு ஒரு கோவில் கட்டினர். அன்னையின் பெயர் பரம கல்யாணி. சுவாமியின் பெயர் சிவசைலபதி. மேற்கு நோக்கியிருக்கும் கோவிலில் அமர்ந்து அருள்பாலிக்கும் தெய்வங்கள்.

கீழாம்பூரிலுள்ள கிணற்றிலே பிறந்ததால் பரம கல்யாணியை இந்த ஊர்ப் பெண் என்றே ஊர் மக்கள் கருதுகின்றனர். சிவசைலபதி இந்த ஊர் மாப்பிள்ளை!



• செல்வமாதா கோவில்

ஆண்டுக்கு ஒரு முறை பெண்ணையும் மாப்பிள்ளையையும் தங்கள் ஊருக்கு அழைத்து விருந்து வைக்கிறார்கள். வசந்த காலத்தில் நடைபெறும் இந்த விழா தான் வசந்த அழைப்புத் திருவிழா. மக்கள் முகமெல்லாம் ஒரே மகிழ்ச்சி. பரம கல்யாணியின் முகத்தில் அதை விட மகிழ்ச்சி. பிறந்த வீட்டிற்கல்லவா வந்திருக்கிறாள்?



• சிதைந்த ஆலயம்

மூன்றாம் நாள் எல்லா வைபவங்களும் முடிந்து சப்பரத்தில், சைலபதியும் கல்யாணியும் சிவசைலத்திற்குக் கிளம்ப, ஊர் எல்லையில் வழியனுப்ப ஊர் மக்கள் கூடியிருப்பார்கள. கண்களில் நீர் வழிய விடை கொடுக்கும் காட்சி திருமணமாகி கணவன் வீடு செல்லும் மகளைத் தாய் வழியனுப்புவதுபோல் உணர்ச்சிகரமாக இருக்கும்.

- ஆர்.அனந்தராமகிருஷ்ணன்,
நெல்லை

## பிராமணப் பெண்மணி எழுப்பிய தேவாலயம்

தஞ்சை மராட்டிய மன்னர் பரம்பரையைச் சேர்ந்த கோகிலா என்னும் பிராமணப் பெண்மணியின், கணவன் இறந்துவிடவே உடன்கட்டை ஏறத் தயாராக இருந்தார். அப்போது 'ஹென்றி லிட்டில் டன்' என்ற ஆங்கில படையதிகாரி, அவரை சதிக் கொடுமையிலிருந்து மீட்டுச் செல்லவே, சதி நெருப்பிலிருந்து தப்பித்து வந்த அவளை ஏற்க, வைதீக பிராமண சமுதாயம் மறுத்து விட்டது. அந்தப் படை அதிகாரியுடன் தமது மிச்ச வாழ்நாளைக் கழித்த, கோகிலாவுக்கு, கிறிஸ்தவ நெறி மீது நாட்டம் ஏற்படவே, 'கிளாரிந்தா' ஆனார். சூலை நோயால் பாதிக்கப்பட்ட ஹென்றி லிட்டில் டன் தமது சொத்தையெல்லாம், கிளாரிந்தா பேரில் எழுதி வைத்துவிட்டு, இறந்து போகவே, கிளாரிந்தா இறைப் பணியில் மிகவும் ஈடுபாடு கொண்டார்.

பின்னாளில், பாளையங்கோட்டையில், தமது சொந்தச் செலவில் கிருத்துவ ஆலயத்தை நிறுவி தொண்டாற்றினார். நாற்பது பேர் கொண்டு ஆரம்பிக்கப்பட்ட இந்தத் திருச்சபை இன்று திருநெல்வேலி புராடெஸ்டன்ட் திருச்சபையாக இலட்சக்கணக்கான உறுப்பினர்களுடன் ஆல்போல் திகழ்கிறது.

- டேவிட் பாக்கியமுத்து,
திருநெல்வேலி

"ரத்த விருத்திக்குத்தான் டானிக் கேட்பாங்க... நீங்க கண்ணீர் விருத்திக்கு டானிக் கேட்கிறீங்களே..?"

"இப்பல்லாம் மெகா சீரியல் பார்க்கும் போது தாரைதாரையா அழ முடியலே டாக்டர்.."

- தஞ்சை தாமு



## ஜலதோஷ நாதர்

குற்றலாத்தில் குற்றாலநாதருக்கும் அம்மனுக்கும் நான்தோறும் சுக்குக்காப்பியை நைவேத்தியம் செய்கிறார்கள். எந்நேரமும் கொட்டிக் கொண்டே இருக்கும் குற்றால அருவி அப்பன் அம்மன் இருவர் தலையிலும் விழுவதாக ஐதீகம். இப்படி எந்நேரமும் தலையில் தண்ணீர் கொட்டிக் கொண்டே இருப்பதால் சிவ சக்திக்கு சளி, காய்ச்சல் என்று வந்து விடக் கூடாது அல்லவா. அதற்காகத் தான் சுக்குக் காப்பி.

- ஆர். ஜெயலட்சுமி

## செல்வமாதா கோவில்!

உவரி என்ற நெய்தல் நிலப்பகுதி, கிறிஸ்வதர்களுக்கும், இந்துக்களுக்கும் புனிதமான தலமாகத் திகழ்கின்றது. கத்தோலிக்க மக்கள் வாழும் உவரி வரலாற்றுப் புகழ்மிக்கது. முற்காலத்தில் 'ஓபீர்' என்று அழைக்கப்பட்டு, பைபிளில் இடம் பெற்றுள்ளதாகச் சொல்கிறார்கள். இன்றும் புனித அந்தோணியார் திருத்தலமாக விளங்குகின்றது. இதே ஊரில், பிரபலமான மூன்று தேவாலயங்கள் உள்ளன. 'செல்வமாதா' கோயில், உலகில் வேறு எங்குமில்லாத கட்டடக் கலையழகுடன், கடற்கரையோரத்தில் காண்போரைக் கவர்ந்திழுக்கும் தன்மையில் அமைந்துள்ளது. இந்த ஆலயத்தின் கீழ்ப் பகுதி கப்பல்; மேல் பகுதி விமானம் போன்ற வடிவமைப்பில் உருவாக்கப்பட்டுள்ளது.

- கலாபன் வாஸ்,
தூத்துக்குடி



# SRI CHANDRASEKARENDRA SARASWATHI BHAKTHA JANA TRUST (Regd)

New No.12, Old No. 69, Moorthy Street,
West Mambalam, Chennai-600 033.
Ph: 4748265, 3711971

சாக்ஷாத் பரமாத்மாவும் கைலாஸபதியும் ஸர்வேஸ்வரரும் ஈரேழு புவனச் சக்ரவர்த்தியும் பரம கருணாமூர்த்தியும் வாரி வழங்கும் பெரு வள்ளலும் ஸ்தாப்தி மஹோத்ஸவ மூர்த்தியும் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜகத்குரு ஆனந்த நடராஜ மூர்த்தியுமான ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ மஹா பெரியவாளின் பேரனுக்ரஹத்தினாலும், பெருங்கருணா க்ருபாகடாக்ஷத்தாலும் லோக க்ஷேமார்த்தமாகவும் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ மஹாபெரியவாளின் ஜன்ம நக்ஷத்ரமான ஸ்ரீ அனுராதா புண்யதினத்தில் (அனுஷம்) ப்ரதி மாதமும் மேற்கண்ட ட்ரஸ்டின் ஆதரவுடன் கோபூஜை, ஆவஹந்தி ஹோமம், ஸுவாஸினி பூஜை, அன்னதானம் ஆகியவை சிறப்பாக கடந்த 10 வருஷமாக நடந்து வருகின்றது. மேலும் அன்றைய தினம் மாலையில் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ மஹா பெரியவாளின் திருவீதிவலம் ரிஷப வாகனத்தில் வேத பாராயணம், தேவாரம், மங்கள வாத்யத்துடன் இனிதே நடைபெற்று வருகின்றது. இந்த மகத்தான புண்ய கைங்கர்யத்திற்கு ப்ரதிமாதமும் குறைந்த பக்ஷம் ரூ. 6,000 (ரூபாய் ஆறாயிரம்) தேவைப்படுகின்றது.

இந்த கோலாகலமான வைபவத்தை ஸாஸ்வதமாய் நடத்த ரூ. 6,00,000 (ரூபாய் 6 லட்சத்தில்) ஒரு வைப்பு நிதி ஏற்படுத்தி அதன் மூலம் கிடைக்கும் காணிக்கையை வைத்துக் கொண்டு ப்ரதி மாதந்தோறும் அடியார்களின் சீரிய துணை கொண்டு நடத்தலாம் என உத்தேசம். காஞ்சிமாதெய்வத்தின் அடியார்களாகிய நாம் இந்த மகத்தான கைங்கர்யத்தில் நம்மை அர்ப்பணித்துக் கொண்டும், உதவிகள் புரிந்தும், உடன் இருந்து ஒத்துழைப்பதும் நமது பெருங்கடமையாகும். இந்த வைப்பு நிதிக்கு குறைந்தது ரூ. 600 அளித்து ஆதரவு தரும்படி அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். அப்படிக் காணிக்கை அளிப்பவர்கள் கோரும் மாதத்தில் வரும் அனுராதா புண்ய தினத்தில் அவர்களின் குடும்ப க்ஷேமத்தை முன்னிட்டு ப்ரத்யேகமாக ஸங்கல்பம் செய்து நேரிலோ அல்லது தபாலிலோ ப்ரஸாதம் அனுப்பி வைக்கப்படும்.

இந்த மகத்தான வைபவத்தில் கலந்து கொண்டு ஸத்ய ஸாஸ்வத பரம்பொருளான கலியுகக் கண் கண்ட தெய்வமான ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ மஹாபெரியவாளின் பேரனுக்ரஹத்தை பெற வேண்டுமாய் கேட்டுக் கொள்கிறோம்.

*நன்கொடைகள் அனுப்ப வேண்டிய முகவரி :*
*ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி பக்தஜன ட்ரஸ்ட்*
**69,** *மூர்த்தி தெரு, மேற்கு மாம்பலம், சென்னை -* **600 033.**

நன்கொடைகள் வருமானவரிச் சட்டம் **80-G** யின்படி வரிவிலக்கு பெறப்பட்டது.

காஷ்மீர் மக்கள்



2002 ஜூன் 2
சித்ரபானு வைகாசி 19
மலர் : 60
இதழ் : 44

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## போர் மேகங்கள்!

போர் மேகங்கள் சூழும் இந்த சோதனையான நேரத்தில் நமது தலைவர்கள் பலர் உணர்ச்சிகளைத் தூண்டும்வண்ணம் பேசி வருகிறார்கள். ஆனால் இந்தியாவுக்கு வந்துள்ள இரானிய அயலுறவுத் துறை அமைச்சர் கமால் கர்ராஜி நிதானத்துடன் நடுநிலையாகப் பேசியிருக்கிறார் :

"மிக விரைவில் இந்தோ-பாகிஸ்தான் பேச்சு வார்த்தைகள் நடைபெற வேண்டும். அப்போதுதான் துணைக்கண்டத்தில் நிலவும் பதற்றம் குறைந்து அமைதி திரும்ப முடியும். எல்லைப் பிரச்னை என்பது ஒரு விஷ வட்டம். ஒருவர் தாக்குவதும் மற்றொருவர் எதிர்த்தாக்குதல் நடத்துவதுமாக அது முடிவின்றித் தொடர்ந்து கொண்டே போகும் வாய்ப்பு இருக்கிறது. உரையாடல் மூலம் காணப்படும் அரசியல் தீர்வுதான் பதற்றத்தைப் போக்கி நிரந்தர அமைதிக்கு வழிவகுக்கும்."

· இந்த அறிவுரையை ஏற்கும் நிலையில் இன்று இந்திய அரசு இருப்பதாகத் தெரியவில்லை. மேற்கு எல்லைக்கான விமானப் படைத் தலைவரை நியமித்து, கடலோரக் காவல் படை, மத்திய ரிசர்வ் போலீஸ் ஆகியவற்றை ராணுவத்தின் கட்டுப்பாட்டுக்கு மாற்றி, பாகிஸ்தான் தூதரைத் திருப்பியனுப்பி, ராணுவத்தினரின் விடுமுறைகளை ரத்து செய்து, பாகிஸ்தான் தாக்குதல் எந்நேரமும் நிகழலாம் என்பது போன்ற தோற்றத்தை ஏற்படுத்தியிருக்கிறது.




இந்தச் சூழ்நிலையில் பாக். அதிபர் முஷாரஃப், ஐ.நா. சபையை அணுகப் போவதாகக் கூறியும் இந்தியாவைப் பேச்சு வார்த்தைக்கு மீண்டும் அழைத்தும் நல்ல பெயரைத் தட்டிக் கொள்ளப் பார்க்கிறார்.

இந்தியாதான் போருக்கு முண்டா தட்டுகிறது என்பது போலவும் பாகிஸ்தான் அதை விரும்பவில்லை என்பது போலவும் உலக அரங்கில் ஒரு மாயத் தோற்றம் ஏற்பட்டு வருகிறது.

ஜம்மு ராணுவ முகாமில் தற்கொலைப் படையினர் நுழைந்து படுகொலைகளைச் செய்தவுடனேயே அதற்குப் பாகிஸ்தானைப் பொறுப்பாக்கி, பாகிஸ்தான் வசமுள்ள காஷ்மீரில் பயங்கரவாதப் பயிற்சி மையங்களைத் தாக்க அரசு உத்தரவிட்டிருக்க வேண்டும். அவ்வாறு செய்திருந்தால் அதை யாரும் குறைகூறவோ விமர்சித்திருக்கவோ முடியாது. 'தற்காப்பு' என வாதிட்டிருக்கலாம். ஆனால், அதைச் செய்ய மத்திய அரசு தவறி விட்டது. நாடாளுமன்றத்தைக் கூட்டி, கண்டனத் தீர்மானம் நிறைவேற்றி, 'நாங்கள் சும்மாயிருக்க மாட்டோம்' என்று பாகிஸ்தானுக்கு மிரட்டல் அறிக்கை விட்டு, எதிர்க்கட்சித் தலைவருடன் கலந்தாலோசித்து, பாதுகாப்பு அமைச்சர் உடன்வர ஜம்முவுக்குப் போய் வருவது என்று முடிவு செய்து... பிரதமர் தமது சிந்தனையைச் செயல்படுத்துவதற்குள் காஷ்மீரில் மற்றொரு அமைதி விரும்பி கொலை செய்யப்பட்டு விட்டார்!

கொலையுண்ட ஹுரியத் தலைவர் அப்துல் கனி லோன், காஷ்மீரில் அமைதி திரும்பிய பிறகே தேர்தல்கள் நடத்தப்பட வேண்டும் என்று கூறி வந்தவர். அவரது மறைவு குறித்து வருத்தம் தெரிவித்த பிரதமர், "அமைதி முயற்சிகள் தொடரும்" என்று ஒருபுறம் சொன்னாலும் இன்னொருபுறம் ராணுவ ஆயத்தங்கள் துரிதமாக நடைபெற்று வருகின்றன.

இந்தச் சூழல் இந்திய மக்களின் மனத்தில் போர் குறித்ததொரு எதிர்பார்ப்பைத் தூண்டுவதாகவே இருக்கிறது.

இன்னொரு இந்தோ-பாக் போர் என்பது எத்தகைய விளைவுகளை ஏற்படுத்தும் என யோசிக்க வேண்டும்.




● உயிர்கள் பலியாகும்.

● நவீன ஏவுகணைகளில் பொருத்தப்பட்ட அணு ஆயுதங்களை உபயோகிப்பதால் சேதம், தாக்கப்பட்ட இடங்களைத் தாண்டி விரியும்; சேதத்தின் விளைவுகள் அடுத்து வரும் தலைமுறைகளையும் நோகடிக்கும்.

● காஷ்மீர் பிரச்னை மேலும் சிக்கலாகி, காஷ்மீர் மக்களின் வாழ்விலும் மனத்திலும் அமைதியென்பதே அடியோடு இல்லாது போகும்.

● போரின் முடிவு எப்படி அமைந்தாலும், பாகிஸ்தானுடனான நமது உறவு மேம்படுவதற்குப் பதிலாக மேலும் மோசமடையும். அதன் விளைவாக பாதுகாப்புச் செலவுகளை அதிகரிக்க வேண்டிவரும்.

● போர் காரணமாக விளையும் கூடுதல் செலவுகளைத் தாங்கும் சக்தியின்றி, ஏற்கெனவே நலிவுற்றிருக்கும் நாட்டின் பொருளாதாரம் நாசமடையும்.

இந்த விளைவுகளை ஏற்படுத்தப் போகிற யுத்தத்தைத் தொடங்க வாஜ்பாய் அரசு முடிவு செய்யு மானால், அச் சந்தர்ப்பத்தில் தேசமே திரண்டு நின்று நம் ஜவான்களை ஆதரிக்கும் என்பதில் சந்தேகமில்லை.

ஆனால் யுத்தத்துக்கான அவசியத்தைக் காட்டிலும் அமைதிப் பேச்சு வார்த்தைக்கான அத்தியாவசியத் தேவையே இன்று நாட்டை நெருக்குகிறது. அரசியல் நிர்ப்பந்தங்களையும் மத உணர்வுகளையும் களைந்து விட்டு, இந்தோ-பாக் பிரச்னையை அணுகுவதுதான் விவேகம். இதே சந்தர்ப்பத்தில் காஷ்மீர் பிரச்னை குறித்து அம்மாநில மக்களிடமே கருத்து கேட்பதும் நல்லது. இவற்றைச் செய்யாத வரையில், யுத்தம் உள்ளிட்ட எந்த நடவடிக்கையும் பிரச்னைக்கு நிரந்தரத் தீர்வாகாது; அமைதிக்கு வழிவகுக்காது. ஆனால் இந்த அணுகுமுறையை ஏற்று ...மதிக்கு வழிவகுத்தாலோ, இந்தியா - பாகிஸ்தான் ஆகிய இரு நாடுகளிலும் வளம் பெருகும்.

சுபிட்சப் பாதையா? பொருளாதாரச் சீர்குலைவா என்பதைப் பிரதம...




✉ 'பெண்களுக்கு என்று தனியாக நூலகம் இல்லை. தேவைப்பட்டால் அரசு பரிசிலிக்கும்' என கல்வி அமைச்சர் தம்பிதுரை பேசியதற்கு, நகைச்சுவையாக பதில் கூறியிருக்கிறார் தராசு. திருவல்லிக்கேணி, பெல்ஸ் ரோடு, கஸ்தூரி பாய் ஆஸ்பத்திரிக்கு எதிரில், பெண்களுக்காக மட்டுமே கிளை நூலகம் ஒன்று, பல வருஷங்களாகச் செயல்பட்டு வருவது மாநில கல்வி அமைச்சருக்குத் தெரியாமல் போனது ஆச்சர்யம்தான்.
சென்னை, கணேசன்

✉ சமுதாய வீதியில் இன்னும் எத்தனை எத்தனை 'சுமதி'களோ? 'மூத்தவள்' சிறுகதை மனத்தைக் கனக்கச் செய்தது...
போடி, எஸ்.எம்.பாலசுப்ரமணியன்

✉ '(அம்)மாபெரும்' நிகழ்வுகளைத் தொகுத்தளித்த உமக்கு 'புள்ளி விவரப்புலி' என்ற பட்டம் கொடுக்கிறோம்!
சீனிவாசபுரம், சுபா

✉ அதென்ன சார், 'அம்மா 365' அலசல் ரிப்போர்ட்ல அவ்ளோ கரும்புள்ளிங்க? கல்கி சார்பா அம்மாவுக்குத் திருஷ்டி கழிச்சீங்களோ?
ஆதமங்கலம்புதூர், சண்முகம்

✉ சிற்பியின் பின்னணி இசை தவிர, படத்தைப் பற்றி ஒவ்வொரு வரியிலும் பாராட்டி எழுதிவிட்டு, 'வருஷமெல்லாம் வசந்தம்' படத்தை ஆவரேஜ் என விமரிசித்திருக்கும் விஷ்ணுவல்தாசனை, நல்ல காது நிபுணரிடம் காட்டுங்கள்.
வேலாயுதம்பாளையம், எம்.சம்பத்

✉ சூடும் - சுவையும் கலந்த மிளகாய் பஜ்ஜி போலிருந்தது வை.கோ. பதில்கள்.
தோட்டப்பாளையம், கே.வெங்கடேசன்

✉ 'சினி சிப்ஸ்' செய்திகள் ஒவ்வொன்றும் தேனில் விழுந்த பலா.
திருப்பூர், சிவக்குமார்பிரபு

✉ இந்திய ரயில்வே பற்றிய தகவல்கள் படுசுவாரஸ்யம். கௌஹாத்தி எக்ஸ்பிரஸ் 'லேட் பங்சுவாலிட்டி'யின் மூலமாக ரயில்வேயின் பாரம்பரியம் பாதுகாக்கப்பட்டு வருவது பெருமைக்குரிய விஷயம் தான்!
திருச்சி, ஆர்.அப்துல் சலாம்

✉ தலையங்கம் படித்தேன். மிக அத்தியாவசியமான உணவுப் பொருட்களுக்குப் பலமுனை வரி விதித்திருப்பதால் மக்கள் படும் கஷ்டத்தை எடுத்துக்காட்டியுள்ளீர்கள். இனியாவது வரி விதிப்பில் சலுகை காட்டி பொது மக்களை நிம்மதிப் பெருமூச்சு விட வைக்குமா அரசு?
கோவை, டி.ஜெய்சிங்

✉ சாட்டை கையிலேந்தி ஜெ. காட்சி அளிக்கிற கார்ட்டூன் நல்ல 'சாட்டயர்'.
அயன்புரம், த.சத்தியநாராயணன்

✉ அரஸ்-ஸின் அரசி படம் அமர்க்களம். 365 நாட்களில் 222 முக்கிய நிகழ்ச்சிகள் படித்து முடித்தவுடன் மக்களின் மனத்தில் நீராவி இன்ஜின் ரயில் புகை போல ஏக்கப் பெருமூச்சு தான் வருகிறது.
மணப்பாறை, து-ஆனந்தி ராஜா

✉ 'அம்மா'வின் ஆட்சிக் கால சம்பவங்களில் 'கரும்புள்ளி'களாய் வைத்தது சிம்பாலிக் சிறலோ?
திருநெல்வேலி, குறுங்கை சி.சீனு

✉ மலேஷிய மண் வாசக் கதை 'ஆசைப்புறா' உணர்ச்சி சொல்லோவியம்.
மதுரை, மு.க. ராம்சாமி





● ஆஸ்திரேலிய 'டிங்கோ' வகை நாய்க்கு குரைக்கத் தெரியாது!

● ஜப்பானில் நாய்களுக் குக் கூட வங்கியில் சேமிப்பு கணக்கு உண்டு.

● பசுமாட்டுக் காம்பில், ஆட்டுக் காம்பில் ஒரு துளைதான் இருக்கும். ஆனால் யானையின் பால் காம்பில் எட்டுத் துளைகள் இருக்கும்.

— சிவ. கலாதரன், சிதம்பரம்.



# "தேகாக்ணாவீ தைத்லகா"



மைசூர் நகரில் உள்ள பலருக்கு பண்டிதப்பாவைத் தெரியும். எப்படி? ஒரு மொபெட் வாகனத்தில் ஊரைச் சுற்றி வந்து ஊதுவத்தி, ஆயுர்வேத மருந்துகள் இவற்றை விற்பனை செய்யும் ஒரு வித்தியாசமான வியாபாரி. மொபெட்டில் போகும்போதே கையில் ஒரு மைக் வைத்துக் கொண்டு ஜோக்குகள், தமாஷ் பேச்சு என மக்களை ஈர்க்கிறார். பண்டிதப்பாவுக்கு எட்டு மொழிகள் தெரியும் இவருக்கு எழுபது வயசு. 50 வருஷங்களாக இந்த பிசினஸ்தான்!

— அனிதா ராமச்சந்திரன்

● திருமண மோதிரங்களை எகிப்திய நாட்டினர் தான் முதன் முதலாகப் பயன்படுத்தியவர்கள். அவர்களுடைய ஆதி மொழியில் மோதிரத்துக்கு 'என்றும் நிலையானது' என்று பொருள் படும் பெயர் உண்டு. இருதயத்திலிருந்து ஒரு நரம்பு நேராக இடது கையின் மூன்றாவது விரலுக்குச் செல்கிறது என்று ரோமானியர்கள் நம்பினார்கள். அதனால் தான் இன்றும் திருமண மோதிரம் இடது கையின் மூன்றாவது விரலில் அணியப்படுகிறது.

— ஆர். மகாதேவன், திருநெல்வேலி டவுன்.



**கோ**டை விடுமுறைக்கு ஒரு நாள் பயணமாக உதக மண்டலம் சென்று வந்தோம். எண்ணற்ற மக்கள் கூட்டம். படகு இல்லம், சிறுவர் பூங்கா, ரோஸ்கார்டன், தாவரவியல் பூங்கா என ஆனந்தத் திளைப்பில் மக்கள்... மக்கள்...

பசுமை பரப்பிய தாவரவியல் பூங்காவில் எந்த இடத்தும் பிளாஸ்டிக்கின் அவலம் இல்லை. பிளாஸ்டிக் இல்லாத நகரமாக ஊட்டி மாறித்தான் வருகிறது. சுற்றுலாத் துறையின், மாவட்ட நிர்வாகத்தின் சீரிய முயற்சிக்கு முழு ஒத்துழைப்பு நல்கிடும் சுற்றுலா பயணிகளுக்கு மனம் திறந்து அள்ளி வழங்குவோம் பாராட்டுகளை.

சத்யமங்கலம் ஆர். ரத்னசாமி



● கடலிலே பிறந்த உப்புக்கும் மலையிலே பிறந்த நார்த்தங்காய்க்கும் உறவுண்டு.

— பொன்மொழி

முகவை முத்துசாமி,தொண்டி.

தஞ்சாவூரிலிருந்து ஆறு கிலோ மீட்டர் தூரத்தில் புன்னை நல்லூர் என்ற சிற்றூரில் ஸ்ரீ கோதண்டராமர் கோயில் அமைந்துள்ளது. மிக அழகான, புராதனமான கோயில். இந்தக் கோயிலின் விசேஷம் — மூலவிக்ரஹங்கள் சாலிக்ராமக் கல்லினால் ஆனவை. ஸ்ரீராமர், லக்ஷ்மணர், சீதாதேவி, சுக்ரீவன் ஆகிய திருஉருவங்கள் மூல விக்ரஹங்களாகப் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளன. ஆஞ்சநேயருக்குப் பதிலாக சுக்ரீவன் என்பது ஒரு தனிச் சிறப்பு. உத்ஸவமூர்த்திகளில் ஆஞ்சநேயர் இருக்கிறார். நேபாள மன்னர், தஞ்சை மராட்டிய மன்னரான, பிரதாப்சிங் (கி.பி.1739 - 1763)குக்கு அன்பளிப்பாக அளித்தவை, இந்த சாலிக்ராமக் கற்கள். வெகு அற்புதமான திருஉருவங்கள்!

— விஜயா ராஜன்

**வி**ரைந்து முன்னேற
மந்திரம் ஒன்று கேட்டேன்.
மகானிடம் -
''தேகாக்ணாவீ தைத்லகா'',
எனும் இம்மந்திரத்தை
திருப்பிச் சொல்,
தினமும் கடைப்பிடி,
உலகம் உன் உள்ளங்கையில்'',
என்றார்.
அட, ஆமாம்,
திருப்பிச் சொல்ல,
''காலத்தை வீணாக்காதே'' என
ஆனதே அம் மகாமந்திரம்.
முன்னேற்றத்தின் தாரக மந்திரம்!

— லட்சுமி ரகு குமார்



**அ**ங்கே, இங்கே என்று சுற்றி, பொழுதை வீணாக்குவது மகாத்மா காந்திக்குப் பிடிக்காது. ஒரு சமயம் அவர், கர்னாடகா மாநிலத்தில் உள்ள ஷிமோகாவுக்குச் சென்றிருந்தார். அவருடன் அவரது நண்பர் காகாகலேல்கர் சென்றிருந்தார். அவர் காந்தியிடம், "ஜெர்ஸப்பா நீர்வீழ்ச்சியைப் போய்ப் பார்க்க வேண்டும், இந்தியாவின் உயரமான நீர்வீழ்ச்சி அது" என்றார். அவரைப் பார்த்து, 'அதை விடப் பல மடங்கு உயரத்திலிருந்து விழும் நீர்வீழ்ச்சி ஒன்றை நான் பார்த்திருக்கிறேன்" என்றார் காந்தி. "அப்படியா! எங்கே பார்த்தீர்கள்" என்று நண்பர் ஆச்சர்யமாய்க் கேட்க, "மழைதான் அந்த நீர்வீழ்ச்சி!" என்றார் காந்தி!

— ஆர். சாரதா, சென்னை — 36.

"உனக்கொரு பொருளைத் தரணும்னு நினைக்கும் போதே மனசு சந்தோஷப்படுது.. அந்தப் பொருளை உனக்குத் தந்த பிறகு எவ்வளவு ஆனந்தப்படுறேன் தெரியுமா."

# யோகி

இரண்டு நாளாக மோதிரத்தைக் காணவில்லை. எங்கு வைத்தேன் என்று தெரியவில்லை... குளிக்கும் போது கழற்றி வைத்து விட்டு குளிக்கப் போனதாய் ஞாபகம். குளித்து விட்டு வந்து காலை நேர பர பரப்பில் மோதிரத்தை மறந்திருந்தேன். சுந்தரையும், குழந்தையையும் அனுப்பி விட்டு டீவி போட்ட போது தான் மோதிரம் விரலில் இல்லாத ஞாபகம் வந்தது. தேடினேன். எங்கே வைத்தேன்?

சுந்தருக்குத் தெரிந்தால் நன்றாகத் திட்டப் போகிறான். "விரல்லே இருக்கிற மோதிரத்தைக் காணோம்னு



சொல்றே. அவ்வளவு அஜாக்கிரதையா" என்பான். அவன் நல்ல மூடில் இருந்தால் இலேசாகத் திட்டிவிட்டுப் போய் விடுவான். ஏற்கெனவே கோபத்தில் இருந்து, நான் மோதிரம் தொலைத்தது தெரிந்தால் திட்டித் தீர்த்து விடுவான்.

அவன் திட்டுவான் என்பதற்காகக் கூட வருந்தவில்லை. உண்மையாகவே அந்த மோதிரத்தை இழந்ததற்காக வருந்துகிறேன். அது காதல் சின்னம். சுந்தரைக் காதலித்து தான் மணந்தது...



# காதல் சின்னம்

காதலித்த நாட்களில் அவன் கொடுத்த பரிசு... காதலிக்கத் துவங்கி இரண்டு வருடம் கழித்துத்தான் அந்த மோதிரத்தைப் பரிசளித்தான்.

பரிசளிக்கும் போது சொன்னான், ''நான் உன்னோடு பழக ஆரம்பிச்சதுமே உனக்கு மோதிரம் போடணும்னு நினைச்சேன். ஆனா பணம் இல்லே. தங்க நகைச் சீட்டுல சேர்ந்தேன். சிறுகச் சிறுகச் சேர்த்துத்தான் இந்த மோதிரம் வாங்கினேன்'' என்றான்.

''உங்களைக் கஷ்டப்படுத்திக்கிட்டு எனக்கொரு மோதிரம் வேணுமா?'' என்றேன்.

''இதென்ன கஷ்டம்.. உனக்கொரு பொருளைத் தரணும்னு நினைக்கும் போதே மனசு சந்தோஷப்படுது.. அந்தப் பொருளை உனக்குத் தந்த பிறகு எவ்வளவு ஆனந்தப்படுறேன் தெரியுமா'' என்றான்.

''நீங்க மோதிரத்தைக் கொடுத்திட்டீங்க. இந்த மோதிரத்தை நான் வீட்டுல எப்படிப் போட்டுட்டு இருக்க முடியும்? யாருது.. உனக்கு எப்படிக் கிடைச்சதுன்னு கேட்டுத் துளைச்சிடுவாங்க'' என்றேன்.

''நகைச்சீட்டு போட்டேன். கிடைச்சுடுச்சுன்னு சொல்லு'' என்றான். அப்படித்தான் வீட்டில் சொல்லிச் சமாளித்தேன்.

பிற்பாடு இருவருமே அவரவர் வீட்டை விரோதித்துத் திருமணம் செய்து கொண்டோம். அந்த மோதிரத்தைப் பார்க்கும் போதெல்லாம் நாங்கள் காதலர்களாய், சுதந்திரப் பறவைகளாய்த் திரிந்த நாட்கள் நினைவுக்கு வந்தன. அந்த மோதிரம் இரண்டு கிராமில் செய்தது. இரண்டு பறவைகள் பறப்பது மாதிரி செய்யப்




"புது படத்துக்குத் தியேட்டர் ஓனர் எக்கச்சக்கமா டிக்கெட் விலையை உசத்திட்டார் போல..."

"எப்படி சொல்ற?"

"படம் பார்க்க ரசிகர்கள் தேவை'னு தியேட்டர்ல வாசல் போர்டு வைச்சுருக்கே!"

— அம்பை தேவா

---

பட்டிருக்கும்.

"நீயும் நானும்தான் அந்தப் பறவைகள்" என்பான் சுந்தர்.

அப்போது சுந்தரும், நானும் ஒரே கம்பெனியில்தான் பணிபுரிந்தோம். அது ஒரு மருந்து கம்பெனி. அவனுக்கு விற்பனைப் பிரதிநிதி வேலை. எனக்கு ஆபீஸில் வேலை. கல்யாணத்துக்குப் பிறகு குழந்தையைக் கவனித்துக் கொள்ள வேண்டி வேலையை விட்டு விட்டேன். கஷ்ட ஜீவனம்தான். எப்படியோ பொழுது ஓடிக் கொண்டிருந்தது.

காதலித்த நாட்களில் இருந்த சுந்தர் போல் இப்போது அவன் இல்லை. அப்போதெல்லாம் எது ஒன்று என்றாலும் என்னைக் கலந்தாலோசிப்பான். கல்யாணத்துக்குப் பிறகு எதையும் கலந்தாலோசிப்பதில்லை. எல்லாம் அவனுக்குப் பிடித்ததாகவே இருக்க வேண்டும். அந்த மோதிரத்தைப் பார்க்கும்போதெல்லாம், "பழைய சுந்தர் எங்கே?" என்ற ஏக்கம் தோன்றும்.

"நீயும் நானும்தான் அந்தப் பறவைகள்" என்று புன்னகை மலர சொன்ன சுந்தர் எங்கே... எனக்காகக் கஷ்டப்பட்டு பணம் சேர்த்து மோதிரம் வாங்கிக் கொடுத்த அந்த சுந்தர் எங்கே என்று நினைப்பேன். மனிதர்கள் மாறுகிறார்கள் என்பதை மட்டும் புரிந்து கொண்டேன்.

இரவு தூக்கம் வரவில்லை. மோதிரத்தின் ஞாபகமாகவே இருந்தேன். விரலில் எப்போதும் மோதிரம் இருந்ததால் இப்போது விரல் கூட, "என் மோதிரம் எங்கே..?" என்று கேட்பது மாதிரி இருந்தது. என் பொண்ணுக்கு அந்த மோதிரத்தைப் போட்டு அழகு பார்ப்பேன். அவளுக்கு ஐந்து வயதாகிறது. இன்னும் அவளுக்கு ஒரு கிராமில் கூட தங்க நகை செய்ய வில்லை.

குழந்தைக்கு என் மோதிரத்தைப் போடப் பிடிக்கும். சில சமயம் சுந்தர் குழந்தையின் விரலில் மோதிரம் இருந்தால், "நீ கெட்ட கேட்டுக்கு மோதிரம் கேட்குதா..." என்று குழந்தையை அடிக்க கை ஓங்குவான். அவனுக்குக் குழந்தை மீது பாசமில்லை. ரோட்டில் போன யாருடைய குழந்தையையோ எடுத்துக் கொஞ்சிய சுந்தரை எனக்குத் தெரியும். இப்போது அந்த சுந்தரைக் காணவில்லை.

மோதிரம் தொலைந்தது போன்று அவனும் தொலைந்து போய் விட்டானோ என்னவோ... "என்ன தூக்கம் வரலையா?.." என்று கேட்டான். மோதிரம் தொலைந்ததைச் சொல்லி விடுவோமா.. காலையில் குளிக்கும் போது பாத்ரூம் ஸ்டாண்டில் வைத்ததாய் ஞாபகம். ஒருவேளை சாக்கடைக்குள் போய் விட்டதா?

சில சமயம் சாமி அலமாரியில் வைப்பேன். அங்கேயும் இல்லை. வேறு எங்குதான் வைத்தேன்? ஒருவேளை குழந்தைக்குப் போட்டுப் பார்த்து விட்டு கழற்றி விட மறந்து விட்டேனா... எங்கே போச்சோ?

"என்ன ஒரு மாதிரியா இருக்கே உடம்பு சரியில்லையா?" என்று காலையில் சுந்தர் வேலைக்குப் போகும் போது கேட்டான்.

"அதெல்லாம் ஒண்ணும் இல்லை" என்றேன்.

"ஒண்ணும் இல்லேன்னா அப்புறம் எதுக்குப் பீடை பிடிச்சவ மாதிரி இருக்கே" என்றான் சுள்ளென்று... 'சுரீர்' என்றது.

நிச்சயம் மோதிரம் தொலைந்தது தெரியவந்தால் என்னைத் தொலைத்து விடுவான். "நான் சாப்பிடாம பட்டினிக்

கிடந்து சீட்டுப் போட்டுல அந்த மோதிரம் வாங்கிக் கொடுத்தேன். நீபாட்டுக்குத் தொலைஞ்சு போச்சுன்னு சொல்றே. வீட்டுலே சும்மா இருந்துட்டு திங்கற கொழுப்புதான்" என்பான்.

மோதிரம் எப்போது காணாமல் போனது என்று யோசிப்பது மாதிரி சுந்தரும் எப்போது அன்பாய்ப் பேசு வதைத் தொலைத்தான் என்று யோசிக் கிறேன். இரண்டுமே எப்போது தொலைந் தன என்று தெரியவில்லை.

திரும்ப ஒருமுறை வீட்டை அலசிப் பார்த்தேன். கிடைக்கவில்லை. பீரோவுக்கு அடியே, கட்டிலுக்கு அடியே, டீவிக்குப் பின்னே, மற்றும் அடுக்களை என்று சகல இடத்திலும் தேடினேன். கிடைக்கவில்லை. குழந்தையிடம் கூட கேட்டேன். நான் கேட்டது சுந்தரின் காதில் விழுந்திருக்க வேண்டும்.

"என்ன மோதிரம்.. மோதிரம்ங்கிறே" என்று கேட்டான். அவனிடம் சொல்லத் தயக்கமாய், பயமாய் இருந்தது. ஆனால் சொல்லித்தானே ஆக வேண்டும். வெகுநாள் கழித்து தெரியவரும் போது, "இவ்வளவு நாளா ஏன் சொல்லலை?" என்பான். அதற்கு வேறு திட்டு விழும். சொன்னேன்.

"உனக்கு ஒரு பொருளையும் பத்திரமா வைச்சுக்கத் தெரியாதே. சரி.. சரி.. நல்லா தேடிப் பாரு. எங்கே போகப் போகுது" என்று அவ்வளவாய்க் கோபப்படாமல், பட்டும் படாமல் பேசியதில் போன உயிர் திரும்ப வந்தது. ஆனாலும் மோதிரம் கிடைக்காதது பெரிய இம்சையாய் இருந்தது. காதல் சின்னம் இல்லையா?

மறுநாள் திரும்ப வீட்டைப் புரட்டிப் போட்டுத் தேடின போது, கசக்கிப் போட் டிருந்த ஒரு ரசீது கையில் தட்டுப்பட்டது. என்ன ரசீது...? விரித்துப் பார்த்தேன். அது ஒரு நகைக்கடை ரசீது. மோதிரம் ஒன்று விற்கப்பட்டதன் ரசீது. எடை இரண்டு கிராம். விலை எழுநூற்று எண்பது ரூபாய் என்று எழுதியிருந்தது. தேதி பார்த்தேன். என் மோதிரம் தொலைந்த அதே தேதி!

# கல்கி



## VBC Jewellery

*House of Vummidi*

• 78, G.N.Chetty Road, Vani Mahal Circle, (Opp. Hotel Residency), T.Nagar, Chennai - 600 017. ✆ : 8229556, 8229560

• 11-B, Nageswara Rao Road, Panagal Park, T.Nagar, Chennai - 600 017. ✆ : 4342407, 4346297

இணைந்து வழங்கும்

## புன்னகைப் போட்டி; பொன்நகைப் பரிசு!

### கற்பூர புத்தி தலைவா!

டிராஃபிக் போலீஸ்காரர்களுக்கு உதவும் வண்ணம் பரதநாட்டியத்தில் சில முத்திரைகளைச் சொல்லிக் கொடுக்கப் போகிறாராம் பத்மா சுப்ர மணியம். நம்ம ஊர் அரசியல்வாதி டியூஷன் படிப்பதாக இருந்தால், யாரிடம், என்ன பாடத்தை (அ) கலையை எப்படிக் கற்றுக் கொள்வார்? தமாஷாகக் கற்பனை செய்து நான்கு வரிக்கு மிகாமல் எழுதி அனுப்புங்கள். சிறந்த இரண்டு ஜோக்ஸுக்கு தலா நான்கு கிராம் தங்கம் பரிசு. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

**புன்னகைப் போட்டி - 16**

என்று குறிப்பிட்டு உங்கள் தமாஷ் ஜோக்ஸை எழுதி, முகவரியைக் குறிப்பிடுங்கள். தபால் உறை அல்லது தபால் கார்டில், கீழே உள்ள கூப்பனை வெட்டி ஒட்டி அனுப்புங்கள்.

கடைசி தேதி : **10.6.2002**



**ஆசிரியர், கல்கி,**
47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல்,
சென்னை - 600 097.

## முத்தான மனிதர்!

நெல்லை நகருக்கு நீங்கள் முதல்முறையாக வருகிறீர்களா? தொண்டர் சன்னதி முக்குப் பகுதியில் நீங்கள் உலவ நேர்ந்தால் ஓர் ஆச்சர்யம் கண்ணில் படும்! அது பிரத்யேக காண்டம் எம்போரியம். மும்பை, கொல்கத்தாவிலும்கூட ஆணுறைகளுக்கு என தனிக் கடை கிடையாதாம். இப்படியொரு கடையைத் தொடங்கி நடத்தி வரும் அந்தத் துணிச்சல்காரர் பி.காம் பட்டதாரியான முத்துஸ்வாமி.

''லாபம் குறைவாகக் கிடைத்தாலும், விழிப்புணர்வு ஏற்படுத்த முடிகிறது என்பதே எனக்கு நிறைவு தருகிறது'' என்று சொல்லும் இவரது சேவையைப் பாராட்டி, மத்திய அரசு நிறுவனமான ஹிந்துஸ்தான் லேடக்ஸ் 'எக்ஸெலன்ஸ் அவார்டு' வழங்கி கௌரவித்திருக்கிறது.



மெட்ரோ மசாலா



மேலப்பாளையம் பகுதி. ஐந்து வயது குழந்தைகள் முதல் எழுபது வயது சீனியர் சிடிஸன் வரை எல்லோர் கையிலும் தெருவுக்குத் தெரு, திண்ணைக்குத் திண்ணை பீடிகள். பீடிகள், பீடிகள்தான். மொத்தம் 186 தெருக்கள். பாளையங்கோட்டை சட்டமன்றத் தொகுதியின் வெற்றியை நிர்ணயம் செய்யும் ஏராளமான இஸ்லாமிய வாக்காளர்கள் உள்ளடங்கிய இரண்டு இலட்சம் மக்கள்தொகை.

சப் காண்ட்ராக்டர்கள் மூலம் முப்பத்தைந்து பீடி கம்பெனிகளுக்காக, தினசரி நான்கு இலட்சம் பீடிகளைச் சுற்றுகிறார்கள். ஆயிரத்து ஐந்நூறு பீடி சுற்றினால் அறுபது ரூபாய் ஊதியம். பாதாளச் சாக்கடை இல்லாததால், வீட்டின் முன்புறம், பின்புறம் என்று எங்கும் சாக்கடைக் கால்வாய்கள்... இவர்கள் பயப்படுவது மலேரியா வுக்கோ, யானைக்கால் நோய்க்கோ அல்ல... அரசு புகைக்குத் தடை விதித்து, தங்கள் வயிற்றில் அடித்து விடப் போகிறதே என்றுதான் அலறுகிறார்கள்...!

# பிஞ்சுக்கரங்களில் பீடி!






## எதிர்பார்ப்பு!

பெருமான்புரத்தை அடுத்துள்ள வேய்ந்தான்குளத்தில் கம்பீரமாகத் தயாராகி, திறப்பு விழாவுக்காகக் காத்திருக்கிறது, நெல்லைக்கான புதிய மத்திய பேருந்து நிலையம். சின்னச் சின்ன வேலைகள் மட்டுமே மிச்சமிருக்கும் நிலையில், இன்னும் அது திறக்கப் படாதது குறித்துப் பொருமுகிறார்கள் நெல்லைவாசிகள்.

இப்போது இயங்கிவரும் நெல்லை சந்திப்பு பேருந்து நிலையத்தில் அடிக்கடி டிராஃபிக் ஜாம் ஏற்படுகிறது. டிராஃபிக் சரி செய்யவே குறைந்தது இரண்டு மணி நேரம் ஆகுமாம்...! புதிய பேருந்து நிலையம் திறக்கப்பட்டால் இதற்குக் கட்டாயம் தீர்வு கிடைக்கும் என்று எதிர்பார்க்கிறார்கள்.

## ஆஹா நஸீமுதீன்!

அரசு ஊழியர் என்றால் சோம்பேறி என்ற பொதுவான கருத்தை உடைத்துத் தூள் தூளாக்கியிருக்கிறார் நெல்லை மாவட்ட கருவூலத்தில் கணினிப் பிரிவுப் பொறுப்பாளராக பணியாற்றி வரும், காஜா நஸீமுதீன். அப்படி என்ன செய்துவிட்டார் நஸீமுதீன்?

ஐந்நூறு பக்கங்கள் கொண்ட 'கம்பைண்ட் பட்ஜெட் கோட் புக்' எனும் புத்தகத்தை தமது சொந்த செலவில், நான்காண்டுகள் இரவு பகலாக உழைத்து உருவாக்கியிருக்கிறார். கருவூலத் துறையினர் மட்டுமல்ல... பிற அரசுத் துறையினரும், நஸீமுதீனை விழுந்து விழுந்து பாராட்டுகிறார்கள்.




அப்படியென்ன இருக்கிறது அந்தப் புத்தகத்தில்?

ஒரு ரூபாயை அரசுக்கணக்கில் செலுத்துவதென்றாலும், பெறுவதென்றாலும் பதினைந்து இலக்க குறியீட்டு எண்கள் மூலம்தான் கணினியில் செலுத்தப்பட வேண்டும். பதினைந்து இலக்கங்களில் ஒரு இலக்கம் தவறென்றாலும், கணிப்பொறி நிராகரித்துவிடும். மாநில கருவூலம் மற்றும் அரசுக் கணக்குப் பிரிவில் இதுபோல் பன்னிரண்டாயிரம் குறியீட்டு எண்கள் இருப்பதால் ஊழியர்கள் தலையைப் பிய்த்துக் கொள்வார்கள். காரணம் ஒரு குறிப்பிட்ட கணக்குக் குறியீட்டு எண்ணைக் கண்டுபிடிக்க ஏழாயிரம் பக்கம் கொண்ட, எழுபதுக்கும் அதிகமான புத்தகங்களில் தேட வேண்டியிருந்தது. காஜா நஸீமுதீன் தமது புத்தகம் மூலம் எல்லாவற்றையும் சுலபமாக்கி விட்டதால், தென்மாவட்ட கருவூலங்கள் அவரது புத்தகத்தைச் சுவீகரித்துக் கொண்டு விட்டன. அரசு இன்னும் இதை அச்சிட்டுக் கொடுக்கவில்லை என்பதுதான் வருத்தமான செய்தி!







## மெட்ரோ டச்அப்

மாநகராட்சி அந்தஸ்த்தை எட்டிய பிறகு நெல்லைக்கு மெட்ரோ டச்அப் தருவதுபோல இப்போது புத்தம் புதிதாக தெற்கு பைபாஸ் சாலையில் ஒரு கலக்கல் டிரைவின் ரெஸ்டாரெண்ட் முளைத்திருக்கிறது. இசை நீருற்று, குழந்தைகள் பூங்கா என்று ஜமாய்க்கத் தொடங்கியிருக்கும் ' விஜயா கார்டன்ஸ் டிரைவின் ரெஸ்டாரெண்டில் இந்திய உணவு வகைகள் எல்லாம் கிடைக்கின்றன. இந்த உணவு விடுதியை ஒட்டியே அமைந்துள்ளது குளோபல் சாப்டுவேர் சொல்யூஷன் (பி) லிமிடெட் நிறுவனம். உலக அளவில் அதிகமாய் நாடப்படும் 'என்டர் பிரைசஸ் ஒன் ப்ளஸ்' என்ற வேர்ஹவுஸ் சாப்டுவேரைத் தயாரித்து ஏற்றுமதி செய்துவரும் இந்த நிறுவனம், தமிழக சாப்டுவேர் ஏற்றுமதியில் நெல்லைக்கு நான்காவது இடத்தைப் பெற்றுத் தந்துள்ளது! இந் நிறுவனத்தின் வளாகத்திலேயே மத்திய அரசின் சாட்டிலைட் எர்த் ஸ்டேஷனும் அமைந்திருப்பது சிறப்பு. உணவு விடுதி, கணிப்பொறி நிறுவனம் இரண்டையும் உருவாக்கியிருக்கும் சேகர் பொன்னையா நெல்லை மைந்தர்!

## ஊசியுமில்லே... பாசியுமில்லே!

நெல்லை மாநகராட்சி எதிரே சாக்கடைகளின் சங்கமமாகிவிட்ட நைனார் குளக்கரையில் எல்லோரையும் வசீகரிக்கிறது மூலிகைக் கூடாரம். காய்ந்த மூலிகைளையும், வேர்களையும் கம்பிகளில்



கோத்து, அதையே கூடாரத்திற்கு சுவர் போல் மாற்றியிருந்தார்கள். அங்கே ஓராண்டு காலமாக மூலிகை மருந்து கொடுத்து வருகிறார்கள் மனோகரனும் அவரது சகோதரர்களும்.. இவர்களிடம் மூலிகை மருந்துகளைப் பெற்று குணமடைந்திருக்கிறார்களாம் ஏராளமான நெல்லைவாசிகள். திருவண்ணாமலை மாவட்டம் அரும்பருத்தி கிராமம் தான் இந்த நரிக்குறவர் சமுதாயத்து நாட்டு மருத்துவர்களின் சொந்த கிராமம்.

"நாடி பார்த்து வியாதி தெரிஞ்சு மருந்து கொடுக்கிறோம். இது கம்ப்யூட்டர் காலம். அதனாலே காப்ஸ்யூல்லதான் மூலிகைப் பொடியை நிரப்பி தர்றோம். ஒரு டவுன்லே ஒரு வருஷம் கேம்ப்.. உத்தரவாதத்தோட மருந்து கொடுக்கறது தான் எங்க ஸ்டைல்" என்று சொல்லும் இவர்கள் நெல்லையப்பர் கோவிலுக்குச் சொந்தமான திடலில் கூடாரம் அமைத்துக் கொள்ள தேவஸ்தானத்துக்குக் கொடுத்துள்ள வாடகை ஐம்பதாயிரம் ரூபாய்!



# எல்லாவித சர்க்கரை வியாதிகளுக்கும் உடல் ரீதியாக முன்னேற்றமடைய தெய்விக மூலிகை மருத்துவம்!



பல் வருட ஆராய்ச்சியின் மூலம், வேதங்களும், ஞானிகளும் போற்றியதும், கடவுளுக்கு சமமாகவும், நம் நாட்டின் பல பொக்கிஷங்களில் ஒன்றாகவும் கருதக் கூடிய பல தெய்வீக மூலிகைகளைக் கொண்டு பக்க விளைவுகள் இல்லாதவகையில், தாமே தயார் செய்த தெய்வீக மூலிகை மருந்துகள் மூலம் அடிக்கடி இரவில் சிறுநீர் கழித்தல், தேவையில்லாத போதும் அதிக அளவில் தண்ணீர் தாகம், சிறு வேலைகள் செய்தாலும் களைப்பு, பலஹீனம், சரியான உணவு உட் கொண்டும் எடை குறைவு, உடல் மெலிவு, அதிகமான பசி, அதிக அளவு தண்ணீர் குடித்தும் நாவறட்சி, தோல் வறட்சி, பரிசோதனையின் போது இரத்தத்திலும், சிறுநீரிலும் சர்க்கரையில் அளவு அதிகம் இருத்தல், உடலில் காயம் ஏற்பட்டால் விரைவில் ஆறாமை, ஆண்மைக் குறைவு கால் பாதம் எரிச்சல், குத்தல், மருத்துப் போகுதல், வீக்கம், மயக்கம், BP, கண்பார்வை குறைவு, மூட்டுவலி போன்ற குறைகளை உடைய நாட்பட்ட சர்க்கரை நோயாளிகளுக்கும் எந்த விதமான அறிகுறிகளும் இல்லாத ஆரம்ப நிலை சர்க்கரை நோயாளிகளுக்கும், குழந்தை சர்க்கரை நோயாளி களுக்கும் (Juvenile Diabetics) சிறந்த முறையில் ஆலோசனைகளும் & சிகிச்சைகளும் அளிக்கப்படுகின்றது.

மற்றும் சிறுநீரகக் கோளாறு, எல்லாவிதமான இதயநோய், பல் வகையான புற்று நோய் ஆண்மைக்குறைவு, குழந்தையில்லாத குறை, அல்சர், மூட்டுவலி, ஆஸ்துமா, சொரியாசிஸ் எனப்படும் எல்லாரக சர்ம நோய்களுக்கும் தரமான மூலிகை சிகிச்சைப் பெறலாம். அணுக வேண்டிய முகவரி



*தெய்வீக மூலிகை வைத்தியர்கள்*

தலைமை முகவரி : **Dr.M.குருபரன் & Dr.M.சபாபதி, Dr.M.சிவசக்தி, S/o Dr.C.K.மாணிக்கவாசகம்**

P.B.No:30, No.3, திருநாத முதலி நகர், (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர், வேலூர் Dt. - 635 601 ✆ 04179-20469, 22769

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) கெல்லீஸ், சென்னை - 10

**இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1, மாலை 5 to 7** ✆ 6424285, 6427638

## ஒவ்வொரு மாதமும் வெளியூர்களில் டாக்டரை நேரில் சந்திக்க

| | | | | |
|---|---|---|---|---|
| **வேலூர்**<br>2ந் தேதி - 12 pm to 2 pm<br>(N.S.R.லாட்ஜ்) 26/A, ஆரணி ரோடு, (கண் ஆஸ்பத்திரி அருகில்)<br>✆ : 0416 - 213159 | **காஞ்சிபுரம்**<br>2ந் தேதி - 5 pm to 6 pm<br>ராஜம் லாட்ஜ், (பஸ் நிலையம் அருகில்) காமராஜர் தெரு.<br>✆ : 04112 - 22519 | **கடலூர்** (S.A.DL)<br>4ந் தேதி - 9 am to 11 am<br>ஆர்காடு உட்லண்ட்ஸ் ஹோட்டல்.<br>✆ : 04142 - 30707, 30717 | **விழுப்புரம்**<br>4ந் தேதி - 2 pm to 3 pm<br>ஹோட்டல் ஆனந்த், பஸ் நிலையம் எதிரில்.<br>✆ : 04146 - 22962, 24960 | **திருவண்ணாமலை**<br>4ந் தேதி - 5 pm to 6 pm<br>ராஜ லாட்ஜ், (பஸ் நிலையம் எதிரில்)<br>✆ : 04175 - 22536 |
| **மும்பை**<br>7 & 8ந் தேதி - 10 am to 8 pm<br>The South Indian Concerns Ltd, 401, Telang Road, Matunga (CR),<br>✆ : 022 - 4011589 | **பெங்களூர்**<br>9ந் தேதி - 11 am to 1 pm<br>ஹோட்டல் பிரைட்வே, (கல்பனா தியேட்டர் அருகில்) கெம்பகவுடா ரோடு. ✆ : 080-2266374, 2873013 | **ஒசூர்**<br>9ந் தேதி - 4 pm to 5 pm<br>சீனிவாச லாட்ஜ், பாகலூர் ரோட்,<br>✆ : 04344 - 42899, 43321 | **சேலம்**<br>12ந் தேதி - 11 am to 1 pm<br>ஹோட்டல் செல்வம், புதிய பஸ் நிலையம் எதிரில்,<br>✆ : 0427 - 449333, 449332 | **ஈரோடு**<br>12ந் தேதி - 4 pm to 6 pm<br>ஹோட்டல் ஆக்ஸ்போர்ட், பஸ் நிலையம் எதிரில்,<br>✆ : 0424 - 226611/12/13/14 |
| **கோயம்புத்தூர்**<br>13ந் தேதி - 9 am to 1 pm<br>சேரன் பேலஸ் லாட்ஜ் (சாந்தி தியேட்டர் பின்புறம்)<br>✆ : 0422 - 302211, 302220 | **மதுரை**<br>14ந் தேதி - 9 am to 11 am<br>ஹோட்டல் கிரண்ட் செண்ட்ரல், மேலப் பெருமாள் மேஸ்திரி தெரு.<br>✆ : 0452 - 743941 | **தஞ்சாவூர்**<br>14ந் தேதி - 5 pm to 7 pm<br>அசோகா லாட்ஜ், தஞ்சாவூர்.<br>✆ : 04362 - 30021, 30022 | **திருச்சி**<br>15ந் தேதி - 9 am to 11 am<br>ஹோட்டல் ஆனந்த், (சென்ட்ரல் பஸ் நிலையம் அருகில்)<br>✆ : 0431 - 415545 | **நாமக்கல்**<br>15ந் தேதி - 2 pm to 4 pm<br>ஹோட்டல் தேவி அன்னபூர்ணா, நாமக்கல்.<br>✆ : 04286 - 20433, 21336 |
| **நியூடெல்லி**<br>18 & 19ந் தேதி - 10 am to 8 pm<br>South Indian Hotel, 10211, Padam Singh Road, Ajmal Khan Road, Karol Bagh. ✆ : 011-5717126, 5723651 | **தர்மபுரி**<br>22ந் தேதி - 8 am to 10 am<br>ஸ்ரீ மாதேஸ்வரா லாட்ஜ், 103, அதியமான் பைபாஸ் ரோடு,<br>✆ : 04342 - 60226, 61472 | **திருப்பூர்**<br>22ந் தேதி - 2 pm to 3 pm<br>ராமகிருஷ்ணா லாட்ஜ், கல்யாண் கோவில் தெரு.<br>✆ : 0421 - 740418 | **உடுமலைப்பேட்டை**<br>22ந் தேதி - 6 pm to 7 pm<br>ஹோட்டல் குறிஞ்சி, (பஸ் நிலையம் எதிரில்)<br>✆ : 04252 - 24353 | **திண்டுக்கல்**<br>23ந் தேதி - 9 am to 11 am<br>ஹோட்டல் குறிஞ்சி, பஸ் நிலையம் பின்புறம்.<br>✆ : 0451 - 421056, 427017 |
| **தூத்துக்குடி**<br>23ந் தேதி - 5 pm to 6 pm<br>ஹோட்டல் ஆல்வின், தேவர்புரம் ரோடு,<br>✆ : 0461 - 327780 | **திருநெல்வேலி**<br>24ந் தேதி - 8 am to 11 am<br>ஹோட்டல் ஸ்ரீ சீதாபதி, மதுரை ரோடு,<br>✆ : 0462 - 333312 | **நாகர்கோவில்**<br>24ந் தேதி - 2 pm to 3 pm<br>ஹோட்டல் சரண்யா, மீனாட்சிபுரம்<br>✆ : 04652 - 36078 | **விருதுநகர்**<br>25ந் தேதி - 8 am to 10 am<br>அண்டன் லாட்ஜ், மதுரை ரோடு,<br>✆ : 04562 - 45537 | **கரூர்**<br>25ந் தேதி - 2 pm to 4 pm<br>அசி லாட்ஜ், ஜுவல் பஜார்<br>✆ : 04324 - 63763, 62663 |

**தகவல்** : SUN, RAJ, VIJAY, DD T.V. களில் எமது பேட்டியை காணத் தவறியவர்கள், டாக்டரின் மூலிகைகள் பற்றிய 28 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய **"எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்"** இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய **"என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்"** என்ற இரு புத்தகத்தையும் பதிவுத் தபாலில் பெற ரூ.200/- மேற்கண்ட முகவரிக்கு D.D. அல்லது M.O. அனுப்பவும்.







# நெல்லைச் சிறப்பிக்கும் வாசகர்கள்

### அமர் சேவை!

ஆய்க்குடியிலுள்ள அமர் சேவா சங்கம் இன்று தமிழ்நாடெங்கும் அறியப்படுகிற அமைப்பு. ஊனமுற்றோர் மறுவாழ்வுக்காக இதை நடத்தும் ராமகிருஷ்ணனும் சங்கரராமனும் உடல் ஊனத்தை வென்றவர்கள். அமர் சேவா சங்கம் முயற்சியில், நெல்லை புதிய பேருந்து நிலையத்தில் சில சிறப்பு வசதிகள் செய்யப்படவுள்ளன. சக்கர நாற்காலி வசதி தவிர, டிக்கெட் கவுண்டர், நடைபாதை, கழிவறை போன்றவையும் ஊனமுற்றோரின் சௌகரியம் கருதி பிரத்யேகமாய், தனியே வடிவமைக்கப்பட்டுள்ளன.

- வைதேகி தேசிகன்

### ஜாலி டூர்!

திருநெல்வேலி போனா அவசியம் பார்க்க வேண்டிய இடங்கள் :

அருள்மிகு நெல்லையப்பர் கோவில் (நெல்லை), விஷ்ணுகோவில் _ (கிருஷ்ணாபுரம்), சங்கரநாராயண சுவாமி கோவில் _ (சங்கரன் கோவில்), குற்றாலம், பாபநாசம், புலிகள் சரணாலயம் (முண்டந்துறை), கல்யாண தீர்த்தம் _ (பாபநாசம்), மாஞ்சோலை பறவைகள் சரணாலயம் (சாந்தன்குளம்), உயிரின சரணாலயம் (களக்காடு), பத்தமடை, திருக்குறுங்குடி, பன்பொழி திருமலை, தென்காசிகோவில்.

- வி. ராதாகிருஷ்ணன், தஞ்சாவூர்

### டபுள் டெக்கர்

திருநெல்வேலி ஈரடுக்கு திருவள்ளுவர் மேம்பாலம் மேல்பகுதியில் நான்கு சக்கர வாகனங்களும், கீழே இரு சக்கர வாகனங்களும் செல்லும் வசதி பெற்றது. இப்பாலம் கட்டப்பட்ட சமயத்தில் இந்தியாவில் வேறெங்கும்











சரடுக்கு மேம்பாலம் கிடையாது.

- பி.எஸ். வாசுதேவன்,
கீழ-பாப்பாக்குடி.

## 'சோறு' போட்ட இரயில்வே கேட்

எம்.ஜி.ஆரால் தொடங்கப்பட்டு இன்று முட்டை, உருளைக் கிழங்கு, சுண்டல் என வளர்ந்துள்ள சத்துணவுத் திட்டம் ஆரம்பக் காலத்தில் நெல்லையிலே உதயமானது.

பெருந்தலைவர் காமராஜர் திருநெல்வேலிக்கு வந்திருந்தபொழுது ஒரு சமயம், சேரன்மகாதேவி 'இரயில்வே கேட்'டில் அவர் வந்த வாகனமும் நிறுத்தப்படவே வாகனத்தில் இருந்த காமராஜர் தற்செயலாக வயலில் ஆடு மேய்க்கும் சிறுவன் ஒருவனைப் பார்த்துவிட்டார். உடனே பள்ளி செல்லும் வயதில் ஆடு மேய்த்துக் கொண்டிருக்கிறானே... என நினைத்தவராய், அச்சிறுவனை அழைத்துப் பேச்சுக் கொடுத்தார்.

"மதியம் பள்ளியில் சாப்பிட உணவு வழங்கினால் படிக்கச் செல்வாயா?" என காமராஜர் கேட்டதும் சிறுவனும் மகிழ்ச்சியுடன் தலையாட்டினான்.

சேரன்மாகாதேவியில் நடந்த இச்சம்பவமே மதிய உணவுத் திட்டம் கொண்டு வரக் காரணமானது.

- பி.எஸ். வாசுதேவன்,
கீழ - பாப்பாக்குடி.

## பிள்ளை போட்டு பலாப்பழம் எடுத்த பாலம்

தாமிரபரணி நதியின் மேலே உள்ள சுலோசனா முதலியார் பாலம் திருநெல்வேலி சந்திப்பையும், வண்ணாரப்பேட்டையையும் (அமரர் டி.கே.சி. வாழ்ந்த பகுதி) இணைக்கிறது. அந்தப் பாலத்திற்குக் கீழே இன்றும் மரங்கள் அடர்ந்து சோலையாக உள்ளது. ஐம்பது வருடங்களுக்கு முன்பாக வட்டார வழக்கில் இந்தப் பாலத்தை 'பிள்ளை போட்டு பலாப்பழம் எடுத்த பாலம்' என்று அழைப்பார்கள். அதற்குக் காரணமாக ஒரு நிகழ்ச்சி சொல்லப்படுகிறது.

# கலக்கறாங்க!

இந்தப் பாலத்திற்குக் கீழே ஓடும் பொருநை நதிக் கரையில் தன் குழந்தையை விட்டு விட்டு ஒரு பெண்மணி ஆற்றில் குளித்துக்கொண்டிருந்தாள். ஆற்றின் நடுவில் ஒரு




பெரிய பலாப்பழம் மிதந்து வருவதைக் கண்டதும், அதை எடுக்க நீந்திச் சென்றார். அத்தருணத்தில் குழந்தை அம்மாவை நோக்கி வந்து தண்ணீரில் விழுந்துவிட்டது. பலாப்பழத்துடன் திரும்பிய தாயார் குழந்தையைத் தவற விட்டு விட்டார். இது தான் பாலத்திற்குப் பெயர் வந்த காரணம்!

- அன்னலட்சுமி செல்லம்.

## ஸ்பெஷல் பழம்!

நெல்லை மாவட்டத்தில் மட்டும் கிடைப்பது 'பூவிலாச் செண்டு' வாழைப்பழம் மற்ற வாழைகளைப் போல் அல்லாமல் இந்த வகை வாழைப்பூவில் கடைசி நுனி வரை காய் காய்க்கும். இதனால்தான் 'பூவிலாச் செண்டு' (பூ இல்லா செண்டு) என்ற பெயர்.

- ஆர். மகாதேவன்,

## பீ...பீ...

நான் அப்போது திருநெல்வேலி அருகில் தச்சநல்லூர் என்ற ஊரில் போஸ்ட்மாஸ்டராக வேலை பார்த்து வந்தேன். அந்த ஊரில் நாதஸ்வரத்திற்காக உபயோகப்படுத்தக் கூடிய சீவாளி வியாபாரி ஒருவருக்கு ஃபோன் கால் ஒன்று வந்தது. அவரும் வந்தார். நான் உடனே டெலிபோன் எக்ஸ்சேஞ்சைக் கூப்பிட்டு "பீபீ (PP) ரெடி" என்று கூறினேன். அதைக் கேட்டதும் அவருக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்துவிட்டது. ''ஏய்யா, நாதஸ்வரம் என்றால்அவ்வளவு இளக்காரமாகப் போய்விட்டதா உங்களுக்கு? பீ பீ என்று கேலி செய்கிறீரே'' என்று கோபித்தார். எனக்குச் சிரிப்பு வந்து விட்டது. "ஃபோன் பார்ட்டி ரெடியானதும் எக்ஸ்சேஞ்சைக் கூப்பிட்டு பீபீ ரெடி, அதாவது பர்டிக்குலர் பர்ஸன் ரெடி என்று சொல்வது வழக்கம்'' என்று விளக்கியதும் கோபம் தணிந்து பீ.பீ ஆனார். அதாவது பீஸ்ஃபுல் பர்ஸன்!"

- எஸ். சூரியநாராயணன்.

## நயா பைசா மேளம்

குற்றால அருவியில் குளிப்பதற்கு அந்த நாட்களில் வெள்ளைக்காரர்களுக்கு என்று தனிப்பகுதி ஒதுக்கப்பட்டிருந்ததாம்.

பாளையங்கோட்டையில் வெள்ளக் கோவில் என்றாலும் திருநெல்வேலியின் கருப்பன்துறை என்றாலும் ஒரு இடத்தைத்தான் குறிக்கும். அந்த இடம் சுடுகாடு!





நையாண்டி மேளத்தில் நயா பைசா மேளம் என்றொரு பிரிவு நெல்லைப் பகுதியில் உண்டு. இதில் நாதசுரம் வாசிப்பவர், மேளம் அடிப்பவர், ஒத்து ஊதுபவர் எல்லோரும் சிறுவர்கள்தான்.

- சுவர்ணா

## கல்லாத்தியும், மரப்பாய்ச்சியும்...

நவீன கல்விமுறைகளும், சாட்டிலைட் சானல்களும் இன்றைய குழந்தைகளின் உலகை வெகுவாகச் சுருக்கி விட்டன. குழந்தைகளின் விளையாட்டு

என்பது, டீ.வி இருக்கும் வீட்டின் நடு ஹாலோடு முடிந்து போய்விடுகிற விஷயமாகிவிட்டது. இதைக் கருத்தில் கொண்டு திருநெல்வேலியில் 'கல்லாத்தி' என்ற அமைப்பைத் தொடங்கி நடத்தி வருகின்றனர் பாளை சேவியர் கல்லூரி நாட்டார் வழக்காற்றியல் துறை பேராசிரியர் டி. தர்மராஜனும் அவரது நண்பர்களும்.

'கல்லாத்தி' என்றால் அரசமரம். பழங்காலத்தில் அரசமரத்தடி, சாதி பேதமின்றி அனைத்து மக்களும் புழங்கி வந்த இடம். 'கல்லாத்தி' என்ற அமைப்பின் சார்பில் குழந்தைகளுக்கான இயற்கையான சூழலை உருவாக்கித் தரும் விதத்தில் 'மரப்பாச்சி' என்ற அமைப்பை நடத்தி வருகின்றனர்.

இந்த அமைப்பின் மூலம் கிராமங் களில் முகாம்கள் நடத்தி, சிறுவர்களின் விருப்பத்திற்கேற்ற நிகழ்ச்சிகள் நடத்துகின்றனர். கதை சொல்லச் சொல்லி அதில் வரும் பாத்திரங்களாக அவர்களையே நடிக்க வைத்து விளை யாட்டு போல் நாடகத்தை நடத்து கின்றனர். சிறுவர்களுக்கான புத்தகங் களையும் வெளியிட்டு விநியோகம் செய்கின்றனர்.

குழந்தைகளின் இயல்பான வளர்ச் சிக்கும் மகிழ்ச்சிக்கும் இது போன்ற அமைப்புகள் அவசியம்தானே...

- தர்மசம்வர்த்தினி

## திருநெல்வேலி சீமையிலே...

காரையார் அணை, சேர்வலார் அணை, லோயர் அணை, கடனாநதி அணை, மணிமுத்தாறு அணை, கோதையாறு அணை, கருப்பாநதி அணை, குண்டாறு அணை இவை தவிர கட்டி முடிக்கப்பட்டு, பச்சையாறு அணை, நம்பியாறு அணை வேலைகள் நிறைவு பெறும் நிலையிலுள்ளன.

– மதி

## 'ஆட்டோ'கிராப்

திருநெல்வேலி பஸ் ஸ்டாண்டிலுள்ள ஆட்டோவில் வாசகம்: 'என் ஜீவன் ஓடுது!'









## நன்றி... நன்றி...

திருநெல்வேலி டவுனில் உள்ள டெலிபோன் பூத்தில் எழுதப்பட்டிருக்கும் நன்றி வாசகம்: 'என் தினசரி வரும்படிக்கு உதவிய கிரகாம்பெல்லுக்கு கோடி நமஸ்காரம்.''

. ரசித்தவர் : குமார்

நெல்லை கட்டுரைகள், செய்திகள் :
ஆர்.சி. ஜெயந்தன்
படங்கள் : ராஜன்

• டவுன் ஆர்ச்
(நெல்லை மாநகராட்சியின் சின்னம்)

• ஜெயராணி

# அங்கேயும் ஒரு ஜெ.!

நடப்பு நெல்லை அரசியலில் பரபரப்பாகப் பேசப்படுபவர் அ.தி.மு.க மேயர் ஜெயராணி. நெல்லை மாநகராட்சி மன்றத்தில் பெரும்பான்மை பலம் பெற்றிருக்கும் தி.மு.க விலிருந்து கடந்த மே பதினான்காம் தேதி ஆறு கவுன்சிலர்கள் அ.தி.மு.க.வுக்குத் தாவி விட்டார்கள். அவர்கள் தாவவில்லை, மிரட்டி இழுத்து வந்தது மேயர்தான் என்பது இவர் பேரில் குற்றச்சாட்டு.

இப்படி அதிரடியாய்க் கவுன்சிலர்களை அ.தி.மு.க.வுக்கு இழுத்து, தி.மு.க.வின் பெரும்பான்மை பலத்தை உடைத்து விட்டால், பல தீர்மானங்களை எதிர்ப்பின்றி நிறைவேற்றி விடலாம் என்ற நோக்கில் இவர் செயல்பட்டதாக அ.தி.மு.க கவுன்சிலர்களேகூட சொல்கிறார்கள். இவரது மாமனார் பின்னணியிலிருந்து இவரை இயக்குவதாகச் சொல்கிறார்கள். இவர் பேரில் பெரிய லஞ்ச,ஊழல் புகார் பட்டியலே வாசிக்கிறார்கள், பெயரோ, புகைப்படமோ வேண்டாம் என்று பின்வாங்கும் பல அ.தி.மு.க(!) கவுன்சிலர்கள்.

பத்தாவது வார்டு தி.மு.க கவுன்சிலர் பாப்பு குமார் என்பவரோ மேயர் மீது பகிரங்கமாகவே குற்றம் சாட்டுகிறார்.

''இப்போது அதி.மு.க.வில் சேர்ந்திருக்கும் கவுன்சிலர்கள், முன்பு தி.மு.க.வுக்குள் இருந்து கொண்டே, மேயர் சொல்வதற்கெல்லாம் தலை ஆட்டிக் கொண்



இல்லாவிட்டால் இங்கே எந்த வேலையும் நடக்காது'' என்று மக்களிடமே பேசுவதாகச் சொல்கிறார்கள்.


• பாப்புகுமார்


• விஸ்வநாதபாண்டியன்

டிருந்தனர். 'இந்தத் தீர்மானம் மக்கள் நலனுக்காகக் கொண்டு வரப்படுவது அல்ல; அதை ஆதரிக்காதீர்கள்' என்றால்... அன்று மன்றக் கூட்டத்திற்கு வருவதையே தவிர்த்து விடுவார்கள்'' என்றவர், மேயர் தம்மை நேரடியாக மிரட்டியதையும் சொல்கிறார்:

"நீ நம்ம ஆள்தானே? நம்ம கட்சிக்கு வந்தால்தான் உனது வார்டில் வேலை நடக்கும். இல்லை என்றால் நடக்காது' என்று ஜாதிப் பெயரைச் சொல்லி மிரட்டினார். பதினோராவது வார்டு கவுன்சிலர் இன்பராஜுடன் சேர்ந்து போய்ச் சந்தித்தபோதுதான், இப்படிச் சொன்னார். இதுவே தேவர் சமூகத்தைச் சேர்ந்த கவுன்சிலர்கள் என்றால், 'உங்க ஆட்சி தானே நடக்கிறது... நீங்களும் நம்ம கட்சிக்கு வந்துவிடுங்கள்' என்று கேட்பதாக என்னிடம் பல கவுன்சிலர்கள் வந்து சொன்னார்கள். தொடக்கத்தில் நான் நம்பவில்லை. எனக்கே நேர்ந்த பிறகுதான் தெரிகிறது'' என்கிறார் பாப்புகுமார்.

மேயரின் மாமனார் கர்னல் தேவதாஸ் முன்பு தி.மு.க.வில் இருந்தவராம். போன மேயர் தேர்தலில் உமா மகேஸ்வரிக்கு எதிராக தி.மு.க சார்பில் போட்டியிட தமது மருமகளுக்கு சீட் கேட்டு, அது கிடைக்காத கோபத்தில் இப்படி உல்டாவாக அ.தி.மு.க.வுக்கு மாறிவிட்டார் என்கிறார்கள். அ.தி.மு.க.வுக்கு வர மறுக்கும் கவுன்சிலர்களின் வார்டுகளுக்குச் சென்று அங்குள்ள மக்களிடம் ''உங்க கவுன்சிலரை எங்கள் கட்சியில் சேர்ந்துவிடச் சொல்லுங்கள். இல்லாவிட்டால் இங்கே எந்த வேலையும் நடக்காது'' என்று மக்களிடமே பேசுவதாகச் சொல்கிறார்கள்.

தி.மு.க துணைமேயர் விஸ்வநாத பாண்டியன், மேயர் மீது சொல்லப்படும் புகார்கள் பற்றிப் பேச மறுக்கிறார். ''நான் ஒரு சமுதாயத்தைச் சேர்ந்தவன், மேயர் ஒரு சமுதாயத்தைச் சேர்ந்தவர். நான் எந்தப் புகாரைச் சொன்னாலும் அதை ஜாதியோடு முடிச்சுப் போட்டு விடுவார்கள். சமூக அமைதிக்காக நான் மௌனமாக இருக்கவே விரும்புகிறேன்'' என்று சொல்லிவிட்டார்.

கடைசியாக மேயரைச் சந்தித்தோம். எடுத்த எடுப்பிலேயே ஆதாரம் இல்லாத குற்றச்சாட்டுகளுக்கும், அது தொடர்பான கேள்விகளுக்கும் பதில் சொல்ல மறுத்துவிட்டார்.

''நெல்லை ஒரு கடைநிலை மாநகராட்சி. மக்களோடு மக்களாக இருந்து மக்களை நேரில் சந்தித்து, அடிப்படைத் தேவைகளுக்கு முன்னுரிமை கொடுக்கச் சொல்லி அம்மா சொல்லியிருக்கிறார்கள். எனவே ஐம்பத்து நான்கு வார்டுகளுக்கும் நேரில் சென்று மக்கள் குறைகளை அறிந்து வந்திருக்கிறேன். இப்போதைக்கு அடிப்படை தேவைகளுக்குத்தான் முன்னுரிமை கொடுக்கிறோம். நான் அரசியலுக்கு புதிய ஆள். எனவே எனது மாமனாரிடம் ஆலோசனை கேட்டுப் பெறுகிறேன். இது தவறென்று நான் நினைக்கவில்லை. என் மீது குற்றம் சாட்டியிருக்கும் கவுன்சிலர் பாப்புகுமார் இதுவரை ஒருமுறைகூட மாமன்றக் கூட்டத்தில் வாய் திறந்து பேசியதில்லை'' என்றவர், கூடுதலாக ''நெல்லையின் போக்குவரத்து நெருக்கடி மிகுந்த பகுதிகளில் சுரங்க நடைபாதை அமைக்கவும், வரி வருவாயை உயர்த்த வணிக வளாகங்கள் கட்டவும் இந்த ஆண்டு திட்டமிடுவோம்'' என்றார்.

# ஆசை அலைமீது

அனுராதா சேகர்

**வி**ழிப்பு வந்த பின்பும், எழுந்திருக்க மனமில்லாமல் படுக்கையில் புரண்டு கொண்டிருந்த மோகனுக்கு, வசந்தி, வேலைக்கார அம்மாளை 'பேரேடு' வாங்கிக் கொண்டிருந்தது காதில் விழுந்தது.

"என்ன துணி துவைக்கிறே நீ. ப்ரஷ்ஷுக்கு வலிக்குமோ, தரைக்கு வலிக்குமோன்னு.. வரவர... தண்டமாயிட்டே.... புடைவை பார்டர்லே அழுக்கு அப்படியே இருக்கு."

புழக்கடையில் புறப்பட்டிருக்கும் பார்டர் பிரச்னை, பெட்ரூம் எல்லைக்குள் ஊடுருவுவதற்கு வெகு நேரம் ஆகாது என்று மண்டைக்குள் அலாரம் அடிக்கவே, மோகன் 'சடக்'கென்று எழுந்து கொண்டான்.

"லீவு நாளானா என்ன? பத்து வயசுப் பொண்ணு. ஜொள்ளு வழியத் தூங்கணுமா? எழுந்துருடி."

பார்டர் பார்ட்டி பராக்.. பராக்...!

"மகர ராசி நேயர்களே, உங்கள் குடும்பத்தில் சிறு சிறு பூசல்கள் உருவாகும்" என்று டீ.வியில் ஈசல் மீசைக்கார ஜோதிடர் மிரட்டிக் கொண்டிருந்தது நிச்சயம் தற்செயல் அல்ல, என்று மகர ராசிக்கார மோகனுக்குத் தோன்றவே, நெஞ்சுக்குள் சிவமணி இலவசமாக டிரம்ஸ் வாசித்தார்.

கொதிக்கக் கொதிக்க, 'ணங்' என்ற சப்தத்துடன் மேஜை மீது வைக்கப்பட்ட காபி தம்ளர், வசந்தியின் டெம்ப்ரேச்சரைக் காட்டியது.

"வெயில் காலத்துலே, இந்த சமையல் ரூம்லே நிக்கவே முடியலை. வேர்த்துக் கொட்டுது. மினிஃபேன் ஒண்ணு போட்டுத் தரச் சொல்லி, நானும் இரண்டு மாசமா கரடியா கத்தறேன். காதுலே போட்டுக்கிட்டா தானே?"

மோகனுக்கு வசந்தியைப் பற்றி அடிக்கடி ஒரு டவுட் வந்து விடும்... 'அவள் புதிரா.... புனிதமா?' அது இன்றைக்குக் கொஞ்சம் அதிகமாகி, 'புதிரா, புனிதமா, பூகம்பமா?' என்று சந்தேகம் வந்து விட்டது.

**மோ**கன் வசந்திக்குக் கல்யாணமாகி, பன்னிரண்டு வருஷமாகிறது. இயல்பாகவே வசந்தி, நல்ல கலகல டைப்தான். அதுவும் கணவனைத் தரையில் இறக்கி விடாத ரகம்! சில சமயம் பெரிய பாட்டில் நீலகிரித் தைலமே தேவைப்படும். அந்த அளவுக்கு அன்பு மழை! ஆனால் ஒரு சில சந்தர்ப்பங்களில், ராட்சசி அவதாரம் எடுத்துக் கலங்கடிப்பாள். அப்படியொரு 'காதல் சடுகுடு'வும் வேணாம்.

**பெண் கடவுளின் விசேஷ சிருஷ்டி. அபூர்வ அழகு, அளப்பரிய அன்பு, அபரிமிதமான கருணை, ஆவேசம், அசட்டுத்தனம், அபாரமான ஞாபகசக்தி, அடங்காத ஆசை, அல்ப சந்தோஷம், அறிவாற்றல் – போன்ற விஷயங்களின் அதிசயமான கலவையே பெண்!**
**– அரிஸ்டாட்டில்**



இப்படியொரு 'கண்றாவி சிடுசிடு'வும் வேணாம்... என்று தோன்றும்.

வசந்தியின் ஆக்ரோஷ ஏவுகணையை எப்படி எதிர் கொள்வது என்ற குழப்பத்தில், மோகன் அமைதிப்புறாவாகி வெள்ளைச் சிறகடிக்கவே... வந்ததே ஆத்திரம்.

''கல்லூரி மங்களாட்டம்... எவ்வளவு அழுத்தம். நான் ஒருத்திக் கிடந்து 'காள்... காள்'னு கத்திக்கிட்டிருக்கேன். நீங்க என்னடான்னா... அவ்ளோ அலட்சியமா பார்க்கிறீங்க?''

'வங்கக் கடலில் மையம் கொண்டிருந்த பயங்கரச் சூறாவளி இன்று தரையைக் கடக்கிறது...'

டி.வி.யில் வானிலைச் செய்தி சமய சந்தர்ப்பம் தெரியாமல் ஒலித்துக் கொண்டிருந்தது.

ஆதாமுக்குக் குகைப் பிரவேசம் போல, ஏவாளுக்குக் கடலலைப் பிரயாணம் என ஒன்றிருக்கிறது. பெண்ணின் மனநிலை ஒரே நிலையில் இருப்பதில்லை. சந்தோஷம் – துக்கம், அன்பு_வெறுப்பு, மென்மை-கடுமை என மாறிமாறி வருவதால், அந்த ஏற்ற – இறக்க மனநிலையைக் கடல் அலையுடன் ஒப்பிடுகின்றனர் மனவியல் நிபுணர்கள்.

பொங்குகின்ற கடல்அலை பெரிய இரைச்சலுடன் மேலே கிளம்பி, உற்சாகமாக ஒரு சுருட்டு சுருட்டி, பின் மெள்ள தணிந்து இறங்கி, புஸ்ஸென்று நுரைத்து அடங்குவது போலத்தான் பெண்களின் மனசும். கடலலை உயர்ந்து கிளம்பும் போது, அதீத உற்சாகம் கொள்கிறாள். மிகவும் அன்புடையவளாக, புரிந்து கொள்பவளாக, இளகிப் போய் நிற்பாள். அதுவே தாழ்ந்து கீழிறங்கும் போது, அன்பெல்லாம் தீர்ந்து போனவளாக,

சுயவிரக்கத்தில் வறண்டு போய், பாசத்துக் காகத் தவித்துப் போவாள்.

அன்பலை உயரும் சமயம், பெண்கள் தங்கள் பாசத்தை, காதலை அள்ளியெடுத்து, மூச்சு முட்டப் பொழிந்து கொண்டேயிருப் பார்கள். அதுவே தீர்ந்து போய் தவிக்கும் போதுதான், மிகவும் நெருங்கியவர்கள், அவருடைய உள்ளத்தை அன்பால் நிரப்ப வேண்டும் என்று எதிர்பார்ப்பார்கள். அதிலும் அப்பா, அம்மா, குழந்தைகள், சிநேகிதி எல்லாமே இரண்டாம் பட்சம்தான். கணவன் நிரப்பினால் மட்டுமே நிறைந்து



''...எஸ்கிமோக்கள் பனிக்கட்டி களைக் கொண்டே வீடு கட்டிக் கொள் கிறார்கள்; இந்தப் பள்ளிக் கூடம் எதனால் கட்டப்பட்டது சொல்லு!''

''டொனேஷன்னால சார்!''

— ஜி.வி. பிரியா

ததும்பும் ஆசை நெஞ்சம் அது!

"ஐயோ... என்னிடம் அன்பு தீர்ந்து விட் டது.. ப்ளீஸ்... புருஷா! புரிஞ்சுக்க. அதை நீதான் நிரப்பணும். உன்னால்தான் முடியும். சீக்கிரம்..." என்று வெளிப்படையாகச் சொல் லத் தெரியாததால்தான் பெண்கள் இது போல 'அம்மனோ சாமியோ' ஆட்டம் ஆடுவதெல்லாம்.

வசந்திக்கு மட்டுமல்ல, அனைத்துலக பெண்களிடமும் இந்த அபூர்வ கடலலை குணம் இருக்கிறது என்பதை ஆண்கள் புரிந்து கொள்வார்களாக!

ஆண்பிள்ளைச் சிங்கங்கள், உடனே அன்புக் குடத்தை நிரப்பறேன் என்று சொல்லிக் கொண்டு தண்ணீர் லாரியின் பின்னால் ஓட வேண்டாம்.

"ஏம்மா... உடம்பு சரியில்லையா? எதுக் கும் கவலைப்படாதே. நான் இருக்கேன். நீ தான் இந்தக் குடும்பத்துக்கு எல்லாம்... உன் போல பெண்ணை மனைவியா அடைஞ் சதுக்கு ரொம்ப பெருமைப்படறேன். ஐயாம் கிஃப்டட் வித் எ வண்டர்ஃபுல் உமன்."

— இப்படி உங்களுக்கு ஈஸியா மனப் பாடம் செய்ய முடிந்த ஒன்றிரண்டு வார்த் தைகளைப் பொறுக்கி எடுத்து, அந்த மாதிரி சமயத்தில் சொன்னாலே போதும். அட, பேசக் கூட வேணாம். அவளது தோளை அணைத்தோ, உள்ளங்கையைப் பிடித்தோ அரை நிமிஷம் அருகில் நின்றால் கூட போதும். அட...இது கூட சரிப்பட்டு வராது என்று தோன்றினால், சாயங்காலம் ஒரு முழம் பூவோடு வந்து நில்லுங்கள். உங்கள் மனைவியின் அன்பு நெஞ்சம் ஓவர் ஃப்ளோ ஆகி, உங்கள் வீடே வெள்ளத்தில் மிதப்பது நிச்சயம். ஒரு முக்கியமான விஷயம். — மேலே சொல்லப்பட்ட விஷயங்களை, மனப்பூர்வ மாகச் செய்யணும்...நோ ஆக்டிங் ப்ளீஸ்!

**கா**லை எழுந்ததுமே மோகன் கவனித்து விட்டான். வசந்திக்கு மூடு சரியில்லை.

'அன்புக் குடம் காலியாகி விட்டதாடி பெண்ணே! இதோ... இப்பவே நிரப்பிட றேன்' என்று அவளை நெருங்கி வருகிறான்.

"என்னாச்சு மினி ஃபேன்? இப்படி நான் வெந்து சாகணுமா?'' பிரேக் இல்லாத மீன்பாடி வண்டி போல அவள் தடதடத்து வரும் போதே,

''வாங்கியாச்சே!'' என்று சொல்ல, மீன்பாடி வண்டி சடன் பிரேக் அடித்து நிற்கிறது.

"எப்போ?"

"நேத்தே.. பில் கூட போட்டாச்சு... ஆனா ரவுண்ட் ஷேப்லே லோக்கல் மேக்தான் இருந்தது. நீதான் ஸ்குயர் ஷேப்லே உஷாவோ, கெய்தானோ கேட்டியே... இன்னிக்கு சாயங்காலம் வரும்போது வாங்கிட்டு வருவேன்..."

"நிஜமாவா?"

''ப்ராமிஸ்'' அவன் உள்ளங்கையைப் பிடித்துக் (ப்ளீஸ் நோட் திஸ்...) கொள்ள, பானை நிரம்பி அன்பலை சூழ்ந்ததில், நீச்சல் தெரியாத மோகன் "ஆத்தா...நான் பாஸாயிட் டேன்" என்று கத்துவது காதில் விழுந்ததா!

அடுத்த வாரம் அயனாவரம் அமுதா — கணேசன் தம்பதி.

**அ**ரசியல் பூசல்களுக்குத் தனிச் சிறப்பு, எங்கள் சி.எம். ஆகிவிட்ட விலாஸ்ராவ் தேஷ்முக்கிற்கும், சி.எம். ஆகத் துடிக்கும் எம்.பி.ஸி.ஸி. பிரசிடெண்ட் கோவிந்தராவ் அதிக்கிற்கும் இடையேயான கசமுசா. அது எந்த ரேஞ்ஜைத் தொட்டிருந்தால், சோனியாகாந்தி அடித்துப் பிடித்துக் கொண்டு வயலார் ரவியை சமரசத்துக்கு அனுப்பியிருப்பார்? மனமுறிவை ஒட்ட அதிசய ஃபெவிகாலை வைத்திருப்பதாக ரவி மார் தட்டுகிறார். வேடிக்கை என்னவென்றால், இவரே ஸோனியாவின் எதிரியான ஷரத்பவாருக்கு மிகவும் வேண்டியவர் என்று தனி கிசுகிசு சுற்றிவருகிறது. இந்த சமரசம் ரசமாக இல்லை?

**ர**சமாக இல்லாமல் ரசாபாசமாகி விட்ட ஒரு நிகழ்ச்சி: குஜராத்தின் முதல்வர் நரேந்திர மோடி, மும்பையில் ஒரு கூட்டத்தில் கலந்து கொண்டு பேசுவதாக இருந்தார். 'வரவேண்டாம்' என்று சொல்லிவிட்டது காவல் துறை! 'வந்தால், உங்கள் உயிருக்கு நாங்கள் பொறுப்பல்ல' என்ற ரீதியில்... அங்கே நடக்கும் அராஜகங்களால் இங்கே குமுறிக் கொண்டிருக்கும் அமைதிப் புறாக்கள் கொதித்தெழுந்துவிட்டால்...? ஏற்கெனவே, பூகம்ப காலத்தில் காட்டிய ஆதரவை இப்போது காட்டவில்லையே என்று எக்கச்சக்க காட்டம். எதற்கு வீண் வம்பு? 'போய் வா மகனே' என்று பாடிவிட்டார்கள்.




**'போ**ய் வா போய் வா மகளே... மும்பை போய்வா' என்று பாட, குரலைச் செருமிக் கொண்டு தயாராகி வருகிறார் லாலுஜி. ம்க்கும்... இவரது இரண்டாவது மகள் ரோகிணிக்கு, எங்கள் மும்பை மாப்பிள்ளையாக்கும். மும்பையின் இன்கம்டாக்ஸ் கமிஷனரின் மகனும், ஐடி ப்ரொஃபஷனலுமான ஸம்ரேஷ் சிங்தான் அது. இதை ஒட்டி பீஹாரிலுள்ள ஹிச்சின்பிகா கிராமத்திற்கு லாட்டரி அடித்திருக்கிறது. சுதந்திரத்திற்குப் பிறகு, முதன்முறையாக அங்கே தார்ரோடும், மின்சாரமும் வர விருப்பதால் அந்த மக்களுக்கு ரோஹிணி, 'மும்பையின் மஹாலக்ஷ்மி'யாகவே காட்சி அளிக்கிறார். வழக்கம்போல, பீஹாரின் அரசியல், காவல் துறை இயந்திரங்களுக்கு இனி கல்யாண வேலைதான்! விருந்தினா பட்டியலில், வாஜ்பேயி, சோனியாஜி வகையறாக்களெல்லாம் தவிர, புதுமுகங்கள் ஷத்ருகன்

**மும்பை மசாலா**

# மும்பையின் மஹாலக்ஷ்மி



• லல்லுபிரசாத்

சின்ஹாவும் கோவிந்தாவும். மற்றபடி மும்பைக்காரர்களெல்லாம் அழைப்பில்லாமலேயே போகலாம்!

அழைப்பில்லாமல் போவதிருக்கட்டும். வர வர அழைப்பிருந்து போனாலே வரவேற்பு ஏனோ தானோ என்றிருக்கிறதே! பாருங்களேன்.. எங்கள் உப முதல்வர் புஜ்பல் மகன் திருமணத்திற்கு அண்மையில் பெயில் கிடைத்து வெளியே வந்த ஃபிலிம் ஃபைனான்சியரும் வைர வியாபாரியுமான பரத்ஷா, கையில் அழைப்பிதழுடன் வந்தாரா? "ஐயையோ... இவரை யார் அழைத்தார்கள்? நான் அழைக்கவில்லை; நீ அழைக்கவில்லை' என்று ஆளாளுக்கு ஏலம் போட்டார்கள். அவர் விடாக்கண்டராக மேடையேறி, தம்பதியை வாழ்த்திவிட்டு, புஜ்பல் கால்களிலும் விழுந்துவிட்டாரே! வெலவெலத்துப் போன புஜ்பல், செல்ஃபோனில் பேசுவதுபோல இவரைக் கண்டுகொள்ளாமல் சமாளிப்பதற்குள், 'புஜ்பலும் பரத்ஷாவும் நெருக்கமானவர்கள், அவர் அழைத்துத்தான் இவர் வந்திருக்கிறார் போல..' என்ற 'மெஸேஜ்' போய்விட்டதே! அரசியலில் சினிமாவின் தாக்கமில்லாமலா?

சினிமாவின் தாக்கத்தை என்னவென்று சொல்ல? பாலிவுட் படங்களுக்கு லண்டனிலும், ஹாலிவுட்டிலும் விழா எடுத்தார்களா...? அடுத்து ஸ்விட்ஜர்லாந்திலும் இந்தித் திரைப்பட விழா நடக்க இருக்கிறது. அந்தக் காலத்து 'மதர் இந்தியா'வில் துவங்கி, இந்தக் காலத்து 'லகான்' வரை பல படங்களைத் திரையிடப் போகிறார்கள். அந்நியர்களே ஆசைப்படும்போது நம் அத்வானிஜி ஆசைப்படுவதில் ஆச்சரியமென்ன? அண்டர்வர்ல்டை ஒரு 'ஸூப்பர் காப்' அடக்குவதாக, ராம் கோபால் வர்மா, 'கம்பெனி' என்றொரு படம் எடுத்திருக்கிறாரா?



• மோடி

அதைக் காண அத்வானி ஆசைப்பட்டிருக்கிறார், நான் 'கம்பெனி' படத்தைப் பார்க்கப் போகிறேன். நீங்கள் எனக்கு 'கம்பெனி' தருவீர்களா?' என்று ராம் கோபாலிடமே கேட்டிருக்கிறார். உடனே வேலை வெட்டியெல்லாம் விட்டு விட்டு டில்லி ஓடிவிட்டார் வர்மா! நாட்டின் ஹோம் மினிஸ்டருக்கு 'கம்பெனி' கொடுக்க யாருக்குக் கசக்கும்?

— ஜெயஸ்ரீ ராஜ்




# நெல்லைக்கு இனி இல்லை தொல்லை!

ஒரு கிளைச் செயலாளராக1980ம் வருடம் அரசியல் வாழ்க்கையைத் துவக்கியவர் மின் துறை அமைச்சர் நைனார் நாகேந்திரன். சென்ற சட்டமன்றத் தேர்தலில் திருநெல்வேலி தொகுதியில், வோக்கலில் செல்வாக்கு பெற்ற தி.மு.க. வேட்பாளர் ஏ.எல். சுப்பிரமணியத்தை 722 வாக்குகள் வித்தியாசத்தில் தோற்கடித்தவர். அ-இ-அதிமுக. ஆட்சி அமைந்தவுடன் போக்கு வரத்துத் துறை அமைச்சராக்கப்பட்டார். அம்மா மீண்டும் முதல்வரானபோது இலாகா மாற்றப்பட்டது. போக்குவரத்துத் துறை அமைச்சராக இருந்தபோது இவர் சந்தித்த சவால், பத்துநாள் தொழிலாளர் ஸ்டிரைக். சைதை தொகுதி தேர்தல் வேலையில் மும்முரமாக இருந்தாலும் இடை இடையே மின் பற்றாக் குறை தொடர்பாக அதிகாரிகளையும் விரட்டி வேலை வாங்கிக் கொண்டிருந்த அமைச்சரை மடக்கி திருநெல்வேலி தொகுதியைப் பற்றிக் கேட்டோம்.

நெல்லைத் தொகுதியைப் பொறுத்த வரை கூடிய வரை குடிநீர் பிரச்னை ஒழிக் கப்பட்டிருக்கிறது. பத்து கிராமங்களில் கட் டப்பட்டுள்ளன மேல்நிலைத் தொட்டி. பல கிராமங்களில் சின்டெக்ஸ் தொட்டி வைத்து குடிநீர் திட்டம் நிறைவேற்றப்பட்டி ருக்கிறது. தி.மு.க. ஆட்சியில் நெல்லை டவுன் பகுதிகளில் சாலைகளே போடப்பட வில்லை. அம்மா ஆட்சிக்கு வந்தவுடன்தான் இருபது லட்சம் செலவில் சாலை கள் போடப்பட்டன. பை – பாஸ் சாலையில் நூறு சோடியம் வேப்பர் விளக்குகளும் போடப்பட்டிருக்கின்றன. பாதாளச் சாக் கடை திட்டம் விரிவுபடுத்தப்படவிருக்கிறது.

நைனார் குளம் சுத்தப்படுத்தப்பட்டு அதில் படகு விடும் திட்டம் தீவிர பரிசீலனையில் இருக்கிறது. அது தவிர குளத்தின் சுற்றுச் சாலைகளை இணைக்கும் விதத்தில் குளத்தின் குறுக்காக பாலம் கட்டும் யோசனையும் இருக் கிறது. நெல்லையிலிருந்து மாவட்டத்தின் எல்லா பகுதிகளுக்கும் பஸ் வசதி செய்து கொடுக்கப் பட்டிருக் கிறது. புதிய பஸ் ஸ்டாண்ட் முடியும் தரு வாயில் இருக்கிறது. வ.உ.சி. மணிமண்டபம் நெல்லையில் அமைக்கப் படும் என்று முதல்வர் அறிவித் திருக்கிறார். அது தொடர்பான வேலைகளும் துவக்கப்படவிருக்கின்றன. நெல்லையப்பர் கோயில் கும்பாபிஷேகம் நடந்து 27 வருடங்கள் ஆகிவிட்டன. இப்போது காஞ்சிப் பெரியவர் தலைமையில் திருப்பணிக் கமிட்டி அமைக்கப் பட்டிருக்கிறது. வரும் மாதத்தில் பணிகள் துவங்கும். நெல்லை கோயிலில் கும்பாபிஷே கம் நடத்தினால் நல்ல மழை பெய்து மக்கள் சுபிட்சமாக இருப்பார்கள் என்பது ஐதீகம்.

"திருநெல்வேலித் தொகுதியை ஒரு முன் மாதிரித் தொகுதியாக மாற்ற வேண்டுமென் பதே என் ஆசை. பல திட்டங்களுக்கு நிதி ஒரு பிரச்னையாக இருந்தாலும் முதல்வர் துணையோடு தடைகளைத் தாண்டுவேன்'' என்கிறார் நைனார் நாகேந்திரன்.

தீவிர வைஷ்ணவ குடும்பத்தைச் சேர்ந் தவர் அமைச்சர். "சென்னையிலிருந்து புறப் பட்டு சனிக்கிழமை காலை தொகுதியில் இறங்கும் அமைச்சர், நேரடியாக மக்களைச் சந்தித்துவிட்டு மதியம்தான் வீட்டிற்கே செல்கிறார்'' என்கிறார் அவரது உதவியாளர்.



சந்திப்பு: ப்ரியன்

**கா**லம் கடத்திக் கொண்டு போய் விட்ட, அந்தக் காதல் நாட்களையெல்லாம், யாரேனும் மீட்டுத் தந்தால், எவ்வளவு நன்றாக இருக்கும்?

பாலுவைப் பிரிந்து, இரண்டு வருடங்களாகி விட்டாலும், எல்லாவற்றையும் மறந்து விட முடிகிறதா என்ன? நானும், பாலுவும் சேர்ந்து, செம்பருத்திச் செடிக்கு, பாத்தி கட்டிய பொழுது, பற்றிக் கொண்ட ஈர விரல்கள்... அவன் துவட்டிக் கொண்ட துண்டில் முகம் பதித்து, குளிர்ச்சியோடு காதலையும் சேர்த்து, உள்வாங்கிக் கொண்ட, அந்த விடியற்காலை நிமிடங்கள்... அவன் பிடித்து உடைந்த, என் கண்ணாடி வளையல் துண்டுகள்...

ஆயிரமாயிரம் சந்தோஷ நினைவுகளை என்னுள் புதைத்த பாலுவை நாளை காணப்போகிறேன். எங்கள் வீட்டு கிரகப்பிரவேசத்திற்கு வர இருக்கிறான்.

'பழைய வீட்டை இடித்துக் கட்டியுள்ள, இந்த புது பங்களா டைப் வீடு எனக்குப் பிடிக்கவில்லை பாலு... பழைய வீடு, நமக்கு வெறும் வீடில்லை பாலு... நம் காதல் பிறந்து, வளர்ந்து.. இறந்ததும் கூட அந்த வீட்டில்தானே...' என்று பாலுவுடன் மனசுக்குள் பேசியபடி, சுற்றிச் சுற்றி வந்தேன்.

வீடு முழுவதும், உறவினர் கும்பலும், குழந்தைகள் சப்தமும் நிறைந்திருந்தது.

**பா**லு, பால்ய காலம் முதல், இன்று வரையிலும், என் அப்பாவுக்கு நெருக்கமான நண்பரின் மகன்.

அப்பா வியாபாரத்தில், லட்சக்கணக்கில் பணம் சம்பாதித்தாலும், பாலுவின் அப்பா ஒரு நடுத்தர அரசு ஊழியராக இருந்தாலும், பணம் அவர்களின் நட்பைப் பிரிக்கவில்லை.

எனக்கு விவரம் தெரிந்த நாள் முதல், என்னை விட சில வருடங்கள் மூத்தவனான பாலுவின் மீது இனம் புரியாத ஈர்ப்பு.

எனக்கு நன்கு ஞாபகம் இருக்கிறது. அப்பொழுது நான் ஐந்தாவது படித்துக்கொண்டிருக்கிறேன். பாலுவின் குடும்பம் சென்னையிலிருந்து வந்து, பல நாட்கள் எங்கள் வீட்டில் தங்கி விட்டுச் சென்று விட்டார்கள்.

பாலுவின் தங்கை எனக்கு நெருங்கிய தோழியாக இருந்தபோதிலும், அவளின் பிரிவை விட, பாலுவின் பிரிவே என்னை மிகவும் பாதித்தது.

இரவு, பாலு ஊரிலிருந்த பொழுது சாப்பிட்ட தட்டில் சாப்

> சத்தியமாக அந்த வயதில், காதல் என்றால் என்னவென்று சுத்தமாகத் தெரியாது. பிறகு ஏன் அப்படி ஒரு ஈடுபாடு வந்தது என்று புரியவில்லை.



# காதல் கதை

ஜி.ஆர். சுரேந்தர்நாத்

படுத்திருந்த அதே தூண் ஓரத்தில் படுத்த படி, அழுது கொண்டிருந்தேன்.

என்னைத் தேடிக் கொண்டு வந்த அம்மா, "ஏண்டி... அழுறே?" என்றாள் ஆதரவுடன்.

"பாலு ஊருக்குப் போய்ட்டான்" என்றபடி, நான் சத்தமாக அழுதேன்.

"அட பைத்தியக்காரி... அவன் ஊருக்குப் போய், ஸ்கூல் போக வேண்டாமா? கட்டின புருஷன பிரிஞ்சு போன மாதிரில்ல அழுவுற... இந்தக் கூத்தை நான் எங்க போய்ச் சொல்ல..." என்று கூறி அம்மா சிரிக்க, நான் அழுதேன்.

பாலுவின் கலகலப்பான பேச்சை நினைத்தபடி, நான் படுத்தழுத திண்ணை இப்பொழுது இல்லை. அங்குதான் போர்டிகோ.

அதற்கடுத்த வருடம் பாலு வந்து விட்டு, சென்னை திரும்பிய பொழுது, அவன் சட்டை ஒன்றை எடுக்காமல் போய்விட்டான். யாரும் வீட்டில் இல்லாத சமயம் பார்த்து, அந்தச் சட்டையைப் போட்டுக்கொள்வேன்.

சத்தியமாக அந்த வயதில், காதல் என்றால் என்னவென்று சுத்தமாகத் தெரியாது. பிறகு ஏன் அப்படி ஒரு ஈடுபாடு வந்தது என்று புரியவில்லை.

நான் பாலுவின் சட்டையைப் போட்டுக் கொண்டு அழகு பார்த்த, அந்த பெல்ஜியம் கண்ணாடி, வீடு கட்ட இடம் மாற்றியபொழுது உடைந்து விட்டது.

பிட்டேன். பிறகு பாலு தினமும் படுத்துறங்கிய, அந்தச் சிவப்பு திண்ணையில், அவன்

அந்த வருடம் பாலு வந்தபொழுது, ஃபிலிம் இன்ஸ்டிடியூட்டில் டைரக்ஷன் கோர்ஸ் சேர்ந்துவிட்டதாகச் சொன்னான்.

"என்ன... திடீர்னு?"

"நல்ல கதை போ. சின்ன வயசுலயிருந்து என் கனவு அது. இன்ஸ்ட்டிட்யூட்ல நல்ல எக்ஸ்போஷர். எவ்வளவு ஃபர்ஸ்ட் க்ளாஸ் படமெல்லாம் பாக்கறோம் தெரியுமா? தமிழ் சினிமாலதான் இன்னும் காதலி கழுத்தை மோந்து பாத்துக்கிட்டு, மார்க் கெட்ல சண்டை போட்டுக்கிட்டு.. 'ஏக் தின் அச்சானக்'னு ஒரு மிர்ணாள் சென் படம் பார்த்தேன். மார்வலஸ்.." தொடர்ந்து நீண்ட நேரம் பாரல்லல் சினிமா, பை சைக்கிள் தீவ்ஸ், அகிரோ குரோசவா... என்று நிறைய சொன்னான்.

"இந்தப் பேச்செல்லாம் விட்டுட்டு, நாம சின்ன புள்ளைல ஒண்ணா ஊஞ்சலில் ஆடினது.. வெளிய போறப்ப நான்தான் உன் சைக்கிள் பின்னாடி உக்காந்துட்டு வரு வேன்னு உன் தங்கச்சி கூட சண்டை போட்டது.. அதைப் பத்தியெல்லாம் பேசலாமே. எனக்கு சந்தோஷம் நம்பள பத்திப் பேசறதுதான்'' என்று கூறிய என்னை உற்றுப் பார்த்தான் பாலு.

வளர, வளர எத்தனையோ ஆண்களுடன் பழகினாலும், பாலுவுக்கு என் மனத்தில் தனி இடம் இருந்தது.

நான் காலேஜில் சேர்ந்தேன். பாலு ஒரு பிரபல டைரக்டரிடம், உதவி டைரக்டராகச் சேர்ந்து விட்டதாக அண்ணனுக்குக் கடிதம் எழுதியிருந்தான்.

ஒரு சனிக்கிழமை காலையில், திடீரென்று வீட்டிற்கு வந்தான் பாலு. வீட்டில் யாருமில்லை. எல்லோரும் திருக்காட்டுப்பள்ளிக்கு ஒரு கல்யாணத்திற்குச் சென்றிருந்தார்கள்.

எதிர்பாராதவிதமாக பாலுவை நீண்ட நாள் கழித்து, வாசலில் பார்த்தவுடன், கண் கலங்க, உற்சாகத்துடன், ''ஹாய்...'' என்றேன்.

"ஏய்... என்னது கண்ணுல்லாம் கலங்கிக்கிட்டு..." என்றான் பாலு.

"ஒண்ணுமில்ல" என்றேன் நான்.

"உள்ளுக்குள் ஏதோ இருக்கும்பொழுதெல்லாம், ஒன்றுமில்லை என்றுதான் எல்லோரும் சொல்கிறோம்னு வண்ணதாசன் ஒரு கதைல சொல்லியிருக்காரு."

நான் பதில் சொல்லாமல், வெட்கத்துடன் சிரித்தேன்.

"இங்க பார்றா... கண்ணு கலங்குற... வெட்கப்படறே..."

"ஏய்..'' என்று உரிமையாக அதட்டினேன்.

"என்னா திடீர்னு தஞ்சாவூர் பக்கம் காத்து வீசுது?"

"ஒரு படத்துக்கு லொக்கேஷன் பார்க்க வந்தோம். மொத்த படமும் தஞ்சாவூர்லேதான் ஷூட்டிங்."

"அப்ப அடிக்கடி வருவீங்க" என்றேன் உற்சாகமாக.

அடிக்கடி வர ஆரம்பித்தான்.

வாழ்க்கையில் சில நிமிடங்கள், காலம் முழுவதும், எப்பொழுது நினைத்தாலும், மார்கழி மாத குளிரைப் போன்றதொரு சுகத்தைத் தரும். அந்த நிமிடங்கள்...

வீட்டில் யாருமில்லை. ஊஞ்சலில் ஆடியபடி, "நீங்க பார்த்ததுலயே ரொம்ப அழகானவங்க யாரு?'' என்றேன் பாலுவிடம்.

''ம்... ஸ்கூல்ல என் கூடப் படிச்ச காவேரி... அப்புறம்.. மெட்ராஸ்ல கபாலீஸ்வரர் கோயில்ல அசத்தலா ஒரு பொண்ணு. இன்னும் கூட அப்படியே என் கண்ணுல இருக்கும் பாரு'' என்று தன் விழிகளை விரித்துக் காட்டினான்.

''வ்வவ்வே... அப்புறம் வேற யாரு?''

''ம்... அவ்வளவுதான்.''

"அவ்வளவுதானா?"

''அவ்வளவுதான்... இருந்தாலும் மனசுக்கு ஒரு பொண்ணை புடிச்சுப் போச்சுன்னா, அவங்கதான் இருக்கறதுலேயே ரொம்ப அழகா தெரிவாங்க."

"அப்படி உங்களுக்கு யாராவது...?"



''ஏண்டி பக்கத்து வீட்டு பங்கஜம் கிட்ட அடிக்கடி சண்டை போட்டுக்கிட்டே இருக்குற?''

''மெகா சீரியல பத்தி நாங்க டிஸ்கஸ் பண்றது உங்களுக்குச் சண்டை போடுறது மாதிரி தெரியுதாக் கும்!''

- சின்னமனூர் சக்தி

"ம்..."

"யாரு?"

"அத நான் சொல்லித்தான் தெரியணுமா?" என்று பாலு கூறியவுடன், உடலும், மனமும் சிலிர்த்தன.

"பிடிச்சிருக்கா?" என்றேன் காதல் பொங்க.

"ம்... உனக்கு?"

"ரொம்ப... ரொம்ப..."

இப்படித்தான் 'ஐ லவ் யூ' சொல்லாமலே, எங்கள் காதலைச் சொன்னபடி அமர்ந்து ஆடிய ஊஞ்சல், இப்பொழுது கட்டியுள்ள நவீன பங்களாவுக்குப் பொருத்தமாக இருக்காது என்று பரணில் போட்டு விட்டார்கள்.

ஷூட்டிங் முடிந்து, சென்னை சென்ற பிறகும் கூட, பாலு அடிக்கடி வருவான். கடிதம் எழுதுவான். இரண்டு வருடங்கள்... காதலைத் தவிர வேறொன்றையும் நினைக்காது நகர்ந்த வருடங்கள். எல்லாமே பரவசம்!

பாலுவின் கடிதம் ஒன்று, என் அம்மா கையில் கிடைக்க, வீட்டில் பூகம்பம் வெடித்தது.

ஆயிரம் மனப்போராட்டத்திறகுப் பின், கடைசியில் நிறைய இந்தியப் பெண்கள் போல், கண்ணீரில் காதலைக் கரைத்து விட்டு, அறைக்குள் ஓடினேன்.

அத்தோடு நிற்காமல், என் அண்ணன் மூலம் பாலுவை வரவழைத்து, என் வாயாலேயே சொல்ல வைத்தனர்.

"என்னை மன்னிச்சுடு பாலு... எங்கப்பாவும், உங்கப்பாவும் ஃப்ரண்ட்ஸ். சம்மதிப்பாங்கன்னு நினைச்சேன். எங்கப்பாவுக்குப் பிடிக்கலை. எங்க வீட்டுல யாருக்கும் பிடிக்காம நாம சேர வேண்டாம்" என்றேன்.

ஒரு வார்த்தை கூடப் பேசாமல், கண்ணீருடன் என்னைப் பார்த்தபடி, பாலு திரும்பிச் சென்ற அந்த கூடமும், நடையும் இப்பொழுது இல்லை.

என்னதான் புது வீடு, க்ரானைட்டும் சான்ட்லியர்களுமாகப் பளபளத்தாலும், எங்கள் காதலுக்கு சாட்சியாக இருந்த பழைய வீடுதான் இன்னும் இனிக்கிறது எனக்கு.

பாலு வீட்டில், பாலுவின் தங்கையைத் தவிர, வேறு யாருக்கும் எங்கள் காதல் விஷயம் தெரியாது. வழக்கம் போல என் அப்பா, அவர்கள் வீட்டிற்கு கிரகப்பிரவேச பத்திரிகை அனுப்பியிருந்தார். அவனைப் பார்க்க வேண்டும் போலத் தோன்றியதால், பாலுவின் தங்கை தீபாவுக்கு ஃபோன் செய்து, பாலுவை அழைத்து வரச் சொல்லியிருக்கிறேன். நிச்சயம் வருவான்.

மறுநாள் காலை. பாலுவின் குடும்பம் வந்திறங்க, நான் தவிப்புடன் பாலுவைத் தேடினேன். பாலு வரவில்லை. "ஏன் வரலே?" என்று துக்கம் பொங்க, பாலுவின் தங்கை தீபாவிடம் கேட்க, அவள் ஒரு கடிதத்தை நீட்டினாள். பாத்ரூமிற்கு சென்று அவசரமாகப் படித்தேன்.

*அன்புள்ள வித்யாவுக்கு,*

*பாலு எழுதிக் கொள்வது. நீ கட்டாயம் வரச் சொன்னதாக தீபா சொன்னாள். எப்படிச் சொல்வது? நண்பர்களை டீக்கடையோடும், என் இயக்குநரை கேமிராவோடும் சேர்த்து நினைப்பது போல, நம் காதலை அந்தப் பழைய வீட்டோடு சேர்த்தே நினைக்க முடிகிறது. நாம் சிறு வயதில் கைகளைக் கோத்துக் கொண்டு சுற்றிய தூண்களும், ஜாடையிலேயே நாம் ஓராயிரம் விஷயங்கள் பேசிக் கொண்ட அந்த அறைகளும், நம் பேச்சும், சிரிப்பும் எதிரொலித்த திண்ணையும், முற்றமும் இல்லாத வீட்டைக் காண விரும்பவில்லை. உனக்குப் புரியும் என்று நினைக்கிறேன்...*

மேற்கொண்டு படிக்க முடியாமல், கண்ணீர் எழுத்துக்களை மறைத்தது.

பாலு வந்திருந்தால் கூட, நான் இவ்வளவு சந்தோஷப்பட்டிருக்க மாட்டேன்.

காலம், காலமாக இந்தப் பெற்றோர்களால், காதலர்களைத்தான் பிரிக்க முடிந்திருக்கிறதே ஒழிய, காதலை அல்ல. ○

"அதிரடி மெகா சீரியல் எடுக்கறீங்களாமே... என்ன தலைப்பு?"

"இதுவாடா முடியும்!"

- கே. நேசினி






உண்டு மகிழ மட்டுமல்ல
கண்டு களிக்கவும் வாருங்கள்!

# ஸ்ரீ விஜயா கார்டன்ஸ்

(உயர்தர சைவ உணவகம்)

## நெல்லையில் 3 ஏக்கர் பரப்பளவில் அமைந்துள்ள ஒரே உணவகம்



**சிறப்பு அம்சங்கள்**

* ஏஸி டைனிங்
* கார்டன் சர்வீஸ்
* மலை நீர்வீழ்ச்சி
* டிரைவ்-இன்-சர்வீஸ்
* அவுட்டோர் கேட்டரிங்
* மியூஸிக்கல் பவுண்டன்
* திறந்த வெளி கலையரங்கம்
* மிக விசாலமான கார் பார்கிங் வசதி
* பெற்றோர் பொழுது போக்கு பூங்கா
* குழந்தைகள் விளையாட்டு பூங்கா

தெற்கு பை-பாஸ் ரோடு, (அம்பை ரோடு கிராஸிங் அருகில்),
(மதுரை - கன்னியாகுமரி பை-பாஸ் ரோடு)
திருநெல்வேலி - 5. தொலைபேசி : 0462-353092



# சிவகாமியின் சபதம்

முப்பத்து மூன்றாம் அத்தியாயம்

## வரவேற்பு

வாத்திய கோஷத்தையும் ஆரவாரத்தையும் கேட்டு ஆயனரும் அத்தையும் அங்கே வந்து சேர்ந்தார்கள்.

ஜனக்கூட்டம் நெருங்கி வந்து கொண்டிருந்தது. கொஞ்ச தூரத்தில் கூட்டத்திலிருந்து ஒரு தனி உருவம் வெளிப்பட்டு முன்னதாக விரைந்து வந்தது. அந்த உருவத்தைப் பற்றி எவ்விதச் சந்தேகமும் ஏற்பட நியாயமில்லை. குண்டோதரனுடைய உருவந்தான் அது!

குமார சக்கரவர்த்திக்குப் பலமான கோபம் உண்டாயிற்று. ஆஹா! இந்த மூடன் என்ன காரியம் செய்தான்? 'குமார சக்ரவர்த்தி வெள்ளத்தில் அகப் பட்டுக் கொண்டார்; இங்கே வந்து ஒதுங்கியிருக்கிறார்!' என்று ஊரிலே சொல்லியிருக்கிறான். இவ்விடம் தங்கும் சொற்ப நேரத்தைச் சிவகாமியிடம் பேசிக்கொண்டு கழிக்கலாம் என்று நினைத்தால், அதற்கு இடமில்லாமல் செய்துவிட்டானே! சிவகாமிக்குச் சொல்ல வேண்டியது, கேட்க வேண்டியது இன்னும் எவ்வளவோ இருக்கிறதே! சைனியமின்றித் தாம் தனித்து வந்திருப்பது பற்றியும், ஆயனரும் சிவகாமியும் தம்முடன் இருப்பது பற்றியும் அவர்கள் என்ன நினைப்பார்கள்...? ஆ! இந்த மூடன் குண்டோதரன் எவ்வளவு சங்கடமான நிலையில் தம்மைக் கொண்டு வந்து வைத்துவிட்டான்!

ஆயினும், அவனிடம் தற்போது கோபம் கொள்வதில் பயனில்லை.

**அமரர் கல்கி**

நடந்த தவறு நடந்துவிட்டது. எப்படியோ இந்தச் சங்கடமான நிலைமையைச் சமாளித்தாக வேண்டும்...

இப்படிச் சிந்தனை செய்துகொண்டு சற்றுப் பின்னாலேயே மாமல்லர் ஒதுங்கி நின்றபோது, குண்டோதரன் தம்மிடம் வராமல் ஆயனரிடம் நின்று ஏதோ சொல்லுவதைப் பார்த்தார். பிறகு சிவகாமியின் காதோடு ஆயனர் ஏதோ சொன்னார். இருவரும் மாமல்லர் இருந்த திசையை நோக்கிப் புன்னகை புரிந்தார்கள்.

ஜனக்கூட்டம் இதற்குள் அருகில் வந்துவிட்டது. கூட்டத் தலைவர்களாகத் தோன்றிய இருவர், பூரண கும்பத்துடனும் புஷ்பம் தாம்பூலம் பழம் வைத்திருந்த தட்டுக்களுடன் எல்லோருக்கும் முன்னால் வந்தார்கள். குண்டோதரன் அவர்களுக்கு ஆயனச் சிற்பியாரைச் சுட்டிக் காட்டினான்.

கிராமத் தலைவர்களில் ஒருவர் கூறினார்: உலகத்தில் எப்பேர்ப்பட்ட தீமையிலும் நன்மை ஒன்று உண்டு என்பார்கள். அதுபோல், திருப்பாற்கடல் ஏரி உடைப்பு எடுத்ததனால், எங்கள் கிராமம் பாக்கியம் செய்ததாயிற்று. சிற்ப சக்கரவர்த்தி ஆயனரையும், பரத சாஸ்திர ராணி சிவகாமி தேவியையும் வரவேற்கும் பேறு எங்களுக்கு வாய்த்தது. வர வேண்டும், ஐயா! வருக, தேவி! உங்களுக்கும் உங்கள் சீடர்களுக்கும் எங்களால் முடிந்த சௌகரியங்களைச் செய்துகொடுக்கிறோம். எத்தனை நாள் முடியுமோ அத்தனை நாள் எங்கள் விருந்தினர்களாய்த் தங்கி இருக்க வேண்டுகிறோம்."

இவ்விதம் கிராமத் தலைவர் கூறி முடித்ததும், ஆயனர், "மகா ஜனங்களே! உங்களுடைய அன்புக்கு நானும் என் குமாரியும் என் சீடர்களும் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம்! இந்த வெள்ளம் வடிகிற வரையில் உங்களுடைய விருந்தாளியாக நாங்கள் இருந்துதான் தீர வேண்டும்!" என்றார்.

பிறகு, கிராமவாசிகளும் ஆயனர் முதலியோரும் கிராமம் இருந்த திசையை நோக்கி நடக்கத் தொடங்கினார்கள்.

எல்லோருக்கும் பின்னால் தங்கியிருந்த மாமல்லரோ ஆச்சரியக் கடலில் மூழ்கியிருந்தார். அவர் எதிர்பார்த்ததற்கு முற்றும் மாறாகக் காரியங்கள் நடந்தன. சிவகாமி அவ்வப்போது கடைக்கண்ணால் பார்த்துப் புன்னகை செய்ததைத் தவிர, மற்றபடி அவர் ஒருவர் அங்கு இருப்பதையே கவனிப்பாரைக் காணோம்.

அவருடைய வியப்பிலே மகிழ்ச்சியும் கலந்திருந்தது என்பதைச் சொல்ல வேண்டியதில்லையல்லவா? 'குண்டோதரனை மூடன் என்று கருதியது எவ்வளவு தவறு? அவனுடைய புத்திக் கூர்மையே கூர்மை!' என்று அவர் எண்ணமிட்டுக் கொண்டிருக்கும்போதே, "பிரபு! ஏன் நிற்கிறீர்கள்? போகலாம் வாருங்கள்!" என்று குண்டோதரன் அவர் பின்னாலிருந்து காதோடு சொன்னான்.

"என்னை அவர்கள் அழைக்கவில்லையே? அழையாத இடத்துக்கு நான் எப்படிப் போவது?" என்றார் மாமல்ல நரசிம்மர்.

"ஏன் அழைக்கவில்லை? ஆயனரிடம், 'உங்களுடைய சீடர்களுக்கும் வேண்டிய சௌகரியம் செய்துகொடுக்கிறோம்!' என்று சொன்னார்களே! காதில் விழவில்லையா? நீங்களும் நானும் ஆயனரின் சீடப்பிள்ளைகள்!" என்றான் குண்டோதரன்.

"சத்ருக்களின் ஆட்கள் எல்லாம் உன்னைப் போலவே புத்திசாலிகளாய் இருப்பார்களா, குண்டோதரா? அப்படியானால் ஆயிரம் புலிகேசி படையெடுத்து வந்தாலும் நாம் அத்தனை பேரையும் யுத்தத்தில் ஜயித்து விடலாம்!" என்றார் மாமல்லர்.

ஆயனரின் 'சீடர்'கள் இருவரும் ஜனக் கூட்டத்துக்குச் சற்றுப் பின் தங்கிச் சென்றார்கள்.



மாமல்லர் அப்படி ரொம்பவும் பின் தங்கி விடவில்லையென்பதையும் சிவகாமியின் கடைக்கண் பார்வையைத் தெரிந்துகொள்ளக்கூடிய தூரத்திலேயே போனார் என்பதையும் உண்மையை முன்னிட்டு நாம் குறிப்பிட வேண்டியிருக்கிறது.

கிராமத்துக்குக் கிட்டத்தட்டப் போனபோது ஜனக்கூட்டம் மேலும் அதிகமாயிற்று. ஊரே திரண்டு வந்துவிட்டது போல்

தோன்றியது. ஊருக்குள்ளே ஒவ்வொரு வீட்டு வாசலிலும் விதவிதமான வர்ணக் கோலங்கள் போட்டு அலங்கரித்திருந்தார்கள். ஊர்வலத்தை ஆங்காங்கு நிறுத்திக் கிராமத்துப் பெண்மணிகள், சிவகாமிக்கு ஆரத்தி எடுத்தார்கள். கடைசியில், கிராமத்தின் கீழ்ப்புறத்திலிருந்த சிவாலயத்துக்கு அனைவரும் போய்ச்சேர்ந்தார்கள்.

ஆலயம் சின்னதுதான்; ஆனால் அழகாயும் சுத்தமாயும் இருந்தது. செங்கல் சுண்ணாம்பினால் கட்டப்பட்ட வெளிமதிலைத் தாண்டி உள்ளே போனதும், விசாலமான பிராகாரம் ஒரு புல் பூண்டு இல்லாமல் வெகு சுத்தமாயிருந்தது.

பலிபீடம், துவஜஸ்தம்பம், நந்திமேடை ஆகியவற்றைத் தாண்டிச் சென்றதும், அடியார்கள் நின்று தரிசனம் செய்வதற்குரிய அர்த்த மண்டபம் இருந்தது. ஓட்டினால் கூரைவேயப்பட்ட அர்த்த மண்டபத்துக்கு அப்பால் கர்ப்பக் கிருகம். இதன் மேலே அப்போது புதிதாகத் தமிழகத்தில் வழக்கத்துக்கு வந்துகொண்டிருந்த தூங்கானை மாடம் அழகாக விளங்கிற்று.

கோவிலுக்குள் நுழையும்போதே சாம்பிராணி, சந்தனம் இவற்றின் ஸுகந்தமும், பன்னீர், பாரிஜாதம், செண்பகம், தாமரை முதலிய திவ்ய மலர்களின் நறுமணமும், நெய் விளக்கின் புகை, உடைத்த தேங்காய், உரித்த வாழைப்பழம், நாரத்தம்பழச் சாறு, பிழிந்த கரும்பின் ரசம் ஆகியவற்றின் ஸுவாசனையும் கலந்து வந்து, ஏதோ ஒரு தூய்மையான தனி உலகத்துக்குள்ளே வந்திருப்பது போன்ற உணர்ச்சியை உண்டாக்கின.



தி யனரும் சிவகாமியும் ஆயனரின் சீடர்களும் அர்த்த மண்டபத்துக்குள் வந்

தும் சுவாமிக்குத் தீபாராதனை நடந்தது. பின்னர் அர்ச்சகர் அபிஷேக தீர்த்தமும் விபூதிப் பிரசாதமும் கொடுத்தார். அதேமாதிரி அம்பிகையின் சந்நிதியிலும் தீபாராதனை நடந்து குங்கும புஷ்பப் பிரஸாதங்கள் அளிக்கப்பட்டன.

எல்லாம் ஆன பிறகு, அவர்களை வரவேற்ற கிராமத் தலைவர், ''ஆயனரே! தங்களுடைய குமாரியின் நடனவித்தைத் திறமையைக் குறித்து நாங்கள் ரொம்பவும் கேள்விப்பட்டிருக்கிறோம். எங்கள் பாக்கியவசத்தினால் எதிர்பாராதவிதமாக நீங்கள் இந்தக் கிராமத்துக்கு வரும்படி நேர்ந்தது. உங்களுக்கு இன்றைக்குத் தொந்திரவு கொடுக்க மனம் இல்லை. நாளைய தினம் தங்கள் குமாரி இந்தச் சந்நிதியில் நடனம் ஆடி எங்களை மகிழ்விக்க வேண்டும்!'' என்று விநயமாகக் கேட்டுக்கொண்டார்.

இதற்கு மறுமொழி என்ன சொல்



வதென்று தெரியாதவராய் ஆயனர் சிவகாமியை நோக்கினார். அவளுடைய முகத்தைப் பார்த்ததும் ஆயனருக்கு மனக்கலக்கம் அதிகமாயிற்று. அவர்கள் நின்று கொண்டிருந்த அர்த்த மண்டபத்தில் மாமல்லர் எங்கே நிற்கிறார் என்

பதை சிவகாமி ஏற்கெனவே தெரிந்து கொண்டிருந்தாள். இதுவரையில் வெகு ஜாக்கிரதையாக அந்தப் பக்கமே பார்க்காமலிருந்த அவளுடைய கண்கள் பளிச்சென்று மாமல்லருடைய முகத்தை ஏறிட்டு நோக்கின. சிவகாமியின் கண்களில் தோன்றிய கேள்விக்கு, மாமல்லரின் முகமலர்ச்சியும் அவருடைய கண்களில் தோன்றிய குதூகலமும் மறுமொழி தந்தன. மறுகணம் சிவகாமி ஆயனரை நோக்கி, ''ஆகட்டும், அப்பா!'' என்று மெல்லிய குரலில் கூறினாள். ''ஆயனரே! தங்கள் அருமைக் குமாரியின் மறுமொழி எங்கள் காதிலும் விழுந்தது. மிகவும் சந்தோஷம்!'' என்றார் கிராமாதிகாரி. இதற்குள்ளே, மறுநாள் நடனம் ஆடச் சிவகாமி சம்மதித்துவிட்டாள் என்ற செய்தி பரவி, அர்த்த மண்டபத்திலும் வெளிப்பிராகாரத்திலும் நின்றுகொண்டிருந்த ஜனங்களுக்குள் கலகலப்பு ஏற்பட்டு அது ஆரவாரமாக மாறியது.

இந்தக் கலகலகப்புக்கும் ஆரவாரத்துக்கும் இடையே, ஆயனர் கிராமத் தலைவரைப் பார்த்து, ''ஐயா! சிவகாமியின் நடனப் பயிற்சி நின்று ஏழெட்டு மாதமாகிறது. ஆனாலும் பாதகமில்லை. நீங்கள் காட்டும் அன்பானது சிவகாமியின் மனத்தை ரொம்பவும் கவர்ந்திருக்கிறது. ஆகையினால், நாளைக்கு உங்களுடைய விருப்பத்தை நிறைவேற்றி வைக்கச் சம்மதிக்கிறாள். ஆனால் சிவகாமியின் நடனக்கலையைப் பற்றி நீங்கள் இவ்வளவு தூரம் தெரிந்துகொண்டிருப்பது எனக்கு வியப்பாயிருக்கிறது. உங்களுக்கு எவ்விதம் தெரிந்ததோ? ஒருவேளை என் சிஷ்யன் குண்டோதரனுடைய வேலையோ இது?'' என்று கூறிக் குண்டோதரனை நோக்கினார்.

அப்போது கிராமத் தலைவர், ''இல்லை, ஐயா இல்லை! தங்கள் குமாரியைப் பற்றி ஏற்கெனவே எங்களுக்கு நாவுக்கரசர் பெருமான் தெரிவித்திருக்கிறார்'' என்றார்.

''ஆஹா! நாவுக்கரசர் இங்கே வந்



திருந்தாரா? உங்களுடைய பாக்கியந் தான் என்ன!'' என்றார் ஆயனர்.

''நாங்கள் பாக்கியசாலிகள்தான். ஆறு மாதத்துக்கு முன்னால் நாவுக்கரசர் பெருமான் இந்தப் புண்ணியம் செய்த கிராமத்துக்கு வந்தார். அவருடைய திருக்கரத்தில் உழவாரப்படை பிடித்து இந்த ஆலயத்தின் பிரா



காரத்தைச் சுத்தம் செய்தார். நாங்களும் அந்தத் திருப்பணியில் ஈடுபட்டோம். அன்றிரவு இந்தச் சந்நிதியில் நாவுக்கரசர் பெருமானின் சீடர்கள் அழு தொழுகும் தமிழ்ப் பதிகங்களைப் பாடினார்கள். அவற்றில்,

**முன்னம் அவனுடைய நாமம்**
**கேட்டாள்**
**மூர்த்தி அவனிருக்கும் வண்ணம்**
**கேட்டாள்**

என்னும் பதிகத்தைப் பாடியபோது, நாவுக்கரசர் பெருமானின் கண்களிலிருந்து தாரை தாரையாய்க் கண்ணீர் வந்தது...''

இவ்விதம் கிராமத் தலைவர் கூறி வருகையில், ஆயனர், சிவகாமி, மாமல்லர் ஆகிய மூன்று பேருக்கும் ஏக காலத்தில் ரோமாஞ்சனம் உண்டாயிற்று. அத் தலைவர் மேலும் கூறினார்:

''பதிகம் முடிந்த பிறகு பெருமான் எங்களுக்குச் சிவகாமி தேவியின் நடனத்தைப் பற்றிக் கூறினார். தாங்கள் தங்கள் குமாரியுடன் காஞ்சியில் அப்பெருமானுடைய மடத்துக்கு வந்திருந்ததையும், அப்போது சிவகாமி இந்தப் பதிகத்துக்கு அபிநயம் பிடித்து மூர்ச்சித்ததையும் பற்றித் தெரிவித்தார். நேரில் இவ்வளவு விரைவில் உங்களுடைய வரவேற்கும் பாக்கியம் எங்களுக்குக் கிடைக்குமென்று அப்போது நாங்கள் கனவிலும் கருதவில்லை.''

''வாகீசப் பெருந்தகைக்கு எங்களுடைய ஞாபகம் இருந்தது. நாங்கள் செய்த புண்ணியம்!'' என்றார் ஆயனர்.

''நாவுக்கரசர் பெருமான் வந்து போன பிறகு இந்த ஊரில் அவருடைய திருப்பெயரால் ஒரு மடாலயம் கட்டியிருக்கிறோம். அந்த மடாலயத்தில் முதன்முதலாகத் தாங்களும் தங்கள் புதல்வியுந்தான் தங்கப் போகிறீர்கள். இதுவும் நாங்கள் செய்த புண்ணியந்தான்!'' என்றார் கிராமத் தலைவர்

## முப்பத்து நான்காம் அத்தியாயம்

# நந்தி மேடை



அன்றிரவு இரண்டாம் ஜாமத்தின் மத்தியில் நாவுக்கரசர் மடாலயத்தின் வாசலில் மாமல்லரும், குண்டோதரனும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

சாயங்காலமே மேகங்கள் எல்லாம் கலைந்து வானம் துல்லியமாயிருந்தது. சரத்கால சந்திரன் பொழிந்த தாவள்யமான நிலவு அந்தச் சாதாரண கிராமத்தைக் கந்தர்வ லோகமாகச் செய்து கொண்டிருந்தது. சற்றுத் தூரத்தில், கிராமக் கோயிலின் தூங்கானை மாடத்துத் தங்க ஸ்தூபி 'தகதக'வென்று பிரகாசித்தது. அதற்கப்பால் தெரிந்த தென்னை மரங்களின் உச்சியில் பச்சை மட்டைகளின் மீது நிலாமதியின் கிரணங்கள், ரசவாத வித்தை செய்துகொண்டிருந்தன. தென்னை மட்டைகள் இளங்காற்றில் இலேசாக அசையும்போது, பச்சை ஓலைகள் பனிச்சென்று வெள்ளி ஓலைகளாக மாறுவதும், மீண்டும் அவை பச்சை நிறம் பெறுவதும் ஏதோ ஒரு இந்திர ஜாலக் காட்சியாகவே தோன்றின.

"பிரபு! குபேர சம்பத்து வாய்ந்த அரண்மனை உப்பரிகையில் பஞ்சணை மெத்தையில் படுத்து உறங்க வேண்டிய தாங்கள், இந்த ஆண்டி மடத்துத் திண்ணையில் அநாதைப் பரதேசியைப் போல் படுத்து உறங்குவதா? அந்த எண்ணத்தையே என்னால் சகிக்க முடியவில்லையே!'' என்றான் குண்டோதரன்.

''குண்டோதரா! இத்தனை நேரமும் ஆயனரோடு விவாதம் செய்து ஒருவாறு முடிந்தது. நீயும் அதே பாட்டைப் பாட

ஆரம்பித்து விட்டாயா...?'' என்றார் மாமல்லர்.

குண்டோதரன் ஏதோ சொல்ல ஆரம்பித்தான். அதற்கிடங்கொடாமல் மாமல்லர் மறுபடியும் கூறினார்.

''என் தந்தை அப்படி என்னை அரண்மனை உப்பரிகையிலேயே எப்போதும் படுக்க வைத்து வளர்க்கவில்லை, குண்டோதரா! பஞ்சணை மெத்தையில் பரப்பிய முல்லைப் புஷ்பங்களின் மீது படுத்தும் எனக்குப் பழக்கம் உண்டு; நடுக்காட்டிலே மரத்தின் வேரைத் தலையணையாய்க் கொண்டு தரையில் படுத்தும் எனக்குப் பழக்கம் உண்டு. இந்த மடத்துத் திணை வழவழவென்று தேய்ந்து எவ்வளவு மிருதுவாக இருக்கிறது?'' என்றார் மாமல்லர்.

''பிரபு! தாங்கள் பரிகாசம் செய்கிறீர்கள். எனக்கோ வேதனையாயிருக்கிறது. இந்தக் கஷ்டம் தங்களுக்கு என்னால் வந்ததுதானே என்பதை எண்ணும்போது என் மனம் பதைக்கிறது. நான் மட்டும் ஒரு வார்த்தை இந்த ஊர்வாசிகளிடம் தாங்கள் இன்னார் என்பது பற்றிச் சொல்லியிருந்தால்...?''

''குண்டோதரா! பிசகான காரியம் செய்துவிட்டுப் பிறகு வருத்தப்படுகிறவர்களை நான் கண்டதுண்டு. நல்ல காரியம் - புத்திசாலித்தனமான காரியம் - செய்ததற்காக வருத்தப்படுகிறவர்களை நான் பார்த்ததில்லை. இப்போது உன்னைத்தான் பார்க்கிறேன். நான் சக்கரவர்த்தி குமாரன் என்பது தெரியாதபடி ஜனங்களுடன் கலந்து பழகும் சந்தர்ப்பம் கிடைக்காதா என்று எவ்வளவோ ஆவல்கொண்டிருந்தேன். அந்த ஆவல் இப்போது உன்னால் நிறைவேறுகிறது. ஆஹா! சிவகாமியின் நடனக் கலையின் புகழ் எவ்வளவு தூரம் பரவியிருக்கிறதென்பதை இன்று தெரிந்து கொண்டதில் எனக்கு எவ்வளவு சந்தோஷம் தெரியுமா...?''

''பிரபு! சிவகாமி தேவியின் நடனக் கலையின் புகழ் மட்டும் இங்கே பரவியிருக்கவில்லை. புள்ளலூர்ப் போரின் கீர்த்தியும் இந்தக் கிராமம் வரையில் வந்து எட்டியிருக்கிறது!''

''மெய்யாகவா, குண்டோதரா!''

''ஆம் பிரபு! அந்தச் சண்டையிலே குமார சக்கரவர்த்தி நிகழ்த்திய மகத்தான வீரஸாகஸச் செயல்களைப் பற்றியும் இங்கேயெல்லாம் தெரிந்திருக்கிறது. அதையெல்லாம் பற்றிச் சவிஸ்தாரமாகச் சொல்ல வேண்டுமென்று கிராமவாசிகள் என்னைக் கேட்டுக்கொண்டார்கள். அவர்களுக்கு இராத்திரி சாவகாசமாய்ச் சொல்லுவதாக வாக்களித்திருக்கிறேன். இப்போது கோவில் பிராகாரத்திலே அவர்கள் கூடியிருப்பார்கள். நீங்களும் வருகிறீர்களா?'' என்று குண்டோதரன் கேட்டான்.

''வருகிறேன்; ஆனால் நீ ஏதாவது விஷமம் செய்து என்னைக் காட்டிக் கொடுத்து விடக்கூடாது!'' என்றார் மாமல்லர்.

கோயில் பிராகாரத்தில் நந்தி மேடையின் படிக்கட்டில் குண்டோதரனும் மாமல்லரும் உட்கார்ந்திருந்தார்கள். நந்தி மேடை, பலிபீடம் இவற்றைச் சுற்றிப் பிராகாரத்தில் செங்கல் - சுண்ணாம்பினால் தளவரிசை போடப்பட்டிருந்தது. அந்தச் சுத்தமான தளத்தில் கிராமவாசிகள் பலர் உட்கார்ந்திருந்தார்கள்.

புள்ளலூர்ச் சண்டையைப் பற்றி அவர்களிடம் குண்டோதரன் சண்டப் பிரசண்டமாக வர்ணனை செய்தான். அந்தச் சண்டையிலே முக்கியமாகக் குமார சக்கரவர்த்தி மாமல்லர் காட்டிய தீர ஸாகஸங்களைப் பற்றி உற்சாகமாக விவரித்தான்.

''மாமல்லர் எப்படிப் போர் செய்தார் தெரியுமா? இந்தக்கணம் பார்த்தால் இங்கே இருப்பார்; மறுகணம் பார்த்தால் அதோ அந்த மதில் சுவருக்கு அப்பால் இருப்பார். அந்தப் பெரிய போர்க் களத்திலே மாமல்லர் எங்கே போரிட்டுக்

கொண்டிருக்கிறார் என்பதை எந்த நேரத்திலும் கண்டுபிடித்து விடலாம். மகா விஷ்ணுவின் சக்கராயுதத்தைப் போல் எங்கோ ஒரு ஜொலிக்கும் வாள் அதி வேகமாகச் சுழன்று எதிரிகளின் தலைகளை வெட்டிக் குவித்துக் கொண்டிருக்கிறதோ, அங்கே மாமல்லர் இருக்கிறார் என்று தெரிந்துகொள்ளலாம். அப்படி மின்னல் வேகத்தில் வாளைச் சுழற்றிப் பகைவர்களை ஹதாஹதம் செய்யக் கூடிய வீராதி வீரர் வேறு யார்? மாமல்லருடைய வாளிலே அன்றைக்கு யமனே வந்து உட்கார்ந்திருந்தான். அவர் சக்கராகாரமாகச் சுழன்று வாளை வீசிய போது, ஒன்று, பத்து, ஆயிரம் என்று எதிரிகள் உயிரற்று விழுந்தார்கள்...!"

"ஆஹா! அபிமன்யு செய்த யுத்தம் மாதிரி அல்லவா இருக்கிறது!" என்று கூட்டத்தில் ஒருவர் கூறினார். அந்த ஊரிலும் சில காலமாக மகாபாரதம் வாசிக்கப்பட்டு வந்தது. அதனால் எல்லாரும் அருச்சுனன் - அபிமன்யு நினைவாகவே இருந்தார்கள்!

குண்டோதரன் கூறினான்: "ஆம், மாமல்லர் அன்று அபிமன்யு மாதிரிதான் போர் புரிந்தார். ஆனால் ஒரு வித்தியாசம். அபிமன்யு போர்க்களத்தில் மாண்டு போனான். புள்ளலூர்ச் சண்டையிலோ மாமல்லரின் வாளுக்கு முன்னால் நிற்க முடியாமல் எதிரிகள் புறமுதுகிட்டு ஓடத் தொடங்கினார்கள். எல்லோருக்கும் முன்னால் ஓட்டம் பிடித்தவன் கங்கநாட்டு அரசன் துர்விநீதன்தான்!"

"துர்விநீதன் எந்தப் பக்கம் ஓடினானோ?" என்று ஒரு கிராமவாசி கேட்டான்.

"தெற்கு நோக்கி ஓடி வந்ததாகத்தான் கேள்வி. தென்பெண்ணை நதி வரையில் அவனைப் பின்தொடர்ந்து மாமல்லரும் தளபதி பரஞ்சோதியும் வந்ததாகக் கூடக் கேள்வி" என்று சொல்லி வந்த குண்டோதரன், மாமல்லர் பக்கம் திரும்பிப் பார்த்து, "ஏன் ஐயா, என் கையைக் கிள்ளுகிறீர்?" என்றான்.

மாமல்லரின் கண்களில் கோபக்குறி காணப்பட்டது.

இதற்குள் கூட்டத்தில் இன்னொருவர், "ஆமாம், இந்த விவரமெல்லாம் உனக்கு எப்படி அப்பா தெரிந்தது? ஆயனரின் சீடனுக்குப் போர்க்களத்தில் என்ன வேலை?" என்று கேட்டார்.

"நல்ல கேள்விதான்: உங்களிடம் உண்மையைச் சொல்லாமல் முடியாது போலிருக்கிறது!" என்று சொல்லிக் கொண்டே குண்டோதரன் எழுந்து மாமல்லரிடமிருந்து சற்று அப்பால் போய் நின்றான்.

"இதோ இருக்கிறாரே, என் பக்கத்தில், இவர்... இவர்தான்... ஏன் ஐயா, இப்படி என்னை உறுத்துப் பார்க்கிறீர்... இவர் தான் உண்மையில் ஆயனருடைய உத்தம சிஷ்யர். நான் பல்லவ சைனியத்தைச் சேர்ந்தவன். துர்விநீதனைத் தொடர்ந்து வந்த மாமல்லருடன் நானும் வந்தேன். வழியில் என் குதிரையின் கால் ஒடிந்து விழுந்து விட்டபடியால் பின்தங்கி விட்டேன். பிறகு வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டு இவர்களுடைய தெப்பத்தில் ஏறி உயிர் தப்பினேன்!"

உடனே, கூட்டத்திலிருந்தவர்கள் ஒருவரையாருவர் விலாவிலே விரலால் சீண்டியும் வேறுவிதமாகக் கவனத்தை இழுத்தும் காதோடு இரகசியம் பேசிக் கொண்டார்கள். 'குண்டோதரன் ஆயனரின் சிஷ்யனாக இருக்க முடியாது' என்று அவர்களில் பலர் முன்னாடியே ஊகித்ததாகச் சொல்லிக்கொண்டார்கள்.

"மாமல்லரும் ஒருவேளை இந்த வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கலாமோ?" என்று ஒருவர் கூறினார்.

"அதை நினைத்தால் எனக்கு ரொம்பவும் கவலையாயிருக்கிறது!" என்றான் குண்டோதரன்.

"ஒருவேளை இங்கேயே அவரும் வந்து ஒதுங்கினாலும் ஒதுங்கலாம்" என்று இன்னொருவர் சொன்னார்.

"ஒதுங்கினாலும் ஒதுங்கலாம்!" என்றான் குண்டோதரன்.

(தொடரும்)

'உள்ட்டியில்தானே மலர்க் கண்காட்சி நடப்பதாகச் சொன்னார்கள். சென்னையில் எப்படி?' என்று பார்வையாளர்கள் ஒரு கணம் ஜில்லென்று திகைத்துப் போன அனுபவம் சமீபத்தில் கிடைத்தது. நன்றி: 'டிஸைன் கலெக்ஷன் 2002' நடத்திய நிஃப்ட் (என்.ஐ.எஃப்.டி) மாணவ மணிகள்.

'கிருஷ்ணலீலா', 'திருச்சூர்பூரம் ராப்ஸோடி' போன்ற ட்ரெடிஷனல் டிஸைன்களிலிருந்து, 'ஸ்பிலிட் வைட் ஓபன்', 'ஸ்பிரிட் எர்தன்' போன்ற ட்ரெண்டி டிஸைன் வரை வண்ணக் களஞ்சியமான உடைகளில் அன்னக்கிளிகள் அழகு நடை போட்டன.

'ஃப்யூச்சர் டிரைப்ஸ்' என்ற பெயரில், பழைய பொருட்களிலிருந்து வருங்கால ஆடையைத் தயாரித்திருந்த ப்ரதீப்பும், மனவளர்ச்சி குன்றியவர்களுக்காக மிக எளிதாக அணியக் கூடிய ஆடையை வடிவமைத்திருந்த தீப்ஸிகாவும் கைதட்டல்களைக் குவித்தனர்.

''இந்திய மாணவர்களை, சர்வதேச ஃபேஷன் அரங்குக்குத் தயார் செய்ய வேண்டியிருப்பதால், மேலை நாட்டுக் கலாசாரம் தவிர்க்க முடியாதது. எங்கள் மாணவர்கள் உள்ளூர் சந்தைக்கு ஏற்ற உடைகளைத் தயாரிப்பதிலும் கெட்டிக்காரர்கள்தான்'' என்றார் நிஃப்ட் இயக்குநர் எஸ்.வி. சங்கர்




















• இவ்வாண்டு பரிசு பெற்ற ஆ
கிருஷ்ண லீலா!

# கிருஷ்ணா-2002!

# நடக்குமென்பார்; நடக்கும்!



**மேஷம் :** இந்த வாரம் பண நடமாட்டத்துக்குப் பஞ்சமில்லை. தாராளமா புரளும். பணப் பிரச்னையில்லை. மனப் பிரச்னையில்லை. புதிய முயற்சிகள் வெற்றி பெறும். தெளிவான மனநிலையும் நம்பிக்கையும் ஏற்படும். சிலர் அலுவலக வேலையா வெளியூர் போக வேண்டி வரலாம். குடும்பத்துல மகிழ்ச்சி பெருகும். சிலர் புது வீடு கட்டும் / வாங்கும் வாய்ப்பிருக்கு. கலைத்துறையைச் சேர்ந்தவங்களுக்கு ஆதாயம் கூடும்.



**ரிஷபம் :** புதுசா வீட்டுக்குப் பொருட்கள் வாங்குவீங்க. இதனால வீட்ல குதூகலம் நிரம்பி வழியும். அலுவலகப் பணியாளர்களுக்கு இடமாற்றம், பதவி உயர்வு தேடி வரலாம். எதிரிகள் விலகிப் போவாங்க. எதிர்ப்புகள் குறையும். வெளியூர் / வெளிநாடு டூர் போக சந்தர்ப்பம் வரும். வியாபாரம் பண்றவங்களுக்கு இதுவரை இருந்து வந்த தடைகள் நீங்கும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் பெயர் புகழ் கூடும்.



**மிதுனம் :** இதுவரை லேட்டாகிட்டிருந்த காரியங்கள் தடபுடலா நடக்கும். எதிர்பாராத பண வரவு உண்டு. அடிக்கடி எரிச்சல் பட வைத்த தடைகள் இனி மாயமாயிடும். சிக்கலான காரியங்கள்கூட உங்க சமயோசித புத்தியால சட்டுனு நிறைவேறும். சினிமா துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. பெயர் புகழ் கூடும். பெண்கள் ஜாலிடூர், பங்ஷன், பார்ட்டின்னு செல்ல வாய்ப்பிருக்கு. குடும்பத்தோட வெளியூர் போக வாய்ப்பிருக்கு.



**கடகம் :** 'வெற்றிமீது வெற்றி வந்து என்னைச் சேரும்'னு தைரியமா இந்த வாரம் பாடலாம். இதுவரை தாமதமாகிவந்த காரியங்கள் சுமுகமா முடியும். வேலை செய்யற இடத்துல நல்ல திருப்பம் வரும். புனித காரியங்கள், தெய்வப் பணிகளில் ஈடுபாடு அதிகரிக்கும். எடுத்த காரியங்கள் தடைகள் நீங்கி நன்மையில் முடியும். புதிய முயற்சிகள் வெற்றி கொண்டு வரும். வீடு மனை வாங்கல் விற்றல் வகையில் நன்மை உண்டாகும். வீண் அலைச்சலைத் தவிர்ப்பது நல்லது.



**சிம்மம் :** மனசுல இருந்த குழப்பங்கள் எல்லாம் 'ஜூட்'டாகி உற்சாகமான சூழ்நிலை ஏற்படும். நீங்களே அதிசயிக்கிற மாதிரி சில காரியங்கள் நடக்கும். வேலையில் எதிர்பாராத சிக்கல்கள் ஏற்பட வாய்ப்பிருக்கு. இருந்தாலும் அதை சாமர்த்தியமா சமாளிப்பீங்க. குடும்பத்துல குதூகலமான சூழ்நிலை உருவாகும். சிலர் வாகனம் வாங்க வாய்ப்பிருக்கு. தாமதப்பட்டு வந்த திருமணம் இப்ப நடக்க வாய்ப்பு கூடி வரும். அரசியல்வாதிகளுக்குப் புதிய திருப்பம் காத்திருக்குது.



**கன்னி :** இந்த வாரம் புனிதப் பணிகள் தெய்வீகப் பணிகளில் ஈடுபாடு அதிகரிக்கும். வேலை விஷயத்தில் எதிர்பாராத நன்மை உண்டாகும். கணிதம், எழுத்து, பத்திரிகை துறைகளைச் சேர்ந்தவங்க மற்றவங்க வியக்கும்படியா சாதனை பண்ண வாய்ப்பிருக்கு. மாணவர்களில் சிலர் மேல் படிப்புக்கு வெளிநாடு போக வாய்ப்பிருக்கு. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் புகழ் பாராட்டு உண்டு. ரொம்ப நாளா வராமல் இழுத்தடிச்சிட்டிருந்த பணம் இப்ப வந்து சேர்ந்து வயிற்றில் பால் வார்க்கும்.



**துலாம்** : இந்த வாரம் தெய்வ பலம் உங்களுக்கு அதிகரிக்கும். மனசுல உற்சாகம் தன்னம்பிக்கையும் பிறக்கும். எடுத்த காரியத்தை எப்பாடுபட்டாவது நிறைவேற்றிடுவீங்க. சங்கடங்கள் தடைகள் இந்த வாரம் புஸ்..! அலுவலகத்தில் உயரதிகாரியின் பாராட்டு கிடைக்கும். உள்ளூர், வெளிநாட்டு வியாபாரத்தில் லாபம் கொட்டும்; செலவு கட்டுக்கடங்காமல் போகும். பெண் களுக்கு இது உற்சாகமான வாரம். புதிய நகைகள், துணிமணிகள் வாங்க வாய்ப்பிருக்கு.

**விருச்சிகம்** : இந்த வாரம் நீங்க நினைத்த காரியங்கள் வெற்றிகரமா நடக்கும். புதிய தொழில், வேலை வாய்ப்பு களில் சிலருக்கு வெற்றி கிட்டும். சிலருக்கு வெளிநாடு போக வாய்ப்பிருக்கு. பண வசதிக்குப் பஞ்சமில்லை. குடும்பத்துல விருந்து உபசரிப்பு, உல்லாசம் நிறைந்திருக்கும். வீடு, வாகனம் வாங்க வாய்ப்பிருக்கு. மாணவர்கள் திறமைக்குரிய பயனைப் பெறுவார்கள். கலைத்துறையைச் சேர்ந்தவங் களுக்குப் புதிய வாய்ப்புகள் வந்து சேரும்.





**தனுசு** : இந்த வாரம் மனசுல அமைதியும் தெளிவும் பிறக்கும். மறைமுகமான எதிரிகள் ஓடிப் போவாங்க. அலுவலகப் பணியாளர்கள் உத்தியோகஸ்தர்கள் முன் னணிக்கு உயருவாங்க. வேலை விஷயமாக கடல் கடந்து செல்ல சிலருக்கு வாய்ப்பு வரும். சுய தொழில் பண்றவங் களுக்கு லாபம். இதுவரை இழுத்தடிச்சிட்டிருந்த பண விவகாரம் இப்ப முடிவுக்கு வரும். குடும்பத்தில சுபகாரியம் நடக்க வாய்ப்பிருக்கு. பெண்களுக்கு ஜாலியான வாரம்.

**மகரம்** : பண வசதி தாராளமா கிடைக்கும். கோர்ட், வழக்கு விவகாரங்களைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். அனுகூலமான திருப்பம் வரும். இதுவரை தாமதமாகி வந்த காரியங்கள் இப்போது முடிவுக்கு வரும். புதிய வேலை கூடுதல் பொறுப்பு சிலருக்குக் கிடைக்கலாம். சுய தொழில், தனியார் நிறுவன ஊழியர்களுக்குப் பெயர், புகழ் பாராட்டு உண்டு. வியாபாரத்தில் வர வேண்டிய பணம் வந்து சேரும்.





**கும்பம்** : இந்த வாரம் தெய்வபலம் உங்களுக்குச் சாதகமா இருக்கு. பொருளாதாரம் நிம்மதி தரும். கடன்களிலிருந்து விடுபட வாய்ப்பிருக்கு. தொழில் பண்றவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. எதிரிகள் மறைந்து போவாங்க. இதுவரை இருந்த வந்த இடையூறுகள் இனி வராது. மாணவர்களுக்கு உழைப்புக்குரிய பலன் உண்டு. பணம் கொடுக்கல் வாங்கல் விவகாரத்துல எச்சரிக்கை அவசியம். புதிய தொழில்களில் ஈடுபட சந்தர்ப்பம் வரும். அரசியல்வாதிகள் விழிப்புடன் இருப்பது நல்லது.

**மீனம்** : நீண்ட நாட்களாகப் பார்க்காமலிருந்த நண்பர் கள், உறவினர்களைச் சந்திக்கப் போறீங்க. இதன் மூலமா உங்கள் வாழ்க்கைக்குச் சில நன்மைகள் கிடைக்க வாய்ப் பிருக்கு. கொடுக்கல் வாங்கல் விவகாரத்துல உயர்வான மதிப்பு உருவாகப் போகுது. அலுவலகப் பணியாளர்கள் உயரதிகாரிகள் பாராட்டைப் பெறுவார்கள். வெளியூர், வெளிநாடு போக வாய்ப்பிருக்கு. புதிய முயற்சிகள்ல வெற்றி காணலாம். குடும்பத்தில் மகிழ்ச்சி மழை பொழியும். சிலருக்குத் திருமண முயற்சி கூடி வரும். வீண் அலைச்சலைத் தவிர்த் திடுங்க. உஷ்ண சம்பந்தமான உபாதைகள் வரலாம்.





திருநெல்வேலிக் காரரான இயக்குநர் விக்ரமனுக்கு (ரிஷபம்) பெயர், புகழ் கூடுமாம்!

**அக்னி சர்மா பக்கம்**

**மே 29 முதல் ஜூன் 4 வரை**



ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்®

வழங்கும்

# தேசத்தின் குரல்!

காலை 8.30மணி
ஞாயிறு தோறும்

மகாத்மா காந்தி எப்படி பேசினார் ?

சுபாஷ் சந்திர போஸ் எப்படி உரையாற்றினார் ?

சுதந்திரம் வாங்கியவுடன் நேருவின் குரல் எப்படியிருந்தது?

சுதந்திரம் கொடுத்தவுடன் மவுண்ட் பேட்டன் குரல் எப்படியிருந்தது?

**தன்னிகரற்ற மறைந்த தேசத்தலைவர்களின்
பேச்சுக்களை, அவர்தம் குரலிலேயே
அப்படியே வானொலியில் கேட்க, பொன்னான வாய்ப்பு இது !**

**தேசத்தின் குரல் !
வழங்குகிறார்கள் ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்.**

**ஒவ்வொரு ஞாயிறு அன்றும் காலை 8.30 மணிக்கு,
சென்னை, கோவை, திருச்சி, மதுரை,
வானொலி நிலையங்களில் கேட்டு மகிழுங்கள் !
தவறவிடக் கூடாத அரிய ... மிக அரிய.... வாய்ப்பு இது !**




**இனிப்புக்கு மட்டுமல்ல, இனிமைக்கும் !**

DIMENSIONS/SKS/02-03




# கல்கி வைரவிழா

## ஒவட்டமின்

# சிறுகதைப் போட்டி!

முதல் பரிசு – ரூ.10,000

இரண்டாம் பரிசு – ரூ. 7,500

மூன்றாம் பரிசு – ரூ. 5000

*அலுப்பையெல்லாம் விரட்டியடித்து பி - 12 இன்ஜெக்ஷன் போட்ட மாதிரி இருக்க வேண்டும் உங்கள் சிறுகதை!*

இவ்வாண்டு **அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி** க்கான

*முதல் நிபந்தனை இதுதான்!*
*மற்ற நிபந்தனைகள் வழக்கமானவை:*

- சரித்திரம், சமூகம், மர்மம், நகைச்சுவை என எப்படிப்பட்ட கதையாகவும் இருக்கலாம். கதை, உங்கள் சொந்தக் கற்பனையாக இருக்க வேண்டும்; அவ்வளவுதான்!
- கல்கியில் நான்கு பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதி மொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதி மொழி தர வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2002' என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி**
**47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை – 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : ஜூன் 15.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 4, ஆண்டுமலரில் வெளியாகும்.



***பரிசுகள், கல்கி வைரவிழா நிகழ்ச்சி மேடையில், ஆகஸ்ட் 4, 2002 அன்று வழங்கப்படும்.***

# புக் பேங்க்









**யசோதைகள் - சுப்ர.பாலன்**

சிறுகதைகள். கல்கி உட்பட பல்வேறு பத்திரிகைகளில் வெளியான ஆசிரியரின் பதினான்கு சிறுகதைகள் கொண்ட தொகுப்பு. ஒவ்வொரு கதையும் புதிய அனுபவத்தைக் கொடுக்கிறது.

*கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17. விலை ரூ.20/-*

**நம் எல்லோரிடத்திலும் ஒரு சிற்பி - கமலாலயன்**

வங்க எழுத்தாளர் மகாஸ்வேதாதேவி, மராட்டிய தலித் இலக்கிய முன்னோடி நாராயணன் சர்வே, எம்.டி.வாசுதேவன் நாயர் உள்ளிட்டவர்களின் மொழி பெயர்ப்பு கட்டுரைகளுடன் ஆசிரியரின் கட்டுரைகளும் இத் தொகுப்பில் இடம் பெற்றுள்ளன.

*சிகரம் பதிப்பகம், 4, பேகம் சாகிப் தெரு, டாக்டர் பெசண்ட் ரோடு, மீர்சாகிப்பேட்டை, இராயபேட்டை, சென்னை - 14, விலை ரூ.44*

**முற்றத்தில் வானம் - ம.திருவள்ளுவர்**

தமிழில் சில வருடங்களுக்கு முன்பே முடங்கிப் போய்விட்ட ஹைகூ கவிதைகளின் தொகுப்பு. ஒரு சில, ரசிக்க வைக்கின்றன. சொல் விளையாட்டுகளும், துணுக்குகளும் விரவிக் கிடக்கின்றன பெரும்பாலும். அழகான வடிவமைப்பில் இருக்கிறது புத்தகம்.

*மதி நிலையம், 4(39) தணிகாசலம் ரோடு, பிருந்தாவன் அபார்ட்மென்ட்ஸ், தி.நகர், சென்னை - 17. விலை ரூ.30*

**கூரை**

'இலக்கிய சிந்தனை'யால் தேர்ந்தெடுக்கப்பட்ட கடந்தாண்டின் சிறந்த பன்னிரண்டு சிறுகதைகளின் தொகுப்பு. வே.ராமமூர்த்தியின் கூரை உள்பட பல கதைகள் மனத்தைக் கனக்கச் செய்கின்றன.

*வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17. விலை ரூ.30*

- அழகி



# National Insurance Company Limited

Chennai Regional Office,
P.O.Box, No.5639, Chennai - 600 006.
Tel No. : 8525331 / 8525441 / 8525378

**R E Q U I R E S**

## INSURANCE AGENTS

National Insurance Company Limited is in search of active and dynamic persons of either sex, including bank VRS personnel and housewives having excellent contacts, with a flair for marketing to act as Non-Life insurance Agents for its business operations in Chennai City as well as in and around Vellore and Pondicherry.

**ELIGIBILITY AND OTHER TERMS & CONDITIONS :**

Minimum Age : 18 years. Minimum Educational Qualifications : 12th Standard Pass or equivalent Examination conducted by a recognised Board or institution (for applicants residing in areas with population less than 5000 as per the last census, the required qualification will be 10th Standard)

The appointment is solely on commission basis. The selected candidates can earn remuneration by way of attractive commissions on the amount of premium procured.

The applications must be brief giving only Name, Address, Telephone / Fax Number, Date or Birth, Education Qualification, Sales experience and details of insurance Training undergone, if any.

Short listed candidate will have to undergo 100 hours training, pass written test / interview to qualify for obtaining licence to become agent as per IRDA (Insurance Regulatory and Development Authority) Regulations.

Eligible candidates may please send their applications superscribing the envelope with word AGENTS to the address given above.

---

இல்லத்தரசிகளே! உங்களுக்கு ஓர் அரிய வாய்ப்பு!

இல்லத்தரசிகளே!
நீங்கள்
வீட்டிலிருந்தபடியே
மிகக் குறைந்த
முதலீட்டில் அதிக லாபம்
பெற உலகப் பிரசித்தி பெற்ற
ஜெர்மன் நாட்டின் தலைசிறந்த BOSCH
கம்பெனியின் புதிய படைப்பான LPG
வாட்டர் ஹீட்டர்களை விற்பனை
செய்வதின் மூலம் உங்கள் குடும்ப
வருமானத்தை மேன்மேலும் பெருக்கலாம்!
இந்த வாய்ப்பு கண்டிப்பாக

**மகளிருக்கு மட்டும்!**

இதில் பங்குபெற வயது ஒரு தடையில்லை! தன்னம்பிக்கையும், சுயமுயற்சியில் வெற்றி பெறத் துடிக்கும் மகளிருக்கு நிச்சயமாக இது ஒரு வரப்பிரசாதம்! மேலும், உலகத்தரம் வாய்ந்த **BOSCH** கம்பெனியின் **Channel Partner** ஆவதின் மூலம் சமுதாயத்தில் தங்களுக்கு நிச்சயமாக ஒரு கௌரவ அங்கீகாரம் கிடைக்கும்!

**BOSCH LPG வாட்டர் ஹீட்டரின் சிறப்பம்சங்கள் :**

- மின்சாரம் தேவையில்லை!
- நேரம், பணம் மிச்சம்!
- அதிகபட்சமாக 95° வெந்நீரை சில நொடிகளில் பெறலாம்!
- உங்கள் குடும்பத்திற்கு முழுப் பாதுகாப்பு!
- **ISO 9001** அங்கீகாரம், ஜெர்மனி மற்றும் ஐரோப்பிய தரத்தின் அங்கீகாரம் பெற்றது!
- முழுவதும் தானாக இயங்கும் **(fully automatic)** அமைப்பு கொண்டது.
- விற்பனைக்குப் பிறகு சிறந்த சேவை தரப்படுவதற்கான முழு உத்திரவாதம்!

மேற்கண்ட அத்துணை சிறப்பம்சங்கள் கொண்ட **BOSCH** வாட்டர் ஹீட்டர்களை சென்னை, கோயமுத்தூர், மதுரை, சேலம், திருச்சி, பாண்டிச்சேரி மற்றும் தமிழகத்தின் அனைத்து மாவட்டத் தலைநகரங்கள், மற்றும் தாலுக்காக்களிலிருந்தும், பெங்களூர் மாநகரிலிருந்தும் விற்பனை செய்ய தங்களின் முழு விவரங்களுடன் விண்ணப்பிக்கவும்.

**VIGNESHWAR ENTERPRISES,**
**G-7, Rosy Tower,**
**Nungambakkam High Road,**
**Chennai - 600 034.**
**Phone : 8255565, 8217757**

# பனைமரக்காடே!



• அர்ஜுனப் பெருமாள்

**மா**நிலத்தின் மக்கள் தொகைக்கு இணையாக, எட்டு கோடி பனைமரங்கள் கொண்டது தமிழ்நாடு. இந்த தேசிய மரத்தையே தெய்வமாய் நம்பி, ஜீவனம் நடத்தி வரும் பனைத் தொழிலாளர் எண்ணிக்கை நெல்லை மாவட்டத்தில் மட்டும் நான்கு லட்சம். பதனீர்வாசமும், பனைவெல்ல ருசியும் இன்னும் இங்கே பத்திரமாய் இருக்கிறதா? இந்தப் பழைமை யான தொழிலுக்குப் பாதுகாப்பு கிடைக்கிறதா? நாம் பார்த்து வரப் புறப்பட்டது நெல்லையிலிருந்து இருபது கிலோ மீட்டர் தூரத்திலிருக்கும் திராத்திக்குளம் கிராமத்துக்கு.

புலர்ந்தும் புலராத அதிகாலையில், செந்நிறம் வெளிறிய கிழக்குவானின் பின்னணியில், சின்னதும் பெரிதுமாக இருட்டி நின்ற பனைமரக்காட்டுக்குள் நுழைகிறோம். ஒரு குட்டிப் பனையி லிருந்து சரக்சரக் கென்று ஓசை. இரு முறை ஒலிக்க, மரத்தின் உச்சியை நிமிர்ந்து பார்க்கிறோம். அங்கே ஓர் உருவம் பனையின் பாளையை அரிவாள் கொண்டு சீவுகிறது. மரத்தின் கொண்டை யைச் சுற்றியிருந்த நான் [illegible]கந்து பானைகளைச் [illegible] கலயங்களில் வ[illegible]ந்த பதனீரை, இடு[illegible] கட்டியிருந்த குடுவையில் ஊற்றிக் கொண்டு அந்த உருவம் கீழே இறங்க, அதற்குள் 'பலபல'வென்று விடிந் திருந்தது. ஆனால் மரத்திலிருந்து இறங்கிய முப்பது வயது அர்ஜுன பெருமாளின் முகம் மட்டும் இருண்டிருந்தது. காரணம், அவர் நம்மை போலீஸ்காரர்கள் என்று நினைத்து விட்டிருந்தார்!



"பதனீர்க்காய்ச்சி பொழப்பு நடத்துறோம். நாகூசாம கள்ளுன்னு கேசு போடு வாங்க. சரி, சாம்பிள் எடுங் கன்னா– எடுத்த சாம்பிள் ரிசல்டு பற்றி கோர்ட்டுலே மூச்சு விட மாட்டாங்க. பதனீருக்கும், கள்ளுக் கும் ஒரே வித்தியாசம்தான் இருக்கு. காலை வேளை பனைப் பாளை சீவும் போது, கலையத் துலே சுண்ணாம்புத் தூரு ராவணும் (பூசுதல்). அப்படி ராவாம விட்டுபுட்ட மறுநாள் அது கள்ளு. கள்ளுலே கலப்படம் பண்ணினா அது பாவம். கலப் படம் பண்ணாத கள்ளு மதுவகை இல்லே! அளவோட குடிச்சா உடம்பை வளர்க்கும்"

• பதனீர்க் குடுவையுடன் அமர்கனி

கல்கி 2.6.2002

# விடை கொடு வீடே!

என்றபடி "ஏலே அமர்கனி..." என்று கூவி அழைத்தார். அவரது அழைப்புக்குக் கையில் குடுவையோடு அங்கே வந்து நின்ற சிறுமிக்கு எட்டு வயதிருக்கும். மரத்திலிருந்து 'பொன்' நிறத்தில் இறக்கி வந்திருந்த பதனீரை அமர்கனியின் குடுவையில் ஊற்றியபடி. "பத்தரமா விடலிக்குக் (பதனீர் காய்ச்சும் பனையோலை வேய்ந்த குடிசை) கொண்டு போலே" என்று உத்தரவிட்டபடி அடுத்த பனை நோக்கி நடந்தபடியே நம்மிடம் உடைந்த குரலில் பேசத் தொடங்கினார்.

"நாங்க மூணு பேரு அண்ணன் தம்பிங்க. பதனித் தொழில்லே வருமானம் குறைஞ்சு போச்சு, போலீஸ் தொந்தரவு அதிகமாயிடுச்சுன்னு தெரிஞ்சதும், இந்த பொளப்பே வேணாம்னு இரண்டு அண்ணன்மாரும் கோயமுத்தூருக்குக் கடை வைச்சுப் பிழைக்கலாம்னு போய்ட்டாங்க. இந்தப் பொழப்பு ஆறு மாசம்தான். இப்போல்லாம் முப்பது மரத்துக்கு மேலே ஏற முடியலே. வறட்சியாலே பதனியும் அதிகமா வடியறதில்லே... ஒருநாளைக்கு மூணு கிலோ கிடைக்குது. அதை அன்னைக்கே கடையிலே வித்துட்டு, சாப்பாட்டுச் செலவைச் சமாளிச்சுடுவோம். கிலோ இருவதுக்கு மேலே போவறது இல்லே... நல்ல வெல கிடைச்சாத்தானே வைச்சிருந்து விக்கலாம்.... எனக்கப்புறம் எம் பையனுக்கு இந்தத் தொழிலைச் சொல்லிக் கொடுக்கிறதா இல்லீங்க... நம்மளோட போகட்டும் இந்தக் கஷ்டம் நஷ்டமெல்லாம்..." என்று பெருமாள் வருந்திக் கொண்டிருந்த போதே... அவரது மனைவி பால்தங்கம் அங்கே வந்து சேர்ந்தார்.



• டி.ஆர். சபாபதி



• பால்தங்கம்




விடலியில் அடுப்பை மூட்டி, பதனீர் காய்ச்சத் தொடங்கியதும் அந்த பனைமரக் காடெங்கும் இனிய வாசனை பரவ ஆரம்பித்தது. கூப்பனிப்பதம் (பாயசம் போல) வந்ததும், அடுப்பிலிருந்து இறக்கி, துடுப்பு கொண்டு துழாவினார் பால் தங்கம். ஊறிய ஊறில் சாக்லேட் நிறத்தில் இடமாகிக் கொண்டிருந்தது பனைவெல்லப்பாகு. கொஞ்சமும் தாமதிக்காமல் பனை ஓலைப்பாயில் வரிசையாய் அடுக்கி வைக்கப்பட்டிருந்த சிரட்டைகளில்

(கொட்டாங்கச்சி) பாகை ஊற்றினார். அடுத்த அரைமணி நேரத்தில் கொட்டாங் கச்சியை எடுத்து, உள்ளங்கையில் வைத்து குப்புறத் தட்ட, கருப்பட்டி கொப்பரை வடிவில் வெளியே வந்து கமகமத்தது. கொஞ்சமாய்ப் பிட்டு நாக்கில் வைத்ததும் தேனாய் இனித்தது!

கருப்பட்டியின் இனிப்பைக் காணாது அடிக்கும் சோகச் செய்தியைச் சொல்கிறார் தட்சிணமாற நாடார் சங்கத்தின் செய லாளர், ஆணையாளர் டி.ஆர். சபாபதி.

"இந்தத் தொழிலை நம்பி வாழ்ந்து கொண்டிருந்த நெல்லை, விருதுநகர், தூத்துக் குடி மாவட்டங்களைச் சேர்ந்த தொழிலாளி களில் சுமார் ஒரு இலட்சத்து ஐம்பதாயிரம் பேர், பிழைப்பின்றி மும்பை வரை புலம் பெயர்ந்து போய்விட்டார்கள். ஒவ்வொரு ஆட்சி வரும்போதும் நமக்கு விடிவு பிறக் காதா என்று எதிர்பார்த்து கடந்த ஐம்ப தாண்டுகளில் இந்தப் பனை மற்றும் தென்னை மரத் தொழிலாளர்கள் ஏமாந்து போனது தான் மிச்சம்.

கடலில் மீன் பிடிக்க இயலாத காலங் களில் மீனவர்களுக்கு அரசு உதவித் தொகை தருகிறது. அவர்களை விட பின்தங்கிய நிலையிலிருக்கும் இந்தத் தொழிலாளர் களைத் திரும்பிக் கூடப் பார்ப்பதில்லை. தாய்லாந்து போன்ற நாடுகளில் பனம்பழ ஜாம், பனம்பழ ஜூஸ், டின்களில் பதப் படுத்தப்பட்ட கள், பதனீர் என்று ஏற்றுமதி செய்து கொண்டிருக்கும்போது, நமது பனை வாரியம் மட்டும் கோமா ஸ்டேஜில் இருக் கிறது! ஊழல் புரையோடிக் கிடக்கும் கதர் வாரியத்தின் பிடியில் கிடந்து கதறுகிறது. இன்னொரு பக்கம் விஷக்கள் என்று பொய் வழக்கு போடும் காவல் துறையினரின் அத்துமீறல்.

அரசின் பாராமுகமும், காவல் துறையின் பணம் பறிக்கும் போக்கும் தொடர்ந்தால், இன்னும் பத்தாண்டுகளில், பனைத்தொழில் குறித்த ஓர் அரங்கத்தை அருங்காட்சி யகத்தில்தான் பார்த்துத் தெரிந்து கொள்ள முடியும் என்கிறார் சபாபதி.

இத்தனைக்கும் பனை மரத்தை, தமிழ கத்தின் சின்னமாகவே அறிவித்து ஓர் அர சாணை சில ஆண்டுகளுக்கு முன் வெளி யாயிற்று!

---

"ஆட்டோ டிரைவரோட துணி எடுக்க கடைக்குப் போனது தப்பாப் போச்சு!"

"ஏன்?"

"அங்கே போய் மீட்டருக்கு மேல போட்டு கொடுக்கச் சொல்லி தகராறு பண்றார்!"

— சக்தி சரவணன்



## ஜோக்குத் தெரிஞ்ச ரூட்டுக்காரன்!

"அந்த ஆட்டோ டிரைவர் பயந்த சுபாவம் போல!"

"எப்படிச் சொல்ற?"

"'ரவுடிகளுக்கு இலவசம்'னு ஆட்டோவுல எழுதியிருக்காரே!"

— அம்பை தேவா

# சித்திரச் சிந்தனைகள்...

ஓவியர் கோபுலுவின் வலக்கரம் இயங்கவில்லை, ஆனால் இடக்கரத்தால் வரைகிறார் என்று பத்திரிகைகளில் படித்தபொழுது மனம் வருத்தமும் சந்தோஷமும் ஒருங்கே அடைந்தது. புகைப்படக் கலைஞர் க்ளிக் ரவியோடு அவர் வீட்டுக்கு விரைந்தேன். அவரைப் பார்ப்பதற்கும் முன் அவர் வலக்கரத்தைத் தான் பார்த்தேன். கோபுலுவின் வலக்கரம் அவர் மனைவி மைதிலி.

திருமதி கோபுலு கவலையோடு பேசினார். மருத்துவமனையில் சேர்க்கப்பட்டிருக்கும் கணவரிடம்தான் அவர் மனம் முழுவதும் குடியிருந்தது. கணவருக்கு அன்று இரவு சாப்பிட, கஞ்சி தயார் செய்து கொண்டிருந்த அவர் சொன்னார். 'அவர் மூலவர் மாதிரி இல்லை. உற்சவ மூர்த்தி மாதிரி. வெளியே சுறுசுறுப்பாக ஓடிக் கொண்டே இருப்பார். அவரைப் போய் கட்டிலில் படுத்துக் கொண்டிருக்கச் சொன்னால் என்ன செய்வார் சொல்லுங்கள்!' பெண்மணிகள் தங்கள் கணவர் மேல் செலுத்துகிற அன்பு என்னும் கயிற்றால் தானே இந்தியக் கலாசாரம் இறுக்கிக் கட்டப்பட்டிருக்கிறது?


• கோபுலு


• ஜெயசிற்பியன்

மருத்துவமனை சென்று கோபுலுவைச் சந்தித்தேன். எப்போதும் இதயத்தைத் தடவிக் கொடுக்கிற மாதிரி மிருதுவாகப் பேசுபவர். யாரையும் அவர் குறைசொல்லி நான் கேட்டதில்லை. எல்லாம் வாழ்வின் போக்குத்தான் என எதையும் அமைதியாக ஏற்கும் பக்குவம் கொண்டவர். ஓவியர்களுக்கு மூன்று கை உண்டே. வலக்கை, இடக்கை, தூரிகை. கோபுலுவுக்கு நான்காவது கையும் உண்டு. நம்பிக்கை. ''எப்படி இடது கையால் வரைய முடிகிறது?'' வியப்போடு கேட்டேன். "மூளை தானே வரைகிறது. கை வெறும் கருவிதானே? ஒரு கருவி தற்காலிகமாகப் பழுதுபட்டிருப்பதால் இன்னொரு கருவியை உபயோகிக்கப் பழகி வருகிறேன். அவ்வளவுதான்!'' என்றார் இயல்பாய்.


• சேதுராமன்

என் நினைவுகள் பின்னோக்கிப் பாய்ந்தன. கதிரில் வெளிவந்த உயர்ந்த படைப்புகள் பலவற்றுக்கும் ஓவியம் கோபுலுதான். ஜெயகாந்தனின் 'சில நேரங்களில் சில மனிதர்கள்', 'ரிஷிமூலம்' 'அப்புவுக்கு அப்பா சொன்ன கதைகள்...' போலந்து போய்வந்த அனுபவத்தில் இந்திரா


• ராஜம் கிருஷ்ணன்

பார்த்தசாரதி எழுதிய 'ஏகவின் தோழர்கள்....' எல்லாவற்றுக்கும் படங்கள் கோபுலு. 'கோதை சிரித்தாள்' என்ற தம் தொடர்கதைக்கு கோபுலு படம் வரைகிறார் என்றறிந்து க.நா.சு. என்னிடம் சொன்ன வாக்கியம் : 'அடே! பெரிய பெருமை தானய்யா எனக்கு!'



• ஜெயகாந்தன்



• ஜானகிராமன்

ராஜம் கிருஷ்ணன் பத்திரிகைகள் மூலம் தொடர்கதைகளாக எழுதியது குறைவு. பெரும்பாலும் நேரடியாகப் புத்தகங்களாகவே எழுதுபவர். அவரது தனித்தன்மை கள ஆய்வு. அவர் படைப்புகள் வீட்டில் உட்கார்ந்து யோசித்து எழுதியவை அல்ல. வெளியில் சென்று ஆராய்ந்து எழுதியவை. அவர் கதிரில் எழுதிய தொடர்கதைகள் பெண்சிசுக் கொலை பற்றிய 'மண்ணகத்துப் பூந்துளிகள்', சுதந்திரப் போராட்ட வீராங்கனை மணலூர் மணியம்மை பற்றிய 'பாதையில் பதிந்த அடிகள்'.

'மண்ணகத்துப் பூந்துளிகள்' தொடர் தொடங்குவதற்கு முன் ''யார் படம் வரையப் போகிறார்கள்?'' என்று விசாரித்தார் ராஜம் கிருஷ்ணன். ''கோபுலுவிடம் கேட்கலாம். அவர் ஊரில் இல்லை. வந்ததும் கேட்க வேண்டும்'' என்றேன். ''என் கதைகள் எதற்கும் இதுவரை கோபுலு வரைந்ததில்லை. அவர் வரைந்தால் நான் மகிழ்வேன்'' என்றார் அவர். இந்தத் தகவலைக் கோபுலுவிடம் சொன்னேன். ''அடேடே. எனக்கு அவர் கதைக்குப் படம் வரைய சந்தர்ப்பம் நேர்ந்ததில்லை. நான் அவர் எழுத்தை விரும்பி வாசிப்பவன். அவர் கதைக்கு வரைவது எனக்கும் மகிழ்ச்சி'' என்றார் கோபுலு.

ராஜம் கிருஷ்ணன் எழுத்துக்குப் படம் வரைவது கொஞ்சம் சிரமம்தான். கள ஆய்வு செய்து எழுதுபவர் ஆதலால் ஓவியரும்கூட அந்தக் களம் குறித்து ஆய்வு செய்துகொண்டால் தான் ஈடுகட்ட முடியும். ரெஃபரன்ஸ் இல்லாமல் பொத்தாம் பொதுவாக ஓவியம் வரைய இயலாது. கோபுலு கதை நடந்த களத்திற்கும் கால கட்டத்திற்கும் வாசகர்களை (தூரி)கையைப் பிடித்து அழைத்துச் செல்வதில் கைதேர்ந்தவர். ராஜம் கிருஷ்ணனின் இலக்கியப் பயிருக்கு கோபுலுவின் ஓவியங்கள் உரம் சேர்த்தன. கதிர் நல்ல விளைச்சல் கண்டது. வாசகர்களுக்குச் சிறப்பான அறுவடைதான்!

தி. ஜானகிராமனின் செம்பருத்தி கோபுலுவின் ஓவிய உதவியோடு அல்லவா கதிர்ப் பக்கங்களில் உல்லாசமாய்ப் பூத்தது! ஆழ்ந்த இலக்கியத்திற்கும் கோபுலுவுக்கும் ஓர் அதிசயமான இணைப்பு உண்டு. சிறந்த வாய்ப்பாட்டிற்கு அதற்கு ஈடுகொடுக்கும் வகையிலான உயர்ந்த பக்கவாத்தியம் வேண்டும். அப்போது தான் அது சோபிக்கும். ஆழ்ந்த இலக்கியக் கச்சேரியைப் பல்லாண்டுகளாத் தொடர்ந்து சோபிக்கச் செய்துவருவது கோபுலுவின் ஓவியப் பக்கவாத்தியம் தான்.

கடந்த கால் நூற்றாண்டாய் நான் பத்திரிகை ரீதியாக கோபுலுவோடு நட்புறவு கொண்டிருக்கிறேன். ஒருமுறை - ஒரே முறை - கூட, குறித்த காலத்தில் அல்லாமல் அவர் படம் தாமதமாய் வந்து பத்திரிகை சிரமப்பட்டதில்லை. அவர் வெளியூர் போகிறார் என்றால் குறித்த காலத்திற்கு முன்கூட்டியே படம் அலுவலகத்திற்கு வந்துவிடும். சிந்து சமவெளிக் காலத்தில் அனுப்பப்பட்ட கல்வெட்டுத் தொடர் கதைக்கு, இன்றுகூட 'இதோ நாளை படம் அனுப்பிவிடுகிறேன்!' என்று சால்ஜாப்புச் சொல்லும் சில ஓவியர்கள் உண்டு. அவர்கள் கோபுலுவிடமிருந்து கலையைக் கற்பதோடு காலந்தவறாமையையும் கற்க வேண்டும்.

பழைய புத்தகக் கடைகளில்

## திருப்பூர் கிருஷ்ணன்



"ஏம்ப்பா கபாலி, தெற்குத் தெருவிலே ஏழாம் நம்பர் வீட்டிலும், பதினாலாம் நம்பர் வீட்லேயும் கொள்ளையடிக்க வேண்டாம்ங்றே!"

"ரெண்டு பேர் வீட்லேயும் போன வாரம்தான் எல்கேஜிக்கு ஃபீஸ் கட்டியிருக் காங்க. ஒண்ணும் தேறாது"

- மங்கை

---

"ஆத்தா கோழி வளர்த்தா, ஆடு வளர்த்தா, மாடு வளர்த்தா! ஆனா நாயை மட்டும் வளர்க்கலை. ஏன் தெரியுமா?"

"ஏன்?"

"நாய் வளர்க்க பாங்குல லோன் தரமாட் டேன்னுட்டாங்களாம்!"

- ரகோத்தமன்




---

"நம்ம தொகுதி எம்.எல்.ஏ.வுக்கு மக்கள் மேல் எவ்வளவு அக்கறை பார்த்தீங்களா.. தினமும் கோயிலுக்கு வந்து 'அன்னதானம்' நல்லபடியா நடக்குதான்னு பார்வையிட்டு விட்டுப் போறாரே!"

"நீங்க ஒண்ணு! அன்னதானத் திட்டத் துக்காக ஒரு மாசச் சம்பளத்தைக் கொடுத் துட்டாருன்னு அவரோட சம்சாரம் ஒரு மாசமும் கோயில்லயே சாப்பிடச் சொல் லிடுச்சாம்..."

- சிங்கை சக்தி குணசீலன்



பைண்ட் செய்யப்பட்ட பத்திரிகைத் தொடர்கதைகள் கோபுலு படத்தோடு இருந்தால், கூடுதல் விலை கேட்கிறார்கள். விகடனில் வெளி வந்த ஜெகசிற்பியனின் 'ஆலவாய் அழகன்,' கொத்தமங்கலம் சுப்புவின் 'தில்லானா மோகனாம்பாள்' தொடங்கி அவர் ஓவியங்களால் புகழ்பெற்ற படைப்புகள் எத்தனை எத்தனை! நகைச்சுவைத் துணுக்கிலும் சாதனை படைத்தவர். தொலைபேசி புதிதாக வந்த தருணத்தில் கோபுலு விகடனில் எழுதிய அட்டைப்படத் துணுக்கு :

**மகள் : அப்பா! தொலைபேசி!**

**அப்பா : நீயே பேசித் தொலை!**

கோபுலுவிடமிருந்து விடைபெறும் முன் அவரது பழைய நண்பரும் டபிள்யு எஸ் நிறுவன ஸ்தாபகருமான அமரர் சேது ராமன் பற்றிப் பேச்சு வந்தது. சேதுராமன் விகடனில் கார்ட்டூன்கள் வரைந்து கொண்டிருந்த சிறந்த ஓவியரும்கூட. ஆனால் அவர் வேறு திசையில் பயணப் பட்டார். டபிள்யு எஸ் இண்டஸ்ட்ரீஸ் முதலாளியாகிப் பெரும் தொழிலதிபராக உயர்ந்தார். அவரைப் பற்றிச் சொல்லும் போது கோபுலு சொன்னார். "இலக்கிய வாதிகளும் ஓவியர்களுமான நாமெல்லாம் வாழ்க்கைப் பாதையில் ஓரிடத்தில் நின்று பயணம் செய்பவர்களைப் பற்றிப் பதிவு செய்கிறோம். நம் நண்பர்களில் சிலர் நம்மிலும் உயர்ந்த இடங்களுக்குப் பயணப் படும்போது, அதையும் பதிவு செய்து அவர்களை வாழ்த்துகிறோம். ஓர் ஓவியர் தொழிலதிபரானது ஓவியர்கள் அனை வருக்குமே பெருமை தருவதல்லவா!"

பிறரது எந்தத்துறைச் சாதனையையும் மனப்பூர்வமாக அங்கீகரித்துத் தம் சாதனைபோல் கொண்டாடும் உயர்ந்த மனப்பக்குவம் - அடடா! அதுவல்லவா இடது கையால் படம் வரைந்து, வாழும் போதே வரலாறாகிற தன்னுறுதியை கோபுலுவுக்குத் தந்திருக்கிறது!

(தொடரும்)

## 2

'கெட்டிமேளம்... கெட்டிமேளம்... கெட்டிமேளம்' என்று மேடையில் உள்ளவர்கள் உரத்த குரலில் கூவி ஒற்றை விரலை ஆட்ட, அதை வாங்கி அந்த பெரிய கூடத்திற்கு நடுவே இருந்தவர்கள் மீண்டும் எதிரொலிக்க, கை உயர்த்தி விரல் அசைக்க அது வாசற்படிக்கு அருகே உட்கார்ந்திருந்த நாதஸ்வர கலைஞருக்குப் போய் அவர் நாதஸ்வரம் பிளிறலாய் மணமக்களை வாழ்த்த, கெட்டி மேளம் கொட்டப்பட்டது.

அந்த இளைஞன் ராதாகிருஷ்ணனின் மைத்துனி சாருமதி கழுத்தில் மாங்கல்யக் கயிறை வைத்து ஒரு முடிச்சுப் போட்டான். அந்த இளைஞனின் சகோதரிகள் இரண்டு பேரும் மற்ற இரண்டு முடிச்சுகளையும் போட்டார்கள். கூடத்திலிருந்த நூற்று நாற்பது பேரும் பூவும் அட்சதையும் கலந்த ஆசிர்வாதங்களை வீச, அங்குள்ளோர் தலையிலெல்லாம் ஆசிர்வாதம் விழுந்தது.

மணமகள் வலது கையைத் தாமரை மொக்கு போல் வைத்துக் கொள்ள மணமகன் அதைக் கெட்டியாகப் பற்றிக் கொள்ள, மணமகளும் மணமகனும் எழுந்து ஹோமத் தீயின் எதிரே அமர்ந்து கொண்டார்கள்.

ராதாகிருஷ்ணனின் மாமனார் வீடு ஆனந்தக் கண்ணீர் வடித்தது. அவருடைய மாமனார் சாம்பசிவம் வலது கையை இடது நெஞ்சில் வைத்து மனசுக்குள்ளேயே இறைவனை நோக்கி நன்றி சொல்லிக் கொண்டிருந்தார். அவர் கண்களிலிருந்து கண்ணீர் வந்தது. மாமியார் விக்கி அழத் துவங்கினாள்.

ராதாகிருஷ்ணனுடைய மனைவி ரேவதி அவன் அம்மாவை அணைத்து தேற்றிக் கொண்டிருந்தாள். ஆனால், அவளும் அழுது கொண்டிருந்தாள்.

முதல் வரிசையில் அமர்ந்திருந்த ராதா கிருஷ்ணனை அவர் மனைவி பார்த்தாள். ரேவதி பார்ப்பது தெரிந்ததும் ராதா கிருஷ்ணன் அவளை நோக்கி கண் சிமிட்டினார்.

ரேவதி இறங்கி ஓடி வந்தாள்.

அவருடைய கைகளைக் கோத்துக் கொண்டாள். அத்தனை பேர் நடுவிலும்



# மனம் உருகுதே...

மெல்ல நெற்றியை அவர் நெஞ்சில் முட்டினான்.

''ரொம்ப தேங்க்ஸ்'' என்று குரல் தழுதழுக்கச் சொன்னான்.



"அடடா... எதுக்கு இதுக்கெல்லாம்? போ. மத்த வேலைகளைக் கவனி."

ராதாகிருஷ்ணன் அவன் தோளை மெல்ல பிடித்து திசை திருப்பி விட்டார். மறுபடியும் நன்றியோடு கண்கள் பனிக்க ரேவதி புருஷனைப் பார்த்து விட்டு மேடைக்கு ஓடினாள்.

ரேவதியின் தம்பி பொரி போட சாருமதிக்கு அருகே உட்கார்ந்து கொண்டான்.

திருமணச் சடங்குகள் ஒவ்வொன்றாய்த் தொடர்ந்தன.

கூட்டத்தின் வெம்மையிலிருந்து தப்பித்துக் கொள்ள மெல்ல ராதாகிருஷ்ணன் வாசலுக்கு வந்தார். நாதஸ்வரக் கலைஞரைத் தாண்டி வீதியை அடைத்துப் போட்டிருந்த பந்தலுக்குப் போய் நின்று அங்குள்ள நாற்காலியில் உட்கார்ந்தார். இலேசாய்ப் பசித்தது. ரேவதி வரட்டும் என்று இரண்டு வெற்றிலைகளைக் கிள்ளி ஒரு சீவலை வைத்து உருட்டி முன் பசிக்காக வாயில் அதக்கிக் கொண்டார்.

"ஸார் ரொம்ப சந்தோஷம்."

ரேவதியின் சித்தப்பா வந்து கைகூப்பினார்.

"வாங்கோ உட்காருங்கோ. என்ன சமாசாரம்?"

அடுத்த நாற்காலியை இழுத்து ராதாகிருஷ்ணன் எதிரே போட அந்தக் கிழவர் தட்டுத் தடுமாறி அதில் உட்கார்ந்து கொண்டார்.

"இந்தக் கல்யாணம் உங்களால நடந்தது. என்ன பண்ணப் போறானோ சாம்பசிவம்னு நினைச்சுண்டிருந்தேன். ஜம்முனு முடிச்சுக் கொடுத்துட்டீர்."

''என்ன ஸார். இது நம்ம வீட்டுக் கல்யாணமில்லையா? சாருமதி நம்ம குழந்தை இல்லையா?''

"யார் ஸார் அப்படி நினைக்கறா? எந்த வீட்டு மாப்பிள்ளையாவது மச்சினியை என் குழந்தைன்னு வாய் நிறைய நீங்க சொல்றா மாதிரி சொல்வானா ஸார்? மாட்டா ஸார். நான் அப்போவே சாம்பசிவனுக்குச் சொன்னேன். என்னடா.. பெரிய இடமா பிடிக்கற. உன்னால முடியுமா? தடுமாறப் போறடான்னு சொன்னேன். கேட்கலை. பகவான் பார்த்துப்பார். பகவான் பார்த்துப்பார்னான். இவன் ஏன் இப்படி அசடு மாதிரி பேசறானோ அப்படின்னு நினைச்சேன். பகவானா நீங்க வந்து காப்பாத்திட்டேள்."

"என்ன உங்க அண்ணாவை அசடுன்னு சொல்றேள். அப்படியெல்லாம் சொல்லா

## பாலகுமாரன்

தீங்க ஸார். அவர் ரொம்ப நல்ல மனுஷர். சாது. மூணு பொண்களுக்குக் கல்யாணம் பண்ணி, மூணு பையன்களைப் பெரிய படிப்பு படிக்க வைச்சுருக்கார். சாதாரணமா இது? ஒண்ணே ஒண்ணுதான் புரியலை'' என்று ராதாகிருஷ்ணன் முகவாய் தடவிக் கொண்டார்.

"என்ன?"

எதிரே இருந்த கிழவர் குனிந்து கேட்டார்.

"கவர்மென்ட்ல இருவத்தஞ்சு, முப்பது வருஷமா பச்சை பச்சையா குடும்பக் கட்டுப் பாடு பத்தி சொல்லித் தரா. ஏன் அதெல்லாம் உங்க அண்ணாவுக்குப் புரியலை. எப்படிக் கூச்சமில்லாத ஆறு குழந்தைகள் பெத்துண்டார் அப்படின்னு ஒரு ஆச்சரியம்."

"அவர் இருக்கறது கிராமம் ஸார். கடைக்குப் போய் கவர்மென்ட் சொல்ற சமாசாரங்களெல்லாம் வாங்க முடியாது. என்ன ஐயரே இன்னிக்கு ஜமாதானா அப்படின்னு கடைக்காரனே கேட்பான். ஒரு கடைக்காரன் ஒரு தடவை கேட்டா வேற எந்தக் கடைக்கும் போய் இந்த மாதிரி பொருள் வாங்க முடியாது ஸார். மறுபடியும் பகவான் கொடுத்தார் பகவான் கொடுத்தார்னு ஆறு பெத்துனுட்டான். ஆனாலும் என்ன ஆறையும் நிமித்திட்டானே. இன்னும் ரெண்டு மூணு வருஷம் பொறுத்துப் பாருங்கோ. இந்த மூணு பசங்களும் சம்பாதிக்கறதுக்கு வெளி நாடு போயிட்டான்னாக்க சாம்பசிவனைக் கையில் பிடிக்க முடியாது. நெஞ்சல தங்கச் சங்கிலி, வலது கையில கங்கணம், இடது கையில மோதிரம்னு வெள்ளையும் வேட்டியுமா உலாவர ஆரம்பிச்சுருவார். அப்போ ஃபாரின் சிகரெட் வாங்கிப் பிடிச்சாலும் ஆச்சரியப்படறதுக்கில்லை."

கிழவர் சொல்ல ராதாகிருஷ்ணன் வாய் விட்டுச் சிரித்தார்.

"ஆக, உங்க அண்ணாமேல அவ்ளோ பொறாமை இருக்கு?"

"இருக்காதா பின்ன. நானும் ரெண்டு பொண்ணு வைச்சுருக்கேன் இல்ல. எப்படி கரையேத்தப் போறேன்னு தெரியலையே?"

"பகவான் இருக்கார் ஸார்."

இந்த முறை ராதாகிருஷ்ணன் சொன்னார்.

"பகவான் இருக்கார்; இல்லைன்னு சொல்லலை. உங்கள மாதிரி பெரியவா ஆசீர்வாதமும் வேணும்" என்று கிழவர் கைகூப்ப ராதாகிருஷ்ணன் எதற்காக கிழவர் எதிரே உட்கார்ந்திருக்கிறார் என்பதைப் புரிந்து கொண்டார்.

"உங்க பொண்ணு கல்யாணம் நடத்தணும் அதானே. நீங்க ஏற்பாடு பண்ணுங்கோ. என்னால என்ன முடிஞ்சுதோ அதை நிச்சயமா தரேன்."

"ஒரு இடம் செட்டிலாகும் போல இருக்கு."

கிழவர் இன்னும் நெருங்கி வந்து சொல்ல, "சாப்ட்டு முடிச்சுட்டுப் பேசலாமே" என்று ராதாகிருஷ்ணன் விலகிக் கொள்ளப் பார்த்தார்.

ரேவதி வாசலுக்கு வந்தாள். சாப்பிடலாமா என்று சைகையில் கேட்டாள்.

வயிற்றில் போன வெற்றிலைச் சாறு பசியை அதிகம் தூண்டியது. ராதாகிருஷ்ணன் சட்டென்று எழுந்தார். 'சாப்டுட்டு வந்துடறேன்' என்று அந்தக் கிழவரிடமிருந்து விலகினார்.

கம்பீரமாய் நடந்து பின்கட்டுப் பக்கம் போனார். நூறு பேர் உட்கார்ந்து சாப்பிடுகின்ற அந்தக் கூடத்தில் அவருக்கென்று மின்விசிறிக்கு அருகே ஒரு இலை போடப்பட்டு அங்கே இரண்டு பேரைக் காவல் வைத்திருந்தார்கள் – வந்தவர்களை வேறு பக்கம் நகர்த்திக் கொண்டிருந்தார்கள்.

அடுத்ததாய் சம்பந்தி வீட்டு இளைஞன் ஒருவன் உட்கார்ந்து கொண்டிருக்க அவர் அவனுக்கருகில் போய் உட்கார்ந்து கொண்டார்.

"உங்க மனுஷா எல்லாரும் உட்கார்ந்துட்டாளா?"

"உட்கார்ந்துட்டா ஸார்."

"அவா மனுஷா யாரையாவது விட்டு வைக்கப் போறேன். நான் அப்புறம் சாப்பிட்டுக்கறேனே'' என்று சொல்ல அந்த



"படத்துலே கதாநாயகனுக்கு அடுக்கடுக்கா சோதனைகள் வருது... அவன் எல்லாத்தையும் தாங்கிக்கிறான்..."

"ரசிகர்களாலே தாங்க முடியுமா?"

– தஞ்சை தாமு

இளைஞன் "வேண்டாம் ஸார். உட்காருங்கோ. வந்திருக்கறது அறுபது பேர். அறுபது பேரும் இலையில உட்கார்ந்தாச்சு. நீங்க தாராளமா உட்காரலாம்."

உணவு வகைகள் பரிமாறப்பட்டன. ராதாகிருஷ்ணனுக்குத் தனித்த மரியாதை அங்கு வழங்கப்பட்டது. ரேவதியின் அப்பா வந்து பந்தி விசாரித்தார். ரேவதியின் தம்பி வந்து கைகட்டி நின்றான். ரேவதி புருஷனுக்கு அருகே நின்று அவருக்குச் சரியாக பரிமாறப்படுகிறதா என்று கவனித்தாள்.

சம்பந்தி வீட்டார்கள் அவரைச் சுட்டிக்காட்டிப் பேசிக் கொண்டார்கள்.

"ரெண்டாவது பொண்ணோட மாப்பிள்ளை. நல்ல வேலையில இருக்கார். சாம்ப சிவனுக்கு நினைச்ச இடத்துலேர்ந்து காசு வரலை போலிருக்கு. டக்குனு இவர் புகுந்து எல்லாத்தையும் ஈடுகட்டிட்டார். அதனால தான் அத்தனை உபசாரம்" என்று பேசிக் கொண்டார்கள்.

கும்பகோணத்துச் சமையல் அற்புதமாக இருந்தது. அதிகம் காரமில்லாமல் அதிகம் உப்பு இல்லாமல் நல்ல மணத்தோடு இருந்தது. ராதாகிருஷ்ணன் அனுபவித்துச் சாப்பிட்டார். ரசம் சாதம் முடிந்ததும் ஒரு கப் பாயசம் வேண்டுமென்று கேட்டார். ரேவதி குரல் கொடுக்க மூன்று நான்கு பேர் ஓடினார்கள். பாயசம் கொண்டு வந்து வைத்தார்கள். உறிஞ்சிக் குடித்து விட்டு கடைசியில் ஒரு துளியை மீதம் வைத்து ரேவதிக்குக் கொடுத்தார். ரேவதி வாயில் கவிழ்த்துக் கொண்டாள். அதையும் சம்பந்தி வீட்டார் பார்த்தார்கள்.

அடுத்த பந்திக்கு ஆள் உள்ளே மெல்ல மெல்ல நகர்ந்தது.

"அப்பா சீக்கிரம் வாங்கோப்பா. அம்மா உள்ளே போ. போய் உட்கார்ந்து சாப்பிடு. பதினோரு மணிக்குச் சத்திரத்தை காலி பண்ணியாகணும். பத்தரை மணிக்கு கட்டு சாதக் கூடை. நீங்க சாப்பிட்டாதான் சரியாக இருக்கும்."

இன்னொரு பந்தியில் பெண் வீட்டார்கள் உட்கார்ந்தார்கள். ராதாகிருஷ்ணன் வேட்டியை மடித்துக் கொண்டு சாம்பார் பக்கெட்டை எடுத்து மனைவிக்கும், மாமனாருக்கும், மாமியாருக்கும் பரிமாறினார். மாமியார் ஏகத்திற்கு வெட்கப்பட்டாள்.

"என்ன இது. நன்னாவே இல்லை" என்று கடிந்து கொண்டாள்.

''ஏங்க, நம்ம மகனுக்கு நெப்போலியன் பற்றி கட்டுரை எழுதிக் கொடுத்தீங்களா..?''

''ஆமாம். அதுக்கென்ன இப்ப...?''

''ஒயின் ஷாப்ல கிடைக்கிற நெப்போலியனைப் பற்றியா கட்டுரை எழுதறதுன்னு கேட்டு வாத்தியார் அடிச்சிருக்கார்; அழுதுகிட்டு வந்து நிக்கறான்!''

— எஸ்.ஓ.வீரன்



''இன்னிக்கு ஒரு நாளைக்கு இந்த மகாபாக்கியத்தைத் தரப்படாதா? எனக்கு அப்பா இல்லை. சின்ன வயசுலேயே செத்துப் போயிட்டா. உங்களை அப்பா அம்மா மாதிரி மனசுல நினைச்சுண்டிருக்கேன். நான் பரிமாறினா தப்பா?" என்று கேட்க மாமியார் தலைநிமிர்த்தி 'போடுங்கோ' என்று சொன்னாள்.

மாமியார் சாதம் குழைத்துக் கொள்ள சாம்பாரை பக்குவமாக அதில் ஊற்றினார். ரேவதிக்குப் புருஷனுடைய கம்பீரம், பேச்சு, சிரிப்பு, நடவடிக்கை எல்லாம் பிடித்திருந்தது. சந்தோஷம் நெஞ்சில் ததும்பி வழிந்தது. கண்ணங்களில் பூரிப்பு ஏற்பட்டது. கண்களில் நீர்த் திரள் நிறைந்தது. மூக்கு உறிஞ்சி கண்களில் பொங்கிய நீர்த்திரளை உள்ளுக்குள் இழுத்துக் கொண்டாள். கீழ் உதட்டை மெல்ல கடித்தாள்.

'ஏம்ப்பா... எங்க ஆத்து மேலே இத்தனை அன்பா? ராத்திரி வா. உன்னை உண்டு இல்லைன்னு பண்ணிடறேன்' என்று புருஷனைப் பார்த்து மனசுக்குள் பேசினாள்.

வேறு ஏதோ கேட்க வந்த மைத்துனனை ராதாகிருஷ்ணன் பிடித்து நிறுத்தினார்.

"முதல்ல சாப்பிடறா. தாம்பூலப் பை எல்லாம் பின்னாடி தரலாம். உட்கார்ந்திருப்பா வா. சாப்பிடு. சாப்டுட்டு தாம்பூலப் பை கொடு'' அவனைத் தரதரவென்று இழுத்துக் கொண்டு போய் ரேவதியின் எதிர்ப்பக்கம் உட்கார வைத்து சமையற்காரர்களை அவனுக்குப் பரிமாறும்படி உத்தரவிட்டார்.

சமையற்காரர்கள் ஓடி ஓடிப் பரிமாறி

னார்கள்.

மாமனார் ரசம் சாதம் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது உருளைக்கிழங்கு கறி அவருக்குப் போடச் சொல்லிவிட்டு கறி போட்டு பரிமாறுபவன் நகர்ந்ததும் மெல்லக் குனிந்து, "என்ன சொன்னா அந்தப் பக்கம்" என்று காதோரம் கிசுகிசுத்தார்.

மாமியார் அவர்கள் பேசுவதை எட்டிப் பார்த்தாள்.

"ரொம்ப நிறைவு. ஒரு குறையும் இல்லை. ரொம்ப நன்னா பண்ணியிருக்கேள். பதினைஞ்சு பவுன் கேட்டோம். இருவத்தோரு பவுன் போட்டேள். எங்களுக்கு ரொம்ப திருப்தி. மூணு மணி டிரெயினுக்கு ஸ்டேஷன்ல விடறதுக்கு ஏற்பாடு பண்ணினேன்னா நன்னா இருக்கும் அப்படின்னா. ஏற்பாடு பண்ணியிருக்கு; கவலைப் படாதீங்கோ. அப்படின்னேன். மாப்பிள்ளையோட தங்கைக்கு அந்தப் பட்டுப் புடைவை நுனி விளக்குல பட்டு குஞ்சலமா இருந்தது பொசுங்கிப் போயிடுத்தாம். மனசு சிரமமா யிருந்ததாம். ஏன் இந்தப் புடைவை இப்படி ஆயிடுத்து அப்படின்னு ரொம்ப வருத்தப் பட்டாளாம்."

"புடைவையா பொசுங்கிப் போச்சு?"

"புடைவை இல்லை. கடைசியில இழுத்து குஞ்சலமா முடிச்சுப் போட்டு வைச்சுப் பாளே அதுலே ரெண்டு நுனி போயிடுத்து. அதுக்குப் போய் இத்தனை ஆட்டம் போடறா."

"எங்கிட்ட உடனே சொல்லிட வேண்டியதுதானே. அந்தப் புடைவையை வாங்கிண்டிருங்கோ. வேற புடைவை வைச்சுக் கொடுத்துடலாம்."

"எதுக்கு வேற புடைவை?"

"மனசு திருப்தியா இருக்கட்டுமே. ரேவதி உனக்கு உங்கப்பா வைச்சுக் கொடுத்த புடைவையை என்ன பண்ண?"

"அப்படியே இருக்கு."

"அதைக் கொண்டு போய்க் கொடுத்துட்டு அவ புடைவையை வாங்கிட்டு வந்துரு."

"நன்னாயிருக்கே அவ கட்டிண்ட புடைவையை ரேவதி கட்டிக்கணுமா?"

"அந்தப் புடைவையையும் கட்டிக்கப் போறதில்லை. ரேவதிக்கு நான் வேற புதுப் புடைவை வாங்கித் தரேன். ரேவதி அப்பா கொடுத்த புடைவையைக் கொண்டு போய் சாருமதி நாத்தனாருக்குக் கொடுத்துடு."

அவள் இலேசாகி சரியென்று தலையசைத்தாள்.

(தொடரும்)

## தாளம் மாறுது!



● 'ஜெயா' டி.வி.யில் 'தீம்தரிகிட' நிகழ்ச்சியைத் தொகுத்தளித்துக் கொண்டிருந்த பானுப்ரியா விலகிக் கொள்ள, இனி அந்த நிகழ்ச்சியை வழங்கவிருப்பவர் ஷோபனா.

● 'சினிமாவில் நடிக்க மாட்டேன்' என்று பிடிவாதமாக இருந்த சீதாபார்த்திபனை மிகவும் வற்புறுத்தி, சிம்புவுக்கு அம்மா வேடத்தில் நடிக்க வைத்துவிட்டாராம் டி. ராஜேந்தர்.

● 'கிருஷ்ணதாசி' தொடர் பிரபலமடைந்துவிட்டதில் சுகன்யாவுக்கு ஏக குஷி! அட, இதில் சுகன்யாவுக்கு என்ன சந்தோஷம்? கன்னடத்தில் ரீமேக் ஆன 'ஸ்வாதி முத்து' தொடரில் அவர்தானே கதாநாயகி!

— டாலி

நெல்லைச் சிறப்பிதழ்

நதிக்கரையில் நாகரிகம் செழிக்கும் என்பதுபோய், நாகரிகம், நதிகளை அழிக்கும் என்பதற்கு உதாரணமாக ஓடிக் கொண்டிருக்கிறது தாமிரபரணி. தமிழகத்தின் ஒரே ஜீவநதி என்ற பெருமையைத் தக்க வைத்துக் கொண்டிருக்கும் தாமிரபரணி நீரை நெல்லை மக்கள் விஷமாக்கிக் கொண்டிருக்க, மாநகராட்சி அசட்டையாக இருக்கிறது.

தாமிரபரணியின் மீது முதல் அடி விழுவது பாபநாசத்தில். இங்கேயுள்ள அகத்தியர் கல்யாண தீர்த்தத்திற்கு நீராட வரும் சுற்றுலாப் பயணிகள், பாலிதீன் பைகள், உணவுப் பொட்டலங்கள் என்று தொடங்கி, உச்சகட்டமாக பொதுக் கழிப்பிடமாகவும் மாற்றிவிடும் கொடுமையைக் காண முடிகிறது. இங்கே வெளியூர்க்காரர்கள்தான் இப்படி பொறுப்பில்லாமல் வந்து போகிறார்கள் என்றால் உள்ளூர்க்காரர்கள்? பாபநாசத்தில் வி.கே.புரம், கல்லிடைக்குறிச்சி, அம்பாசமுத்திரம் பகுதி மக்களும், தத்தம் பகுதிக் கழிவுநீர் தாமிரபரணியில் கலப்பதை வேடிக்கை பார்க்கிறார்கள்.

• பாணதீர்த்தம் (பாபநாசம்)

• நெல்லை சந்திப்பின் கழிவுகள் சிந்துபூந்துறையில் சீறிப் பாய்கின்றன.

"சேரன்மகாதேவியில் அமைந்துள்ள இரசாயனத் தொழிற் சாலைகள் வெளியேற்றும் கழிவுநீர் நேரடியாக கலப்பதால்,

# நெல்லையில் கலவரம்?!

அங்கிருந்து நெல்லை வரும் வழியில் விக்கிரமசிங்கபுரத்தில் உள்ள தொழிற்சாலையின் கழிவு, தயக்கமே இன்றி ஆற்றில் விடப்படுகிறது. அதன் பிறகு பல ஊர்களில் ஆலைக்கழிவுகள் கலப்பது யாரையும் கலவரமூட்டவில்லை.



• நைலாபரத்தில் மாநகராட்சியே தாமிரபரணியை மாசுபடுத்தும் காட்சி

இங்கே தாமிரபரணியின் தண்ணீர் கறுப்பு நிறமாக மாறுவதை ஒரு கிலோமீட்டர் தூரத்திற்குப் பார்க்க முடியும்'' என்கிறார் தாமிரபரணி சுற்றுச் சூழல் பாதுகாப்பு இயக்கத்தின் தலைவர் காஜா முகைதீன்.



• காஜா முகைதீன்

நெல்லை மாநகர எல்லைக்குள் நுழைந்த பிறகுதான் தாமிரபரணியின் நிலை மிகவும் பரிதாபமாகிவிடுகிறது. இரண்டு இலட்சம் மக்கள் வாழும் மேலப்பாளையம், கருப்பந்துறை பகுதியின் கழிவுநீர், (பாதாள சாக்கடை இல்லாததால்) மனிதக் கழிவுகள், நேரடியாக ஆற்றில் கலக்கின்றன. இந்தப் பகுதிகளின் மாடு, ஆடு, கோழி இறைச்சிகளின் கழிவுகளும் கருப்பந்துறை தாமிரபரணியில் கொட்டப்படுகின்றன. இதையெல்லாம் விடப் பெரிய கொடுமை அரங்கேறுவது மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகம் உள்ள கொக்கிரகுளம் தாமிரபரணிக் கரையில் தான். மருத்துவமனைகளிலிருந்து சேகரிக்கப்படும் கழிவுகளும் மாநகரச் சந்தைகளிலிருந்து சேகரிக் கப்படும் காய்கறி, மாமிசக் கழிவுகளும் மாநகராட்சி துப்புரவு ஊழியர்களால் லாரி மூலம் இங்கே கொட்டப்படுகின்றன. இத்தனைக்கும் தினசரி மாநகராட்சி அதிகாரிகளும், பல சமயம் மாவட்ட ஆட்சியரும் கூட இவ்வழியே தான் போய் வருகிறார்கள்!

நெல்லை சந்திப்புப் பகுதியில் உள்ள பேருந்து நிலையக் கழிவுகளும், நூற்றுக்கணக்கான தங்கும் விடுதிகளின் கழிவுகளும் சேர்ந்து ஒரு சிறு தாமிரபரணிபோல புறப்பட்டு சிந்து பூந்துறையில் திடுதிடுமென சப்தம் எழுப்பியபடி கலப்பதைக் கண்கூடாகக் கண்டு அதிர்ச்சி அடையலாம்.

"இப்படி சிறிதும் பெரிதுமாக மாநகராட்சியே ஆற்றில் விடும் கழிவு நீர்ப்பாதைகளின் எண்ணிக்கை மட்டும் இருபத்து ஒன்று!'' என்று புள்ளி விவரம் தருகிறார் தாமிரபரணிச் சுற்றுச் சூழல் இயக்கத்தின் தீவிர ஆர்வலரான சம்சுதாசின்.



• சம்சுதாசின்

தாமிரபரணிக் கரையில் ஆக்கிரமிப்புக்கும், மணல் கொள்ளைக்கும் கூட பஞ்சமில்லை. இவர்களின் இப்போதைய கேள்வி, "தாமிரபரணி பாதுகாப்புக்காக மத்திய அரசு, நெல்லை மாநகராட்சிக்கு ஏற்கெனவே ரூபாய் முப்பது கோடி அளித்துள்ளது. அதை அப்படியே பாதாள சாக்கடைத்திட்டத்திற்கு ஒதுக்கியிருந்தால் இந்நேரம் விடிவு பிறந்திருக்கும். அந்த பணம் எந்தத் திட்டமும் தீட்டப்படாமல் தூங்கிக் கொண்டிருக்கிறது! இதை யார் கேட்பது?'' என்கிறார்கள்.

## தண்ணீரைக் காய்ச்சி தாமிரம்!

குத்திரபம்பகம் எனும் கொடுமுடியில் தோன்றி நான்கு தடாகங்களாகி, குங்குமப் பாதை வழியாக, கலைமான் முகம் போன்ற பாறையின் அடி வழியே புறப்பட்டு காதம்பரி வனம் என்று சொல்லக் கூடிய ஆத்தூர் அருகில் கடலில் சங்கமமாகிறது தாமிரபரணி. இந்த ஆறு பாணதீர்த்தம், கல்யாண தீர்த்தம், அகத்திய தீர்த்தம் போன்ற இடங்களில் மலைப்பாறைகளில் விழுந்து, பாபநாசத்தை அடைந்த பிறகு சமவெளித்தரையில் ஓடுகிறது. இந்நதியில் 647 புனித நீராடும் கட்டங்கள் இருப்பதாகக் கருதப்படுகிறது. மார்கழி மாதம் கங்கை, யமுனை, சரஸ்வதி ஆகிய மகாநதிகளும் இங்கே நீராடுவதாகக் கருதப்படுகிறது. இந்த ஆற்றின் தண்ணீரைக் காய்ச்சி, கிடைத்த தாமிர உலோகத்தைக் கொண்டு நெல்லையப்பரின் தாமிரசபை அமைக்கப்பட்டதாகச் சொல்லுவார்கள்.

— எம். வெங்கடேஸ்வரன்

இராமஸேதுவுக்கு வாருங்கள்! வாழ்வில் ஆனந்தம் பெறுவீர்கள்!

# பரிகாரத்தலமாக விளங்கும் இராமேஸ்வரத்தில் மாதாமாதம் அமாவாசையன்று நெய் தீபமேற்றி அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

**ஆன்மீக அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்க ஸ்ரீ.காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் அருளாசியுடன் பெருவாழ்வும், பேரின்பமும் அளிக்கும் புனித க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் நெய் தீபமேற்றி அன்னதானம் செய்வதில் நீங்களும் பங்குகொள்ள அன்புடன் அழைக்கிறோம்!**

பேரன்புடையீர்! வணக்கம். அருள்மிகு ஸ்ரீ இராமநாதசுவாமி தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.

பன்னிரெண்டு ஜோதிர்லிங்க ஸ்தலங்களுள் ஒன்றான இராமேஸ்வரத்தில் ஸ்ரீ பர்வதவர்த்தினி சமேத ஸ்ரீராமநாதசுவாமி உடனிருந்து அருள்பாலிக்கிறார். ஸ்ரீராமபிரான் இராவணனை வென்று இலங்கையிலிருந்து திரும்பியதும் சீதாதேவியாருடன் ராமேஸ்வரம் வந்து, அங்கு சிவலிங்கம் பிரதிஷ்டை செய்து வழிபட விரும்புகிறார். அப்போது சீதாதேவியார் மணலால் பிரதிஷ்டை செய்துவைத்த சிவலிங்கமே கர்ப்பக்கிரகத்தினுள் இன்று காட்சியளிக்கிறது. மூர்த்தி, தீர்த்தம், தலம் மூவகையாலும் இராமேஸ்வரம் சிறப்புற்று சிவவிஷ்ணு ஸ்தலமாக பிரகாசிக்கிறது. மாங்கல்ய தோஷம், புத்திர தோஷம், செவ்வாய் தோஷம், நாகதோஷம் போன்ற எல்லாவிதமான தோஷங்களுக்கும் பரிகாரத்தலமாக இராமேஸ்வரம் விளங்குகிறது. இத்தகைய சிறப்புமிக்க புண்ணிய க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் நேரில் சென்று நெய் தீபமேற்றி அன்னதானம் செய்ய இயலாத அன்பர்களுக்காக, "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்" மூலம் அன்னதானத் திருப்பணி நடைபெறுகிறது. புண்ணியபூமி இராமேஸ்வரத்தில் ஏழைகளுக்கும், அடியார்களுக்கும் அன்னதானம் அளிக்கும் பணியிலும், குடும்பம் நலம் பெற நெய் விளக்கேற்றும் பணியிலும் நாமும் பங்குகொண்டோம் என்ற ஆத்ம திருப்தியை அடைய இது ஒரு சிறந்த வாய்ப்பாகும்.

- ★ தங்கள் சார்பாக நெய் தீபமேற்றி அன்னதானம் செய்ய தங்களால் இயன்ற நன்கொடையை அனுப்பலாம்.
- ★ ரூ.500/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ★ ரூ.1000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
- ★ ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கும், நெய் தீபம் ஏற்றுவதற்கும் நன்கொடையை அனுப்புவோர், திருமண நாள், பிறந்த நாள் மற்றும் திதி நாள் மேலும் தாங்கள் எதை நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகிறீர்கள் என்பதைத் தெரிவித்தால் அதன்படி தாங்கள் விரும்பும் மாதத்தில் அமாவாசை அன்று இராமேஸ்வரத்தில் நெய் தீபமேற்றி அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.1000, ரூ.5000 அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு இராமேஸ்வரத்தில் பூஜிக்கப்பட்ட **'கோடி தீர்த்த' சொம்பும், வலம்புரி சங்கும்** ஸ்ரீ பர்வதவர்த்தினி சமேத ஸ்ரீ இராமநாதசுவாமி வண்ணப்படமும், சிறிய அளவில் சிவபுராண புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக, ஒவ்வொரு மாதமும் அமாவாசை அன்று இராமேஸ்வரத்தில் நெய் தீபம் ஏற்றி அன்னதானம் செய்து தொடர்ந்து பத்து வருடங்கள் பிரசாதமும், "ஆன்மீகம்" மாத இதழும் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். மேலும் தாங்கள் விரும்பும்போது சந்ததியினரின் முகவரிக்கும் மாற்றம் செய்து தருகிறோம். ஆன்மீக அன்பர்கள் ஒவ்வொருவரின் பூஜை அறையும் புனிதம் பெறவேண்டும் என்ற எண்ணத்துடன் ரூ.5000 செலுத்துபவர்களுக்கு 336 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள "ஸ்ரீமத் இராமாயணம்" புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

**அன்னதானம் செய்ய விரும்பும் ஆன்மீக அன்பர்களுக்கு இராமேஸ்வரத்தில் அமாவாசையன்று நெய் தீபம் ஏற்றுகிறோம். பதினாறு வகை இறைவழிபாட்டில் மிகச் சிறப்பாகச் சொல்லப்படுவது தீபவழிபாடாகும். இராமேஸ்வரத்தில் தீபமிடுவது மிகுந்த புண்ணியத்தைத்தரக்கூடியது. தாங்கள் என்ன வேண்டுதலுக்காக தீபம் ஏற்ற வேண்டும் என்பதையும், உங்கள் பெயர், நட்சத்திரத்தையும் குறிப்பிட்டு எங்களுக்கு எழுதி அனுப்பினால் அதன்படி அமாவாசையன்று தீபம் ஏற்றி தங்களுக்கு பிரசாதம் அனுப்பி வைக்கப்படும்.**

நெய் தீபமேற்றும் பணியிலும், அன்னதானப் பணியிலும் ஈடுபட விரும்பும் ஆன்மீக அன்பர்கள் தங்கள் நன்கொடையை Cheque/D.D/M.O மூலம் (Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai - 4) என்ற பெயருக்கு எடுத்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். பெருவாழ்வும், பேரின்பமும் அளிக்கும் புண்ணிய க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் அன்னதானப் பணியும், தீப வழிபாட்டுப் பணியும் தெய்வீகப்பணியாக தழைத்திட உதவுமாறு அன்புகூர்ந்து வேண்டுகிறோம்.


ஸ்ரீ பர்வதவர்த்தினி

*Cheque/D.D./M.O* அனுப்ப வேண்டிய முகவரி:

## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்

**SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)**

68, Nadu Street, (Opp: Sri Kapaleeswarar Temple), Mylapore, Chennai - 600 004.

**Tel: 4959302 Fax: (044) 4616311 E-mail: sivasiva@vsnl.net**


ஸ்ரீ இராமநாதசுவாமி

**சேது தீர்த்தத்தை தொட்டாலும், பார்த்தாலும் புண்ணிய பலனைப் பெறலாம்!**

சுதிர் போனில் செய்தி சொன்னபோது இன்னும் கொஞ்சம் விவரமாக அவனிடம் விசாரித்திருக்கலாம் என்று சகுந்தலா பிறகு நினைத்துக்கொண்டாள். ஆனால் பேச விடாமல் பரத் தடுத்து விட்டான்.

"ராஜாவுக்குப் பிரக்ஞை வந்துவிட்டது. சற்று முன்னால் கண் திறந்தான்" என்று சுதிர் செய்தி சொன்னதும் அவள் திக்குமுக்காடிப் போனாள். ஒரே சமயத்தில் சிரிக்கவும் அழவும் தோன்றிற்று. ஒரே சமயத்தில் அறிந்த அறியாத எல்லா தெய்வங்களுக்கும் நன்றி சொல்ல வேண்டும் போலிருந்தது. முக்கியமாக மிஸஸ் மல்ஹோத்ராவின் சாய்பாபாவுக்கும், ஆஸ்பத்திரிக் கோவில் பிள்ளையாருக்கும்.

"ஓ, க்ரேட், சுதிர்! உன்னை அணைத்துக்கொள்ள வேண்டும் போல் இருக்கிறது!" என்று சிரித்தாள். 'எதிரில் நீ இருந்திருந்தா ராஜாக்கள் ஸ்டைலில் கழுத்திலேருந்து முத்து மாலையை உனக்குக் கழற்றிக்கொடுத்திருப்பேன்' என்று

# பொய்யில் பூத்த நிஜம்

தன் ஜோக்கைத் தானே ரசித்துச் சிரித்தாள்.

"என்ன சொன்னான் கண் முழிச்சதும்?"

"எங்கே இருக்கேன்னானாம்!"

அது ஹாஸ்யம் போல் அவள் சிரித்தாள். "பூலோகத்திலேதான் இருக்கே பத்மாஷ்னு நாம சொல்வோம்!" என்று அவள் ஹிந்தியில் சொல்லிச் சிரித்தபோது பரத் தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டு பெரிய குரலெடுத்து அழ ஆரம்பித்தான். அவள் அவசரமாக, "நாளைக்குக் கொஞ்சம் சீக்கிரமே ஆஸ்பத்திரிக்கு வந்துவிடுவேன். அவன் கிட்டேச் சொல்லு. பை!" என்று ரிசீவரை டொக்கென்று வைத்து பரத்தை சமாதானப்படுத்த விரைந்தாள். மனத்தில் இருந்த மிகப் பெரிய பாரம் குறைந்தது போல உடம்பு காற்றில் மிதந்தது. பரத் தூங்கி வழியாவிட்டால்



அவனை உலுக்கி முத்தமாரி பொழிந்து, தன் சந்தோஷத்தை வெளிப்படுத்தியிருப்பாள். அயர்ந்த உறக்கத்தில் குழந்தை ஆழ்ந்து போனதும் போர்வையைப் போர்த்தி கன்னத்தில் இலேசாக அதரங்களைப் பதித்து 'உனக்காகத்தான் உங்கப்பா பிழைச்சிருக்கணும்' என்றபோது துக்கம்

8

வாஸந்தி

தொண்டையை அடைத்து கண்களில் நீர் முள்ளாய்க் குத்திற்று.

சின்ன வயசிலேந்து துரதிர்ஷ்டம் என்னைத் துரத்தி வந்திருக்கு. இப்பவும் என்னை அது விடாதுன்னு பயந்து போனேன். உங்கப்பா பிழைச்சது எனக்காக இல்லே. அது மட்டும் நிச்சயம்.... காரணம் எதுவாக இருந்தால் என்ன? ராஜாவுக்குப் பிரக்ஞை வந்துவிட்டது என்றால் பிழைத்து விட்டான் என்று அர்த்தம். இனிமேல் பயமில்லை என்று அர்த்தம். அப்படித்தான் டாக்டர் சொன்னார். அவளிடம் எந்த மருந்துவ வார்த்தைகளையோ விளக்கங்களையோ அவன் கொடுக்கவில்லை. அவளுடைய உணர்ச்சிவசப்பட்ட நிலையில் எதுவும் மண்டையில் ஏறாது என்ற எண்ணமாக இருக்கலாம். சொன்னால் எந்த லாபமும் இல்லை என்று நினைத்திருக்கலாம். சில சமயங்களில் மிக சாதாரணத் தொந்திரவுகளுக்குச் சொல்லப்படும் மருத்துவ வார்த்தைகள் விபரீத தாக்கங்களை ஏற்படுத்தும் என்று அவளுக்குத் தெரியும்.

அவள் சிறுமியாக இருந்த போது அவளுடைய சித்தி திருச்சியில் இருந்தாள். அவளுடைய புருஷன் சரியான பெண்டாட்டி தாஸன். சித்தி சிவப்பாக லட்சணமாக இருந்தது காரணமாக இருக்கலாம். சித்திக்கு ஒரு சின்ன தலைவலி வந்தாலும் சித்தப்பா மாய்ந்து விடுவார். ஒருமுறை பாட்டியை உடனே திருச்சிக்கு வர முடியுமா என்று கேட்க போன் செய்தார். 'ஜானகிக்கு ரொம்ப உடம்பு சரியில்லே' என்று அவர் டெலிபோனில் விசித்து விசித்து அழுதார். எதுவும் விளக்க முடியாமல் அவர் அழுவதைக் கண்டு பாட்டி பதறிக் கொண்டு திருச்சிக்குக் கிளம்பினாள், சகுந்தலாவைத் துணைக்கு அழைத்துக் கொண்டு. திருச்சி ரயிலடிக்கு வந்த சித்தப்பா முகம் வாடி சோர்ந்திருந்தார். "ஜானகி ஆஸ்பத்திரியிலே இருக்கா" என்றார் சோகமாக. "என்ன சொல்றார் டாக்டர்?" என்று பாட்டி பீதியுடன் வினவ,

"என்னவோ சொல்றா, நமக்கு என்ன

புரியறது?" என்றார். "ஸர்வைக்கல் ஸ்பாண்டிலோஸிஸ், லம்பார் ஸ்பாண்டிலோஸிஸ் என்கிறார்! கழுத்தை ஒரு கொக்கிலே மாட்டி இழுத்து நிறுத்தி வைக்கிறா பாருங்கோ, ராட்சஸ வைத்தியம்! அதே மாதிரி இடுப்புக்கு. டிராக்ஷன்னு பேர் சொல்றா."

"ஐய்யய்யோ!" என்று பாட்டி பதறினாள்.

"உசிருக்கு ஒண்ணும் ஆபத்தில்லையே?"

"அந்த உச்சி பிள்ளையாரைத்தான் நம்பிண்டிருக்கேன்!" என்று சித்தப்பா கண்கலங்கினார்.

திருச்சியை விட்டுக் கிளம்புவதற்குள் சித்தி செத்துப் போய்விடுவாள் என்று சகுந்தலாவுக்குத் தோன்றிற்று. ஆஸ்பத்திரிக்குப் போய்ப் பார்க்கும் வரை பாட்டி புலம்பினாள். "ஏற்கெனவே ஒருத்தி என்னை ஏமாத்திட்டுப் போயிட்டா, என் மேலே பொறுப்பை சுமத்திட்டு. ஈசுவரா இன்னும் என்னவெல்லாம் நான் அனுபவிக்கணுமோ!"

"சித்திக்கு நல்லவேளை குழந்தைகள் இல்லே" என்றாள் சகுந்தலா சமாதானமாக. கற்பனை பீதியில் மூழ்கியிருந்த பாட்டிக்கு அது காதில் விழவில்லை. இப்போது சித்தியின் நினைவு வந்து சகுந்தலாவுக்குச் சிரிப்பு வந்தது. ஸர்வைக்கல் ஸ்பாண்டிலோஸிஸ் என்கிற வார்த்தை ஏதோ பெரும் வியாதி போல வெகு காலத்துக்கு அவளுள் பயத்தை ஏற்படுத்தியது.

சென்ற ஆண்டு சதாசர்வகாலமும் கம்ப்யூட்டரில் வேலை பார்க்க ஆரம்பித்ததும் தோன்றிய கழுத்து வலிக்கு சிகிச்சை பெற டாக்டரிடம் சென்ற போது அவர் எக்ஸ்ரே எடுத்துப் பார்த்து இது ஸர்வைக்கல் ஸ்பாண்டிலோஸிஸ் என்றார். திருச்சி ஞாபகம் வந்தது. 'உச்சிப் பிள்ளையாரைத்தான் நம்பிண்டிருக்கேன்' என்று சித்தப்பா விசித்தது நினைவுக்கு வந்தது. டாக்டர் டிராக்ஷனில் அவளை உட்கார்த்தியபோது பழைய ஞாபகத்தில் பயந்ததும் எழுந்த போது சுகமாக உடல் தளர்ந்து இருந்தது ஆச்சரியத்தை ஏற்படுத்தியதும் புதிய தரிசனம் கிடைத்த மாதிரி இருந்தது. சித்தப்பாவைப் பற்றி ராஜாவிடம் சொல்லிச் சொல்லிச் சிரித்ததை நினைத்து இப்பவும் சிரிப்பு வந்தது.

நல்லவேளை இந்த டாக்டர் அவளைக் குழப்பவில்லை. 'பிரக்ஞை வருவதற்கான அறிகுறிகள் இருக்கின்றன. நிலைமை சீராக இருக்கிறது' என்று மந்திரிகள் ஆஸ்பத்திரியில் படுத்தால் விடப்படும் அதிகார பூர்வமான அறிக்கை போலச் சொன்னார். அது போலவே பிரக்ஞை வந்துவிட்டது

**"அந்த படத்துல ஒரு பாட்டுமே புரியமாட்டேங்குது..."**

**"அப்ப! எல்லா பாட்டும் சூப்பர் ஹிட்டுன்னு சொல்லுங்க?"**

**- வி. சாரதி டேச்சு**

ராஜாவுக்கு. இரண்டு கைகளையும் உயரத் தூக்கி சின்னப் பெண் போல 'வி மேட் இட்!' என்றாள் கதிர் எதிரில் நிற்பது போல. கதிர் என்ன சொன்னான்?

"ராஜா கண் திறந்துவிட்டான்." "கடவுள் கண் திறந்துவிட்டார் என்பது போல. ஒருமுறை அவள் தஞ்சாவூர் சென்றிருந்த போது தஞ்சாவூர் ஓவியம் வரையும் ஓவியர் ஒருவர் சொன்னது அவளுக்குத் திடீரென்று சம்பந்தமில்லாமல் நினைவுக்கு வந்தது. ஓவியத்தில் கண் வரைவது மிக முக்கியமான கட்டம் என்றார். 'கண் திறக்கிற நாள் நாங்க விரதம் இருப்போம்.'

வரலக்ஷ்மி விரதத்திற்கு முந்தைய நாள் பாட்டி அப்படித்தான் மடியுடுத்தி பூஜையறையில் ஏகாந்தமாக அமர்ந்து வெள்ளிச் செம்பில் அம்மனின் முகத்தை ஈர்க்குச்சியில் பஞ்சைச் சுருட்டி செம்மண் குழம்பில் தோய்த்து ப்ரஷ்ஷில் வரைவது போல லாகவமாகத் தீட்டுவாள். எட்டியிருந்து சகுந்தலா பார்த்திருக்கிறாள். கண்களை வரைகிற வரை தட்டையாக இருக்கும் கோடுகள் கண்ணின் பாப்பாவை போட்டதும் உயிர் பெற்றுவிடும். வெள்ளிச் செம்பில் அம்மன் கண் மலர்ந்து சிரிப்பாள். 'பக்தி சிரத்தையோடு போடணும்' என்பாள் பாட்டி. 'இல்லேன்னா கண் ஏறுமாறாப் போயிடும்.'

"ராஜம் பாட்டியுடைய அம்மனுக்கு எப்பவும் ஒண்ணரைக் கண்!" என்று சகுந்தலா விமர்சிப்பாள்.

"ராஜம் ஒரு அவசரக்குடுக்கை" என்று பாட்டி தன் தங்கையைச் செல்லமாகக் கடிந்துகொள்வாள். "நம்பிக்கையிருந்தா பொறுமையிருக்கும்."

நம்பிக்கையோ பொறுமையோ தனக்கு இருந்ததாக அவளால் நினைக்க முடியவில்லை. யார் செய்த புண்ணியமோ, யார் செய்த பிரார்த்தனையோ, ராஜாவின் அம்மாவின் பிரார்த்தனையாக இருக்கலாம். எப்படிப் பிரார்த்தித்திருப்பாள்? என் பிள்ளையை எனக்குத் திருப்பிக் குடு என்றா? அந்தப் பெண்ணை ஏமாத்திடாதேடா, கண் தொறந்துடு என்று வேண்டியிருப்பாளா? அந்த அம்மாள் தன்னுடன் பேசவேயில்லை



என்பது அவளுக்கு நினைவுக்கு வந்தது. அவள் எப்படிப் பேசுவாள் என்று இன்று சமாதான மேற்பட்டது. அவளுக்குத் தமிழ் தெரியாது என்று அந்த அம்மாள் நினைத்திருக்கலாம். நமஸ்தே என்று அவள் கைகூப்பியது குழப்பி யிருக்கலாம். அவர்களிடம் வலியச் சென்று தமிழில் பேசாதது தன்னுடைய தப்பு என்று சகுந்தலா நினைத்துக்கொண்டாள். எனக்கும் உங்களுக்கும் சம்பந்தமில்லை என்பது போலவும், உள்ளே பிரக்ஞையில்லாமல் உயிருக்குப் போராடிக்கொண்டிருக்கும். அந்த ஜீவன் மட்டுமே எனக்குச் சொந்தம் என்பது போலவும் விருக்கென்று உள்ளே சென்று மறைந்தது தவறு என்று இப்போது தோன் றிற்று. பேசியிருந்தால் அவர்களுக்குச் சற்று சமாதானமாகியிருக்கும்.

இதெல்லாம் வீண் யோசனை என்று நினைத்தபடி அவள் படுக்கச் சென்றாள். ராஜாவுக்கு இனி ஆபத்தில்லை என்று அறிந் ததும் நாளைக்கே அவர்கள் சென்னைக்குத் திரும்பினாலும் திரும்புவார்கள். ராஜா அவர்களைப் பார்த்து உணர்ச்சி வசப் பட்டால் சங்கடம் என்கிற யோசனை அவர் களுக்கு இருக்கும். அவர்கள் கிளம்பிச் சென் றால் இங்கும் பல சங்கடங்களைத் தவிர்க் கலாம்.

ஏதோ ஒரு லாகிரியில் மிதந்த மனசு கடைசியில் களைத்து கண் மூடியபோது சிதறல் சிதறலாகக் கனவுகள் சுழன்றன. நிஜச் சித்திரம் போல வண்ண வண்ணமாக விரிந்தன. ஆரஞ்சு கலர் ஸில்கில் தழையத் தழைய வேஷ்டியும் தொங்கத் தொங்க ஜிப்பாவுமாக தலையைச் சுற்றி தொப்பி போல சுருண்ட கரிய முடியுமாக சாய்பாபா வந்தார். 'நான்தான் அனுப்பினேன்' என் றாள் மிஸஸ் மல்ஹோத்ரா. சாய்பாபா வலது கையைத் தூக்கி ஆசிர்வதித்தார். கன்னத்துத் தோல் சுருக்கம் சுருக்கமாகக் கழுத்தில் விரிந்து ஜிப்பாவுக்குள் பதுங்கியது. 'சாயி போலோ, ஜெய சாயி போலோ' என்று மிஸஸ் மல்ஹோத்ரா பாட, ராஜாவின் அம்மா ஓடோடி வந்தாள் - பாபாவின் கால் களைப் பிடித்துக்கொண்டு "எம் புள்ளை யைக் கொடுத்துடுங்க" - என்று அழுதாள். பாபா அவளுடைய வைரமூக்குத்திகளை ஆராய்ந்தபடி நின்றார்.

காலையில் கண் விழித்ததுமே அதரங் களில் புன்னகை அரும்பிற்று. பெல் அடிக் கும் ஓசைகேட்டு விரைந்து வாசல் கதவைத் திறந்தபோது சௌக்கிதார் ராம்சிங் பால் பாக்கெட்டை வாசலில் வைத்துவிட்டுத் திரும்பிக்கொண்டிருந்தான். அவனைக் கூப் பிட்டுச் சொல்ல வேண்டும் போலிருந்தது. "ராம்சிங்! ஸாஹப் ஹோஷ் மே ஆகயேன்!" ராம்சிங் தொலை தூரம் போய்விட்டிருந் தான். பரத் எழுந்ததும் அவனை அவனது கம்மோடில் உட்கார்த்தி வைத்து "அப் பாவுக்கு நினைவு வந்துடுத்து" என்றாள். பரத் அது காதில் விழாமல் தனது காரியத்தில் தீவிரமாக இருந்தான். அவளுக்கு இன்றைக்கு எல்லாவற்றிற்கும் சிரிப்பு வந்தது. சமேலி வந்ததும் சிரித்துக்கொண்டே சொன்னாள்.

"பரத்துடைய அப்பாவுக்கு நினைவு வந்து விட்டது!"

"அச்சா தீதீ?" என்று சமேலி அவளது உற்சாகத்துக்கு ஈடுகொடுத்து சந்தோஷத் துடன் கண்களை விரித்தாள். "எப்ப வீட்டுக்கு வருவார்?"

"இப்பவே எங்கே?" என்றாள் சகுந்தலா. "நினைவு இப்பத்தான் திரும்பியிருக்கு. நானே இனிமேத்தான் பார்க்கப் போறேன். கொஞ்ச நாள் ஆஸ்பத்திரியிலே இருக்கணும். பிழைச் சதே பெரிய காரியம் சமேலி!"

வாக்கியத்தை முடிப்பதற்குள் துக்கம் தொண்டையை அடைத்தது. கண்களில் நீர் நிரம்பிற்று.

"இந்த நான்கு நாளா நா படற வேதனை உனக்குத் தெரியுமா சமேலி?"

"எனக்குத் தெரியும் தீதீ!" என்று அருகில் வந்து தோளைத் தொட்டாள் சமேலி. "நாலு நாள்லே நீங்க எப்படி இளைச்சுட்டீங்கன்னு சௌக்கீதார் கூடச் சொன்னான். வீட்டுக்கு ஸாஹப் வந்தப்புறம் உங்களுக்கு தினம் ஆலு பராட்டா பண்ணிப் போட்டு குண்டாக்கப் போறேன்!"

ராஜா வீட்டிற்குத் திரும்பிய பிறகு அவ னுக்குச் சௌகர்யமாக அறையை எப்படி மாற்றி அமைப்பது என்பது பற்றி இருவரும் சற்று நேரம் பேசி திட்டம் போட்டார்கள். தோழிகள் போல சிரித்துப் பேசியபடி நாஷ்டா சாப்பிட்டார்கள். பரத்தைக் குளிப் பாட்டி க்ரெஷ்ஷுக்குத் தயார் செய்தார்கள். சகுந்தலா கவனமாகத் தன்னை அலங்கரித் துக்கொண்டாள். ராஜாவுக்குப் பிடித்தமான



''நம்ம பெண்ணோட கல்யாணத்தைக் கோயில்ல வைச்சு நடத்திட்டா என்னான்னு யோசிக்கிறேன்...''

'''அன்னதானம்' பற்றி நியூஸ் பேப்பரில வந்தப்பவே நினைச்சேன்... இப்படி ஏதாச்சும் குயுக்தி பண்ணுவீங்கன்னு...!''

- மடிப்பாக்கம் துரைசுவாமி



"காதுக்குள் எப்பப் பார்த்தாலும் 'டண்டண் டண்டனக்கா டண்டண்'னு சத்தம் கேட்டுக்கிட்டேயிருக்கு டாக்டர்!"

"முதல்ல கொத்துப் புரோட்டா கடைக்கு எதிரேயிருக்கிற வீட்டை மாத்திட்டு வேறே வீடு பாருங்க..."

– உ. ராஜாஜி



''நாடு ரொம்ப கெட்டுப் போச்சு.''

''என்ன?''

"சென்னையிலிருந்து விழுப்புரத்துக்குக் கொள்ளையடிக்கச் செல்லும் கபாலியின் பயணம் வெற்றியடைய வாழ்த்துகள்'னு பேப்பருல விளம்பரம் கொடுத்திருக்கிறாங்க!

- தூத்துக்குடி
வி. சகிதாமுருகன்

இளரோஜா நிற காட்டன் சூடிதார் ஸெட் அணிந்து முத்துத் தோடு அணிந்தாள். 'இது பதினைஞ்சு ரூபாக்கு வாங்கினதுன்னு பாட்டிகிட்டே சொல்லாதே' என்றாள் பரத்திடம். தங்கச் சங்கிலியைத் தேட இன்றும் நேரம் இருக்கவில்லை. வழக்கம்போல் வீட்டைச் சுத்தம் செய்துவேலையெல்லாம் முடிந்த பிறகு சாவியைப் பக்கத்து வீட்டில் கொடுக்கும்படி சமேலியிடம் சொல்லிவிட்டு அவள் பரத்தைத் தூக்கிக்கொண்டு லிஃப்டில் புகுந்து, வெளிப்பட்டு கார் பார்க்கிங் லாட்டுக்கு வந்தாள். எங்கேயோ நின்றிருந்த ராம் சிங் ஓடி வந்தான்.

"குழந்தையை எங்கிட்ட கொடுங்கள்" என்று வாங்கிக்கொண்டான். "ஸாஹப் எப்படி இருக்கார் மேடம்?" என்றான்.

"பரவாயில்லே ராம்சிங். நினைவு வந்து விட்டது."

"பகவான் கா க்ருபா மேடம்" என்று ராம்சிங் ஆகாசத்தைக் காட்டினான். க்ரெஷ்ஷுக்குக் கார் ஓட்டிச் செல்லும்போது சகுந்தலாவுக்கு மனசு நிறைந்திருந்தது. இந்த தருணத்தில் எதை வேண்டுமானாலும் நம்பலாம் போலிருந்தது. உலகத்துத் தொன்மங்களையெல்லாம், கட்டுக் கதைகளையெல்லாம் நிஜம் என்று நம்பக்கூடிய எளிமை பொங்கியது மனசில். கிரெஷ்ஷில் மிஸஸ் மல்ஹோத்ரா வேறு ஓர் அறையிலே இருந்தாள். அவளைத் தேடிச் சென்று அவள் கைகளைப் பற்றி.

"மிஸஸ் மல்ஹோத்ரா, அவருக்கு இப்பத் தேவலை" என்றபோது குரல் தழுதழுத்தது. கண்களில் நீர் கோத்தது.

"அச்சா? இது ரொம்ப நல்ல சேதி பெஹன்" என்றாள் மிஸஸ் மல்ஹோத்ரா.

"நீங்கள் பிரார்த்தனை செய்தீர் அவருக்காக. உங்களுக்கு நன்றி சொல்லணும்."

"எனக்கு எதுக்கு? எல்லாம் சாயி க்ருபா பெஹன்."

ஆஸ்பத்திரியை நோக்கிக் கார் நகர்கையில் உண்மையிலேயே உலகமே ஏதோ ஒரு கருணை மழையில் நனைந்திருப்பதாகத் தோன்றிற்று. ஏதோ ஓர் அருள் மூலை முடுக்கெல்லாம் வியாபித்திருப்பது போல நன்றி பெருக்கெடுத்தது. மகாராணி பாகைத் தாண்டி ஆஷ்ரம் ஸிக்னலுக்குள் டிராஃபிக் ஜாம் நெறித்தது. டிராஃபிக் இளகி தில்லி மதுரா ரோடுக்கு வருவதற்குள் அவளுக்குப் பொறுமை நழுவிப் போயிருந்தது. ராஜாவின் பெற்றோர்கள் முந்திக்கொண்டு அவனைக் காணச் சென்றிருந்தால், நாசூக்கான அவனு

டைய நிலையில் எப்படிப்பட்ட பாதிப்பை அது ஏற்படுத்துமோ என்றிருந்தது.

ஆஸ்பத்திரி வளாகத்தில் காரை நிறுத்தி அவள் விரைந்தாள். ஐ.ஸி.யு. வாசலில் விவேக் நின்றிருந்தான். "ஹாய்!" என்று அவன் பிரகாசமாகச் சிரித்தான். அவள் பதிலுக்கு 'ஹை!' என்று அளவாகப் புன்னகை செய்தாள். "இப்ப ராஜா ஐ.ஸி.யு. விலே இல்லை. வார்டுக்கு எடுத்துக்கொண்டு போயிருக்கிறார்கள்." என்றான்.

"குட்!" என்று அவள் கண்கள் பளபளக்கப் புன்னகை செய்தாள். "இதுக்காக நான் காத்திண்டிருந்தேன் விவேக்!"

"ஐ நோ" என்றான் அவன் மெல்ல.

"ஹௌ இஸ் ஹீ?"

"நான் இன்னும் பார்க்கல்லே. நா போன போது தூங்கிண்டிருந்தான்."

"அவனுடைய அப்பா அம்மா? பார்த்தாச்சா?"

"இல்லே. வர்ற நேரம்தான். நா உனக்கு வார்டைக் காண்பிச்சுட்டு அவங்களை அழைச்சிட்டு வரேன்!"

"ஃபைன்" என்று சிரித்தபடி சகுந்தலா ஒரு துள்ளலுடன் நடந்தாள்.

வார்டில் எட்டுக் கட்டில்கள் இருந்தன. தடுப்புக்காக நடுவில் திரை போட்டிருந்தார்கள். இரண்டாவது கட்டிலில் ராஜா படுத்திருந்தான். இன்னும் ட்யூப்புகளில் சிக்கியிருந்தான். கண் மூடிப்படுத்திருந்ததைப் பார்த்தபோது எத்தனை பலவீனமாகத் தோன்றுகிறான் என்று அவளுள் பிரவாகமாகக் காதல் பொங்கிற்று. விவேக் சென்றுவிட்டான். அவள் சற்று நேரம் ராஜாவின் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தாள். அவனது முக தசைகளில் அசைவு தெரிந்தது. கண்களை மெல்லத் திறந்தான்.

அவள் "ஹை!" என்று புன்னகைத்தாள். மேற்கொண்டு எதுவும் பேச முடியாமல் தொண்டை அடைத்தது. ராஜா என்று கூட சொல்லமுடியவில்லை.

அவன் அவளையே பார்த்தான். சலனமே இல்லாமல், எந்தப் பதிவும் தென்படாமல், அவள் கண்களில் ஏதாவது தோன்றாதா என்று கவலைப்பட்டாள். மெல்ல அந்தக் கண்களில் ஓர் அசைவு தென்பட்டது. அவளைத் தாண்டி பார்வை நிலைத்தது.

சகுந்தலா திரும்பிப் பார்த்தாள். ராஜாவின் அப்பாவும் அம்மாவும் நின்றிருந்தார்கள். இனம் புரியாத கவலை உள்ளே அரித்தது.

(தொடரும்)

# விழி திறந்த கல்வி!

பாளையங்கோட்டை, புனித சேவியர் கல்லூரி என்றால் பட்டென்று நினைவுக்கு வருவது கிராமப் புறவியல், நாட்டுப்புறவியல் போன்ற தூசி படிந்த சொற்களைத் துடைத்தெறிந்துவிட்டு 'நாட்டார் வழக் காற்றியல்' என்ற புத்துணர்ச்சித் ததும்பும் சொல்லாட்சியைத் தமிழுக்கு அறிமுகப்படுத் திய துறைதான். பதினான்கு ஆண்டுகளுக்கு முன்பு, தமிழகத்தில் முதன்முதலில் முது கலைப் பட்டப் படிப்பாக நாட்டார் வழக் காற்றியல் கல்வி தொடங்கப்பட்டபோது, அதில் சேர்ந்து பயின்ற மாணவர்கள் சிலர்தான். இன்று வடமாநிலங்களிலிருந்தும், அயல்நாடுகளிலிருந்தும்கூட பாளையங் கோட்டையைத் தேடி வரத் தொடங்கி விட்டார்கள். அப்படியென்ன இருக்கிறது அந்தப் படிப்பில்?

துறையின் வாயிலில் இரண்டு அய்ய னார் குதிரைகள், மெகா சைஸ் தாழிகள், நம் கண்களில் பட உள்ளே நுழைந்தால், ஏசி இல்லாமலேயே குளுமை. பத்தமடைப் பாய்களின் உதவியால் கலையழகோடு கேபின்கள் அமைக்கப்பட்டிருந்தன. தரை விரிப்புக்குப் பதிலாக பாய்கள், சுவர், தூண்கள் என எங்கும் எதிலும் கிராமியப் பொருட்களைக் கொண்டே உள் அலங் காரம். துறையின் நூலகத்தை ஒட்டிய வர வேற்பறையில் பிரம்பு நாற்காலியில் அமர்ந்திருந்தார் பெரியதுரை. இரண்டா மாண்டு மாணவர்.

"இந்தக் கல்லூரியின் வரலாற்றில் முதல் பார்வையற்ற மாணவன் நான்தான். சொந்த ஊர் சேரன்மகாதேவி. இளங்கலை சமூக வியல் முடித்துவிட்டு, மேலும் படிக்க

• பெரியதுரை

• ஆர். தனஞ்செயன்

நெல்லைச் சிறப்பிதழ்

நினைத்தபோது நாட்டார் வழக்காற்றியல் பற்றிக் கேள்விப்பட்டு இங்கே வந்தேன். ஆனால் கல்லூரி நிர்வாகம் மறுத்துவிட்டது. இதே துறையின் இயக்குனராய் இருந்த ஃபாதர் பிரான்சிஸ் எனக்காக வாதாடிய பிறகே என்னைச் சேர்த்துக் கொண்டார்கள்" என்று நன்றியுடன் நினைவு கூர்ந்தபடி தமது ஓராண்டு அனுபவத்தைப் பற்றிப் பேசத் தொடங்கினார் பெரியதுரை.



• எழுத்தாளர் பொன்னீலன் - சகமாணவி சுதாவுடன் பெரியதுரை

"பாடத் திட்டமே என்னைப் பெரிதும் கவர்ந்துவிட்டது. முதலாண்டில் நாங்கள் ஆர்வமாகக் கற்றது நாட்டார் இலக்கியங்கள், நாட்டார் கைவினைக் கலைகள், நாட்டார் நிகழ்த்துக் கலைகள். முதலாண்டிலேயே களப்பணி தொடங்கிவிட்டது. களப்பணியில் கள ஆய்வு மிக முக்கியமானது. த்ரில் நிறைந்தது என்று கூடச் சொல்லலாம். இரண்டாவது ஆண்டில் மானிடவியல், சமூக பண்பாட்டு வரலாறு, மொழியியல், மக்கள் தகவல் தொடர்பியல் படிக்கப் போகிறேன்.

"பார்வையற்ற இளைஞனாக எங்கே வேலை தேடுவது என்று எண்ணிக் கொண்டிருந்த எனக்கு, இப்போது வானொலி நிலையத்தில் நிச்சயம் வேலை கிடைக்கும் என்ற நம்பிக்கை உருவாகியிருக்கிறது.

"இந்தக் கல்வியைத் திறம்படக் கற்பதற்கு, இந்தத் துறையோடு இணைந்து செயல்படும் நாட்டார் வழக்காற்றியல் ஆய்வு மையம் பெருந்துணை புரிகிறது. இங்கே வெளியிடப்படும் புத்தகங்கள் ஒவ்வொன்றும் எங்களுக்குப் பொக்கிஷம். இந்தத் துறைக்கு மட்டும் பதினோராயிரம் புத்தகங்கள் கொண்ட தனி நூலகம் இயங்குகிறது. இந்த அரிய நூலகத்தை உருவாக்கியவர், இந்தத் துறை தோன்றக் காரணமாக இருந்த டாக்டர் தேலூர்து. நாட்டுப்புற இயலுக்கு இவர் ஆற்றிய பணியைக் கண்டு, குறள்பீட முதல் விருதை தமிழக அரசு இவருக்கு வழங்கியது என்றால் பார்த்துக் கொள்ளுங்கள். எங்கள் துறையின் சிறப்புகளில் மற்றொன்று ஆவணக்காப்பகம். ஒலி, ஒளி நாடாக்கள், டிஜிட்டல் குறுவட்டுகள் என்று நாட்டார் வழக்காற்றியல் தொடர்பான ஆவணங்கள் பாதுகாக்கப்படுகின்றன. இங்கே வராத தமிழ் எழுத்தாளர்களே இல்லை என்று சொல்லிவிடலாம். நூலகத்தையும், ஆவணக்காப்பகத்தையும் பயன்படுத்திக் கொள்ள இப்போது ஆராய்ச்சி மாணவர்களும் இங்கே குவியத் தொடங்கிவிட்டார்கள்" என்றார் பெரியதுரை.

கிராமியக் கலைஞர்களை அழைத்து, தற்காலத் தேவைகளுக்கேற்ப வடிவமும் நேரகட்டுப்பாடும் அமைந்த தயாரிப்புகளை வழங்க பயிற்சி தருகிறது முனைவர் ஆர்.தனஞ்செயன் தலைமையில் இயங்கி வரும் இத்துறை. ●

நெல்லைச் சிறப்பிதழ்

## கோழி கூவாத கிராமம்...

திருநெல்வேலியிலிருந்து சற்று உள்வாங்கியிருக்கும் கிராமம் கீழ பாலாமடை எனும் கிராமம். இக்கிராமத்தில் சேவல் கூவாது என்பதுடன் கால் நடைகள் கூட தங்காது என்கின்றனர் இக்கிராமவாசிகள். இதற்குக் காரணமாக இங்கு வசிக்கும் நீலகண்ட தீட்சிதரின் வாரிசுகள், மன்னர் திருமலை நாயக்கர் காலத்தில் நிகழ்ந்த சம்பவத்தைக் கூறுகிறார்கள்.

மதுரை புது மண்டபத்தில் நடுவரிசை தூண்களில் நாயக்க மன்னர்களின் சிலைகள் செதுக்கபட்டிருப்பதை இன்றும் காணலாம். ஒரு தூணில் திருமலை நாயக்கரின் ஏழு பத்தினிகள் சிலைகளையும் காணலாம். திருமலை நாயக்கரின் பட்ட மஹிஷியின் சிலையை, சிற்பி சுமந்தரமூர்த்தி செதுக்கும் போது அவ்வுருவத்தின் இடது தொடையிலிருந்து ஒரு சில்லு பெயர்ந்து விட்டதால் சிலையில் பின்னம் ஏற்பட்டது. இதனால் சிற்பி அதிர்ச்சியும் அச்சமுமாய் மிகுந்த வருத்தத்துடன், சிலையைச் செதுக்க தொடர்ந்து முற்படுகையில் அங்கு வந்த மந்திரி நீலகண்ட தீட்சிதர் சிற்பியின் கவலையையும் கலக்கத்தையும் கண்டு காரணம் கேட்டார். நடந்ததைச் சொல்லவும் நீலகண்டர் சற்று யோசனை செய்து, ''வீணாக வருந்தாதே. உன்னுடைய கலைப்பணியினால் தெய்வமே உன்னிடம் மகிழ்ந்து உனக்குத் தெரியாத உண்மைகள்கூட உன் வேலைகளில் அமையும்படி செய்கின்றது. ஆதலால் நீ இந்த சிலையை இருப்பது போலவே விட்டுவிடு'' என்றார்.

மறுநாள் அரசன் சிற்பியிடம் சிலையின் பின்னத்தைக் காட்டி காரணம் கேட்க, சிற்பி நடந்த சம்பவத்தை அரசனிடம் தெரிவித்தான். பட்டத்து மஹிஷியின் தொடையிலுள்ள மச்சம் பற்றி மந்திரியான நீலகண்ட தீட்சிதருக்கு எப்படித் தெரிந்திருக்க முடியும் என கோபம் கொண்டதுடன் நீலகண்ட தீட்சிதரின் கண்களை வாங்கிவிட வேண்டும் என மனத்தில் எண்ணியவராய், தன் சேவகர்களிடம் உடனடியாக நீலகண்ட தீட்சதரை அழைத்து வரச் சொன்னான் மன்னன். அரசன் தம்மீது கொண்ட சந்தேகத்தைக் கண்டு



செய்து கொண்டதாக அரசனிடம் தெரிவிக்கும்படி கூறினார்.

இவ்விவரத்தை அரசன் கேட்டதும் மனம் பதறி மன்னிப்புக் கேட்டான். மன்னருடைய வருத்தத்தைக் கண்ட தீட்சிதர் மன்னர் மனம் சமாதானம் அடைய வேண்டுமென விரும்பி ஸ்ரீ மீனாக்ஷியை ஸ்தோத்திரம் செய்ய ஆரம்பித்தார். 108 பாடல்கள் கொண்ட இந்த ஸ்தோத்திரம் ஆனந்த ஸாகரஸ்தவம் என அழைக்கப்படுகிறது. இந்த ஸ்தோத்திரத்தைப் பாடி முடிக்கையில் தீட்சிதரின் பார்வை இயல்பு நிலைக்குத் திரும்பியது. ஆனால் இந்நிகழ்ச்சிக்குப் பின்னர் தீட்சிதர் தமது வாழ் நாளை இறை தியானத்தில் கழிக்க விருப்பம் கொண்டார். அதன்படி நீலகண்ட தீட்சிதர் தமது ஆன்மிக வாழ்க்கையில் தியானத்திற்கு நிசப்தமான - குறிப்பாக பறவைகள் சப்தம் கூட இல்லாத - நதிக்கரை வேண்டும் என வேண்டுகோள் விடுத்தார். அதனைக் கருத்தில் கொண்டு மன்னர் திருமலை நாயக்கர் நெல்லையில் தாமிரபரணி நதிக்கரையில் 'பாலாமடை' எனும் கிராமத்தை தீட்சதருக்குப் பரிசாக அளித்து அரச மரியாதையுடன் அனுப்பி வைத்தார்.

அங்கே சேவல்களின் சப்தம்கூட இல்லாத ஏகாந்த

மனம் வருந்திய தீட்சிதர், எரியும் கர்ப்பூரத்தை எடுத்து கண்களில் கட்டிக்

# கதம்ப மாலை

கொண்டு வெளியில் காத்திருந்த அரண்மனை சேவகர்களிடம் அரசன் தமக்கு அளிக்கவிருந்த தண்டனையைத் தாமே

மான இடத்தில் எஞ்சிய நாட்களைக் கழித்து சமாதி அடைந்தார் திட்சிதர்.

இப்போது நீலகண்ட தீட்சிதரின்

மரபில் வந்த 10வது தலை முறையினர் வசித்து வருகின்றனர். அவர்கள் தீட்சிதரின் சமாதி யின் மேல் சிவன் மற்றும் அம்பாள் கோயிலெழுப்பி பரா மரித்து வருவதுடன் கும்பாபி ஷேகப் பணிகளையும் செய்து வருகின்றனர்.

- ஜெ. சபாஷ்கண்ணன், நெல்லை;

- ஆர்.ஹைமாவதி, ஆலப்பாக்கம்



• நீலகண்ட தீட்சிதர் சமாதியில் - 10வது தலைமுறை

## பொதிகை மலை உச்சியிலே...

திருநெல்வேலியிலிருந்து சுமார் 85 கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது பொதிகை மலை. உயரம் 6200 அடி. தமிழுக்கு இலக்கணம் வகுத்த தெய்வ சித்தர் அகஸ்தியர் இன்றும் வாழ்ந்து கொண்டிருப்பதாக ஐதீகம்.

கலியுகமானது கி.மு. 3100ல் தொடங் கியதாகவும், கலியுகத்திற்கு சுமார் 4500 ஆண்டுகளுக்கு முன் பிறந்தவர் அகஸ்தியர் என்றும், கி.மு. 670ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 17ந் தேதி கும்ப லக்னத்தில், கும்ப ராசியில் பிறந்ததால், அகஸ்தியரை கும்பமுனி என்று அழைத்தார்கள் என்றும் வரலாறு தெரி விக்கின்றது.

பொதிகை மலையில் அகஸ்தியரது சிலை 1970ம் ஆண்டில் சுந்தரம் பிள்ளை என்பவரால் நிறுவப்பட்டது. அச்சிலை திருட்டுப் போய்விட்டது. பின்னர் 1985ம் ஆண்டு புதியதொரு அகஸ்தியர் சிலையை விஷ்ணு தேவானந்தா என்பவர் நிறுவ, அதுவும் களவு போனது! அதன் பிறகு பிரதிஷ்டை செய்யப்பட்ட சிலைதான் தற்போதுள்ளது.

பொதிகை மலையை ஏகபொதிகை என்றும் கூறுவர். சிவபெருமான் பார்வதி திருமண கோலத்தைக் காண வந்த அகஸ்தியர், சிவபெருமானின் உத்தரவின் பேரில் தென்பகுதியான பொதிகைக்கு வந்ததால் இந்த மலை அகஸ்தியர் மலை என்றும் அழைக்கப்படு கிறது.

- வே. முத்துக்குமார்.

படம் : நவாஸ்

## வளைகாப்பு உற்சவம்

கோவில்களில் அம்மனுக்குத் திருமணம் நடைபெறுவது வழக்கம். நெல்லை காந்திமதி அம்மனுக்கு வளை காப்பு உற்சவமும் வருடந் தோறும் விமரிசையாக நடைபெறுகின்றது.

- ஆர். ஜெயலட்சுமி

படம் : ஜே.துரைராஜ்

## அல்லா, அனவரதா!

மத ஒற்றுமைக்குத் தனிச் சிறப்பு பெற்றது நெல்லையப்பர் கோவில். இங்கு சிவபெருமான் இஸ்லாமிய அன்பரான அன்வருதீன் என்பவரின் பெயரை ஏற்று அனவரதலிங்கமாக காட்சி நல்குகின்றார்.

நவாப் அன்வருதீனின் மனைவி நோய்



## படி பாயசம்!

தென்காசியிலிருந்து சுமார் 15 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது ஆய்க்குடி. ஆய்க்குடியின் பாலசுப்பிரமணியர் கோவில் தனிச்சிறப்பு. சுப்பிரமணியர் சிலை கொள்ளை அழகு.

இந்தக் கோவிலில் படி பாயசம் மிகவும் பிரசித்தம். பிரார்த்தனை செய்து கொண்டவர்களும், குலதெய்வ மாகப் போற்றுபவர்களும் இங்கே வந்து படி பாயசம் செய்து முருகருக்கு நை வேத்தியம் செய்து, பின் கோவிலின் பின் புறத்தில் ஓடும் ஆற்றின் படிகளைச் சுத்தம் செய்து, சுவையான வெல்லப் பாயசத்தைப் படிகளில் விட்டு நைவேத்திய மாகக் கொள் வர். காலம் கம்ப்யூட்டருக்கு மாற, படிப் பாயசம் பாத்திரப் பாயசமாக மாறிவிட்டது.

**- ஆர்.மீனலதா, மும்பை**

வாய்க்கட்டாள். "தென்னாடுடைய சிவனை எந் நாட்ட வரும் மனத்தில் நினைத்துக் கொண்டால் நோய் தீரும்'' என்று நண்பர்கள் கூறினர். அன்வருதீனும் அவ்விதமே செய்தார். மனைவியின் நோய் நீங்கப் பெற்றதும் அன்பர்கள் வேண்டிய படியே சிவ லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து பூஜைக்குரிய மானியமும் நல்கினார். அன்று அன்வருதீன் பிரதிஷ்டை செய்த லிங்கம் அன்வருதீன் லிங்கம் - அனவரதலிங்கமானது!

**- ஆர். மகாதேவன்**

## ஜுரதேவர்

நெல்லைக்குப் பெருமை தரும் அருள் மிகு காந்திமதி நெல்லையப்பர் கோவிலில் சுவாமி சன்னிதி பிராகாரத்தில் வீற்றிருக் கிறார் ஜுரதேவர்.

இவருக்கு வெந்நீரால் அபிஷேகம் நடக்கிறது. மிளகுப் பொங்கல் பிரசாதமாகப் படைக்கப்படுகிறது. மூன்று முகங்களுடன் காட்சியளிக்கிறார். வாதம், பித்தம், கபம் இம்மூன்றையும் தீர்க்க வல்லவர் இவர் என்பதை குறிப்பிடுவதற்கே ஜுரதேவரின் மூன்று முகம். மார்கழி மாதத்தில் ஜுர தேவருக்கு மவுசு அதிகம்.

**- என்.கோமதி, நெல்லை**

## நெல்லையிலும் கலைமகள்

தமிழ்நாட்டில் தனிக்கோவில் கொண்டு ஸ்ரீசரஸ்வதி எழுந்தருளியிருப் பது இரண்டே இடங்களில்தான். ஒன்று கூத்தனூர். மற்றது நெல்லை டவுன் கீழரத வீதியில்.

**- ஆர். ஜெயலட்சுமி**

## அதிசய மரம்!

நெல்லை மாவட்டம் ராதாபுரம் அருகே உள்ள விஜயாபதி என்ற ஊரில் விஸ்வாமித்திரர் கோவில் உள்ளது. இந்தக் கோவிலில் தில்லை என்ற பெயரில் ஒரு மரம் உள்ளது. பெரிய இலந்தைக்காய் போல் பரிபூர்ண உருண்டை வடிவத்தில் காய்க்கும் இம்மரம், கோடை காலத்தில் குளுமையாக இருக்கும்; குளிர்காலத்தில் வெப்பமாகவும் இருக்கின்றது!

**- கே.வி.சீனிவாசன், திருச்சி**

# செருப்பா சிரிக்குது!

''அய்யாவுக்கு நல்லதா ஒரு சி.டி. எடுத்துப் போடு! போட்டுக் காட்டலாம்!''

*- சக்தி.சரவணன்*





''உங்களுக்கும் உங்க கணவருக்கும் ஏதோ அபூர்வமான ஒற்று 'மைன்னு சொன்னீங்களே, என்ன அது?''

''மேரேஜ் ஆன மறுநாளே இரண்டு பேருக்கும் டைவர்ஸ் எண்ணம் வந்துடுச்சு!''

*- சீர்காழி ரேவதி*

''என்னங்க, உங்க வீட்டிலே இத்தனை ஜோடி செருப்புகள் இருக்கு?''

''அதை ஏன் கேட்கறீங்க! இந்த மாசம் மட்டும் பத்து கல்யாணம் அட்டெண்ட் பண்ண வேண்டியதாயிடுச்சு!''

*- எல்.கோபாலகிருஷ்ணன்*





''ஒருவருக்கு ஒரு பதவி என்பதை நம்ம தலைவர் தப்பா புரிஞ்சுக்கிட்டார்...''

''எப்படி?''

''குடும்பத் தலைவர் பதவியை ராஜினாமா செய்துட்டார்...''

*- நாமக்கல் பாலு*

# "நல்லொழுக்க இழையை நசுங்க விடலாமா?"

நெல்லையப்பர் கோவிலின் ரதவீதிகளுள் ஒன்றின் அருகே அமைந்துள்ள சுடலை மாடன் தெரு. தொலைபேசியில் தெளிவாகத் தாம் வசிக்கும் இல்லம் குறித்து அடையாளங்களைக் கூறியிருந்தாலும் வாசலிலேயே நின்று வரவேற்றார் தி.க.சி. ''ஒருவேளை இடம் தெரியாம தடுமாறக் கூடாது இல்லையா?''

எழுபத்தேழு வயது என்பதைவிட அத்தனை அனுபவம் என்று அவரை விவரிப்பது மேலும் பொருத்தம். தமிழக இலக்கிய உலகில் தி.க. சிவசங்கரனின் முகவரி ஆழமாகப் பதிந்துள்ளது. விமர்சனங்களுக்கு முகவரி தந்தவர்களில் முக்கியமானவர் என்றும் இவரைக் குறிப்பிடலாம்.

ஜீவநதியான தாமிரவருணி சுருங்கிவிட்டது குறித்து வருத்தப்படுகிறார். ''என்ன செய்ய, மக்கள் தொகை அதிகமாயிடுச்சே'' என்கிறார்.

ஆனால் அவரால் சமாதானப் படுத்திக் கொள்ள முடியாத வேறுசில விஷயங்கள் உள்ளன.

''ஒரு நடிகை தற்கொலை செய்துகொண்டதற்காக மூன்று இளைஞர்கள் தற்கொலை செய்து கொண்டதைப் படித்தபோது மிக வருத்தமாக இருந்தது. நம் சமுதாயம் கலாசார சீரழிவை நோக்கிப் பயணம் செய்வது குறித்து அதிர்ச்சியாக உள்ளது. நல்லொழுக்க இழை நசுங்கி வருகிறது. சரியான சிந்தனை வளர்ச்சி இருந்தால்தான் இழிகுணங்கள் அகலும். இதற்கு ஊடகங்களும் முழு அளவில் உதவ முன் வர வேண்டும். திருவி.க, ஜீவானந்தம், பாரதியார் போன்றவர்களின் எழுத்துக்கள் பொதுமை அறம் சார்ந்ததாக இருந்தன. இன்றைய தேவை அது போன்ற படைப்புகள்தான். ஆங்கிலம் கலக்காத தமிழை மட்டுமே பயன்படுத்துவது என்ற முடிவுக்கு பத்திரிகைகள் வர வேண்டும்''



தி.க.சி



வல்லிக்கண்ணன்

''என்னை அஞ்சல் அட்டை எழுத்தாளர் என்றுகூட சிலர் குறிப்பிடுவார்கள்'' என்கிறார் புன்னகையோடு. ஆனால் கடிதமெழுதுவது என்பது சுலபமான கலையா என்ன? அதுவும் தினமும் பல கடிதங்கள். (''எதிர்வினை செய்தாகணும் இல்லையா?'' என்கிறார்) குருநாதர் வல்லிக்கண்ணனுக்கு தினமும் ஒரு கடிதம். சில சமயம் இடம் போதவில்லையென்றால் 'தொடரும்' போட்டு ஒரே நாளில் இரு அஞ்சலட்டைகள்கூட அனுப்புவதுண்டாம். மனத்திற்குப் பிடித்த கதைகளையோ கட்டுரைகளையோ வாசிக்க நேர்ந்தால் உடனடியாக அது குறித்து எழுதியனுப்பும் வழக்கம் கொண்டவர். ஆனந்தத்துடன் ஒரு பட்டியலைக் காட்டுகிறார். சுமார் நாற்பது பத்திரிகைகள் தாமாக முன் வந்து இதழ்களை இவருக்கு அனுப்புகின்றன. அவற்றையெல்லாம் படிப்பதே நேரத்தில் பெரும் பங்கை எடுத்துக் கொள்கிறது. நல்ல எழுத்துக்கள் எங்கிருந்தாலும் பாராட்டும் குணம் கொட்டிக் கிடக்கிறது இவரிடம்.

பேச்சின் திசையை மாற்றும் வகையில் வருங்கால திட்டங்கள் ஏதாவது உண்டா என்று கேட்டோம். ''எவ்வளவு தூரம் முடியும்னு தெரியல்லே. ஆனால் இரண்டு நூல்களை எழுதணும்னு ஆவல் இருக்கு'' என்றார். ஒன்று வங்கிகளைப் பின்னணியாகக்கொண்டது. இன்னொன்று சோவியத் யூனியன் தொடர்பானது. இரண்டு களங்களிலுமே அழுத்தமாக தடம் பதித்தவர். ஏ.வி. தாமஸ் வங்கியில் பல வருடங்கள் பணிபுரிந்திருக்கிறார். தொழிலாளர் சங்கத்தில் முக்கியப் பங்கு வகித்ததால் நாளடைவில் பல்வேறு மாற்றங்களுக்கு ஆளாகியிருக்கிறார். பிறகு சென்னையில் உள்ள சோவியத் தூதரகத்திலும் பல வருடங்கள் பணிபுரிந்திருக்கிறார்.

''தமிழைப் பொறுத்தவரை சிறுகதைத் துறையில் ஓர் உச்சத்தை எட்டிவிட்டதாகவே படுகிறது. கட்டுரைகளில்தான் அதிக கவனம் செலுத்த வேண்டிய நிலையில் இருக்கிறோம்'' என்கிறார் தி.க.சி.

சந்திப்பு: **ஜி.எஸ்.எஸ்**

# பா.ஜ.க.வுக்கு டாடா!

◆ த.மா.கா. காங்கிரஸோடு இணைவது குறித்து இறுதி முடிவெடுப்பது தள்ளிக் கொண்டே போவதற்கு என்ன காரணம்? கட்சிப் பொறுப்புகளில் 74 சதமும், சட்ட சபைத் தலைவர் பொறுப்பும் கேட்கிறது த.மா.கா. சட்டமன்றத் தலைவர் பொறுப் பைப் பற்றி எந்த ஆட்சேபணையும் இல்லை காங்கிரஸுக்கு. ஆனால் கட்சிப் பொறுப்பு களைத் தாரை வார்ப்பதில்தான் பிரச்னை. ''இணைப்பை விரும்பாத பல த.மா.கா. பிரமுகர்கள் நேரடியாக அ.இ.அ.தி.மு.க.வுக்கு தாவுவதற்கு தயாராகி வருகிறார்கள். கோவை முன்னாள் மேயர் கோபாலகிருஷ்ணன் ஏற்கெனவே தாவி விட்டார். இது தவிர, நேரடியாக அம்மா ஜோதியில் கலக்க விரும்பாத த.மா.கா. பிரமுகர்கள் 'மூப்பனார் த.மா.கா' என்ற தனி மேடை போட்டு, அடுத்த நான் காண்டுகளுக்கு ஆளுங்கட்சிக்கு ஜால்ரா போட்டு 'காரியங்களை' சாதித்துக் கொள்ளலாம் என்ற திட்டத்தில் இருக்கிறார்கள். வலுவிழந்து வரும் த.மா.காவுக்கு 75 சதம் கட்சிப் பொறுப்பு களைக் கொடுப்பது எப்படிச் சரியா கும்? எனவே, முதலில் வந்து இணையுங் கள். பிறகு ஏற்படும் நிலையை வைத் துக் கட்சிப் பொறுப்பு களைப் பகிர்ந்து கொள்ளலாம் என்று சொல்கிறோம்'' என்கிறார் காங்கிரஸ் பிரமுகர் ஒருவர். ஆனால் வாசனோ கட்சிப் பொறுப்புகள் கைப்பற்றும் விவகாரத்தில் உறுதியாக இருக்கிறார். இணையும் தேதி தள்ளிப் போவதற்கு இதுதான் காரணமாம். "காங்கிரஸில் சேர்ந்தால் உரிய மரியாதையும் கௌரவமும் கிடைக்குமா என்பதில் எங்களுக்குச் சந்தேகம் இருக்கிறது. சட்ட மன்றத் தேர்தலோ நான்கு ஆண்டுகளுக்கு பின்னர்தான். எனவே ஆளுங்கட்சியோடு அனுசரித்துச் சென்று தேர்தல் நெருக்கத்தில் காங்கிரஸோடு இணைந்து கொள்ளலாமே... வேண்டாம் என்று ஒதுக்கி விடவா போகிறார்கள்?'' என்று கேட்கிறார் இப்போது இணைப்பை விரும்பாத த.மா.கா. சீனியர் பிரமுகர் ஒருவர். பிழைக்கும் வழி காங்கிரஸில் கௌரவம் எதிர்பார்க்கும் இவர்களுக்கு அ.இ.அ.தி.மு.க.வால் அவமா னம் ஏற்பட்டால் அது ஒரு பொருட்டல்ல போலிருக்கிறது.





◆ பா.ஜ.க. அமைச்சரவையிலிருந்து விலகி தெலுங்கு தேசம் போல பிரச்னை களின் அடிப்படையில் என்.டி.ஏ. அரசுக்கு ஆதரவு கொடுக்கும் நிலையை எடுத்தா லென்ன என்று கலைஞர் சிந்தித்துக் கொண்டிருக்கிறாராம். ஆனால் கட்சியின் சீனியர் பிரமுகர்களோ, "அவசரப்பட வேண் டாம்'' என்று சொல்கிறார்கள். உள்ளூர் பா.ஜ.க. தலைவர்கள் வாய் நீளம் காட்டுவது ஒரு பக்கம் இருக்க, மத்தியிலும் உள்ள அம்மா பக்தர்களான சில பா.ஜ.க. பிரமுகர் கள் கழகத்தைச் சீண்டிப் பார்ப்பது குறித்து கலைஞருக்கு வருத்தமாம்.

"நம்பிக்கைக்குரிய கூட்டணிக் கட்சியாக இருப்பதால் தி.மு.க.வை விட்டு விட வேண்டாம்'' என்பது வாஜ்பாய் நிலை. சமீபத்தில் மதப் பெரியவர் ஒருவர் தி.மு.க.வை உடனடியாக கழற்றி விட்டு அ.இ.அ.தி.மு.க.வைச் சேர்த்துக் கொள்ளும் படி பிரதமரிடம் சொன்ன போது, "எனக்கு மற்றொரு தலைவலியைக் கொண்டு வராதீர்கள்'' என்று சிரித்துக் கொண்டே சொன்னாராம் பிரதமர்.

— சஞ்சயன்

# காதில் விழுந்தவை



அன்னமே பிரம்மா!   அன்னமே விஷ்ணு!   அன்னமே சிவன்!

# புண்ணியக்ஷேத்ரம் ராமேஸ்வரத்தில் அமாவாஸை தினத்தில் அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

அன்புடையீர், அனேக நமஸ்காரம். தலம், தீர்த்தம், மூர்த்தி இவற்றால் சிறப்புக்குரிய பல க்ஷேத்ரங்களில் ராமேஸ்வரம் பெருமைமிக்க புண்ணிய ஸ்தலமாகும். ராமஸேது, ஸேது ஸ்தலம் என்று போற்றப்படும் ராமேஸ்வரம், வடக்கே எப்படி காசி நகரம் புகழ்மிக்கதோ அதேபோன்று தெற்கில் ராமேஸ்வரம் புகழ்மிக்க புண்ணிய க்ஷேத்ரமாகும். ராமேஸ்வரத்தில் அன்னதானம் செய்வதும் ஜபம், ஹோமம், தானம் செய்வதும் அழியாத புண்ணியப் பலனைக் கொடுக்கும்.

*ராமேஸ்வரத்தில் அமாவாஸை தினத்தில் அன்னதானம் செய்தால் மனித குலம் மாபெரும் புண்ணியத்தை பெறும். புத்திரப்பேறு உண்டாகும். நாகதோஷம் முதலியன நீங்கும். பிரம்மஹத்தி தோஷம் நிவர்த்தியாகும். ராமேஸ்வரத்தில் அமாவாஸை அன்று அன்னமளிப்பவன் ப்ராணனளிப்பவன் ஆகிறான். இந்த புண்ணிய பூமியில் அன்னமளிப்பவன் மிக்க செல்வந்தராய் பிறப்பான். வறுமை நீங்கி, பெரும் பணக்காரனாவான். அன்னதானம் செய்பவனுக்கு போகமும், ஆயுளும், அழகும் பெருகும். பலம், புகழ், கீர்த்தி இவை உண்டாகும்.*

★ தடைபட்ட திருமணம், புத்திர பாக்யம் இவை உண்டாகும் ★ வறுமை அகல ★ கண் திருஷ்டி, பொறாமை, வீண் விரோதம், கொடிய நோய்கள் நீங்க ★ தொழில் மந்தம் நீங்கி முன்னேற்றம் காண ★ பிரிந்தவர்கள் ஒன்றுசேர ★ நீண்ட ஆயுள், கடன் தொல்லையிலிருந்து விடுதலை ★ மனநிம்மதி பெற ★ பெற்றோர், மூதாதையர் நினைவு நாளில் ★ ஆக நீங்கள் நினைத்த காரியம் நிறைவேற நாங்கள் உங்கள் சார்பாக பூஜை செய்து, அன்னமளித்து, பிரஸாதம் அனுப்பி வைக்கிறோம்.

★ சிறிய தொகை, மற்றும் அரிசி போன்ற உணவு பொருட்களும் ஏற்றுக் கொள்ளப்படும்.
★ ரூ. 500 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் ஒரு ஆண்டுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ. 1000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ. 5000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் ஐந்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

ரூ. 1000 மற்றும் ரூ. 5000 அளிக்கும் நன்கொடையாளர்களுக்கு திருவெண்காடு கவி-ந்யாய-மீமாம்ஸ சிரோமணி ஸ்ரீமான் டி.கே. முத்துஸ்வாமி சாஸ்திரிகளால் தயாரிக்கப்பட்டு பூஜையில்வைத்த அபூர்வ யந்திரம், அன்பர்களின் விருப்பத்திற்கேற்ப எந்த யந்திரம் தேவையோ அந்த யந்திரம் இலவசமாக வழங்கப்படும். அல்லது பகவத்கீதை புத்தகம் அல்லது கந்தபுராணம் புத்தகம் இலவசமாக அனுப்பி வைக்கப்படும். ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்திக்கு அணில் செய்த ஸேவை போல் இந்த லோகக்ஷேமத்திற்கு நம்மால் இயன்றளவில் உபகாரம் செய்திடுவோம். நேரில் கலந்து கொள்ள அன்புடன் அழைக்கிறோம்.

நன்கொடை அனுப்பும் அன்பர்கள் **GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST, CHENNAI - 41** என்ற பெயரில் CHEQUE/D.D./M.O. மூலம் கீழ்க் கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கலாம். என்றென்றும் புனித ஸேவையில் மனப்பூர்வமாக செயலாற்றும் எமது பணிக்கு உங்களது மேலான ஒத்துழைப்பை என்றென்றும் நாடுகிறோம்.

*CHEQUE/D.D./M.O. அனுப்ப வேண்டிய முகவரி :*


## கோபுர தரிசனம் அன்னதான அறக்கட்டளை

**GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST**

M-11/F4TNHB FLATS, I AVENUE, THIRUVALLUVAR NAGAR,
THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA
Ph : 4900303, 4900603 Fax : (044) 4916316


பரோபகாரார்த்தம் இதம் சரீரம் ★ அன்னதானம் அமிர்ததானம் ★ ஸர்வேஜனா: - ஸுகினோபவந்து

# தென்தணிகைத் தேவன்

குருஜி ஏ.எஸ். ராகவன்

சேக்கிழாருக்குக் கோயில் அமைந்த ஊர் குன்றத்தூர். அவர் பிறந்தது இவ்வூரில் தானே! திருத்தொண்டர் புராணம் என்றும் பெரிய புராணம் என்றும் அறியப்படும் தெய்வத் தமிழ்க் காப்பியத்தைப் படைத்த வர். இவருடைய இயற்பெயர் அருள் மொழித் தேவர். வேளாண்மைத் தொழில் புரியும் சேக்கிழார் குடியில் பிறந்தவர். அக் குலத்திற்குப் பெயர் சேர்த்துத் தந்ததால் சேக்கிழார் என்று அழைக்கப்பட்டார். சேக்கிழாருக்கான கோயில் ஒரு பக்கம், சேக்கிழாரே தமது இஷ்ட தெய்வமான நாகேஸ்வர பெருமானுக்குக் கட்டிய கோயில் இன்னொரு பக்கம்.. இவை போதா தென்று திருஊரகப் பெருமான் கோயில், கந்தழீஸ்வரர் ஆலயம் என பலப்பல பழை மையான கோயில்கள் இருந்தாலும் குன்றத்தூர் என்றதும் இன்று ஞாபகம் வருவது அவ்வூருக்குப் பெயரை வழங்கி நிற்கும் சிறு குன்றின் கிரீடமாக ஜொலிக்கிற முருகன் கோயில்தான்!

குன்றத்தூர் கடைவீதியைக் கடந்து போனால் குன்றின் அடிவாரத்தை அடை கிறோம். பதினாறு கால் மண்டபம் சற்றே சிதிலமான நிலையில் காணக்கிடைக்கிறது. மண்டபத் தூண்களிலுள்ள காமாக்ஷி, ஆஞ்சநேயர், திருமால் சிற்பங்கள் அழகா யிருக்கின்றன. சிற்ப மண்டபத்தில் நின்று நம்மைச் சுற்றி ஒரு நோட்டம் விட்டால்... மூன்று புறமும் வயல்கள் விரிந்து கிடக்கின் றன; நாம் கடந்து வந்த திக்கில் மட்டும் கிராமத்து வீதி விரிகிறது.

77 படிகளை ஏறி கோயிலை அடை கிறோம். அதன் வாயிலில் ராஜகோபுரம். மூன்று நிலை கொண்டது. கோபுர வாசலி லிருந்து ஆறுபடிகள் ஏறி கோயிலுக்குள் செல்ல வேண்டும். அறுமுகக் கடவுளையும் அறுபடை வீடுகளையும் நினைவூட்டும் படிகள்!

தீபஸ்தம்பம், பலிபீடம், கொடிமரத்தை யெல்லாம் தாண்டி வெளிப்பிராகாரத்தின் வடக்கு மூலையில் நவக்கிரஹங்களை வணங்குகிறோம். வில்வமரத்தடியை யொட்டி நாகர்கள். வேம்பும் அரசும் சேர்ந்து வளர்கின்றன. நாகலிங்கேசுவரர் சந்நிதி இங்குதான் உள்ளது. முருகன் சன்னிதியை நோக்கியபடி மயிலுருவங்கள் இரண்டு அமைக்கப்பட்டுள்ளன. ஸ்தல விருட்சமான வில்வம் ஓங்கி வளர்ந்திருக் கிறது.

வெளி மண்டபத்து தெய்வங்களான வினாயகர் விஸ்வநாதர் - விசாலாக்ஷியை வணங்கிவிட்டு அர்த்த மண்டபத்தினுள் செல்ல வேண்டும். மூலஸ்தான முருகன் வள்ளி தேவஸேனா சமேதனாய் வடக்கு நோக்கி நிற்கிறான். ஒரு திருமுகம்; நான்கு கரங்கள். அபய ஹஸ்தம் ஒன்று; மற்றொரு கீழ்க்கரம் தொடையில் ஊன்றி ஒயிலாய்ப் பொருத்தியிருக்கிறது. மேலிரு கரங்களும் ஆயுதங்கள் ஏந்திய நிலையில் இருக்கின்றன.

கருவறை அமைப்பில் ஒரு சிறப்பு காணக் கிடைக்கிறது.



முருகனையும் அவனிரு தேவியரையும் ஒரு சேரக் காண முடியாத வகையில் வாயில் அமைப்பு. ஒரு பக்கத்திலிருந்து பார்த்தால் வள்ளியுடனும் இன்னொரு பக்கமிருந்து பார்த்தால் தெய்வானையுடனும் காட்சி தருகிறான். நட்ட நடுவே நின்றால் முருகனை மட்டுமே காண முடியும்.

**கு**ன்றத்தூரில் முருகன் குடியேறிய கதை ஒன்று உண்டு:

திருக்கூவம் என்னுமிடத்தில் தங்கியிருந்த தாரகன் என்ற அரக்கனுடன் போர் புரிந்து வென்றான் முருகன். இப்போர் நடந்த இடம் தான் திருப்போரூர். வெற்றிக் கோலத்தில் வள்ளி–தெய்வானையுடன் தேவர்களுக்குக் காட்சிதர அவன் தேர்ந்தெடுத்த இடம்தான் திருத்தணி. திருத்தணி செல்கிற வழியில் ஒரு முகூர்த்த நேரம் குன்றத்தூரில் இச்சிறு குன்றின்மேல் தங்கியிருந்தானாம். இக்கதையின் அடிப்படையில்



## அருள்வாக்கு

பக்தி செலுத்துவதால் முக்தி கிடைத்துவிடுமென்று சொன்னால் நாம் செலுத்தும் அந்த பக்தியே நேராக முக்தியைக் கொடுத்து விடுகிறது என்று அர்த்தமில்லை. நாம் செய்கிற எதுவுமே தானாக எந்தப் பலனையும் தருவதில்லை. பலன்களைத் தருகிற பலதாதாவாக ஈச்வரனே இருக்கிறான். அவன்தான் பாப புண்யம் பார்த்து எல்லாருக்கும் எல்லாப் பலனையும் கொடுக்கிறான். அவ்விதத்தில் நாம் பண்ணுகிற பக்திக்குப் பலனாக அவன் பரம க்ருபை செய்து, ஞானத்தைத் தந்து, அந்த ஞானத்துக்குப் பலனாக மோக்ஷாநுபூதியைக் கொடுக்கிறான். ஆக, பலன் தருவது நாம் பண்ணும் பக்தியே அல்ல; அதற்குப் பிரதியாக ஈச்வரன் செய்யும் கிருபைதான் பலனைத் தருவது.

பக்தி நிஜமானதாக இருந்தால் பக்தி பண்ணுகிறவன் அதற்கு ப்ரதியே எதிர்பார்க்க மாட்டான். ப்ரதி ப்ரயோஜனம் எதிர்பார்த்து விட்டால் அது வியாபாரம் தானேயொழிய பக்தி இல்லை என்றே பாகவதாதி நூல்களில் சொல்லியிருக்கிறது. இப்படி பக்தன் (ப்ரதி வேண்டாமல்) இருந்தாலும் இவனிடமிருந்து நிஜமான பக்தியைப் பெற்றுக் கொண்ட பகவானுக்கு மனசு கேட்குமா? அதனால் அவன் க்ருபை பண்ணத்தான் பண்ணுவான். ஞானத்தை அநுக்ரஹிக்கத்தான் செய்வான். பக்தனை ஸம்ஸாரத்திலிருந்து விடுவித்து மோக்ஷத்தில் சேர்க்கத்தான் செய்வான்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

இவ்வூருக்குத் 'தென் தணிகை' என்றும் ஒரு பெயர் வழங்குகிறது.

*கோடாத வேதனுக் கியான்செய்த*
*குற்றமென் குன்றெறிந்த*
*தாடாள னேதென் தணிகைக் குமரநின்*
*றண்டையந்தாள்*
*சூடாத சென்னியு நாடாத கண் ந்*
*தொழாதகையும்*
*பாடாத நாவு மெனக்கே தெரிந்து*
*படைத்தனனே.*

என கந்தரலங்காரத்தில் அருணகிரிநாதர் பாடுகிறார். இதிலே இடம்பெறும் தென் தணிகைக் குமரன் குன்றத்தூர் முருகனே என்று எண்ண இடமிருக்கிறது.

சென்னையிலிருந்து சுமார் முப்பது கிலோமீட்டர் தொலைவிலுள்ள இந்த தலம் 'செல்வமாகுன்றத்தூர்', 'செப்பரிய குன்றைப் பதி', 'புகலும் வேதத் தமிழ்க் கண் உள்ள மெய்மையை விரித்துத் தெரிந்தருள் செய் குன்றத்தூர்' என்று பலவாறு புலவர்களால் போற்றிப் புகழப்பட்டிருந்தாலும் இடையே சிறிது காலத்துக்கு, அதிகமாய் பக்தர்கள் செல்லாத ஒதுக்குப்புறமான தலமாயிருந்து வந்தது.

கடந்த 16 ஆண்டுகளாக அங்கே ஒவ்வொரு ஜனவரி மாதமும் இரண்டாம் ஞாயிற்றுக்கிழமையன்று 'திருப்புகழ் திருப்படி விழா' நடத்தி வருகிறார்கள் திருப்புகழ் அன்பர்கள் குழுவினர். அன்றைய தினம் மூலவருக்கு நடக்கும் அபிஷேகமும் உத்ஸவருக்கு நடக்கும் ஷோடச உபசாரங்களும் கண்கொள்ளா காட்சிதான். திருப்புகழ் திருப்படி விழாவும் அதனால் தூண்டப்பட்டு வேறு பல விழாக்களும் இங்கே நடக்க நடக்க, உள்ளூர் மக்களும் அக்கம் பக்கத்து கிராமத்தினரும் குன்றத்தூர் முருகனை நாடி வர ஆரம்பித்தனர்..

சித்திரை ஷஷ்டி, வைகாசி விசாகம், ஆடி கிருத்திகை என்று இப்போது மாறி மாறி விழா கோலம் பூண்டு முருகன் மெய்யன்பர்களுக்கு அனுக்கிரஹம் செய்து வருகிறான்.

மூன்று திருப்புகழ் பாடல்கள் குன்றக்குடி தலத்துக்கு உரியவை என்று ஆய்வாளர்கள் குறிப்பிடுகிறார்கள். 'இல்லையில்லை அவை குன்றத்தூருக்கே உரியவை' என்கிறார்கள் இவ்வூர்க்காரர்கள்.

எத்தலத்துக்குரியதாயின் என்ன..? திருப்புகழ் திருப்புகழ்தானே! முருகன் முருகன் தானே!

**"எழுது கும்ப கன்பி னிளைய தம்பி**
**தம்பி**
**யெதிர டைந்தி றைஞ்சல்**
**புரிபோதே**
**இதம கிழ்ந்தி லங்கை யசுர ரந்த ரங்க**
**மொழிய வென்ற கொண்டல்**
**மருகோனே**
**மழுவு கந்த செங்கை அரனு கந்தி**
**றைஞ்ச**
**மநுவி யம்பி நின்ற குருநாதா**
**வளமி குந்த குன்ற நகர்பு ரந்து துங்க**
**மலைவி ளங்க வந்த பெருமாளே"**

# பிரச்சனைகள் தீர வழி

- ★ எண் கணித முறைப்படி உங்கள் பெயரை மாற்றியமைத்து உங்கள் பிரச்சனைகளை தீர்க்கலாம்.
- ★ உங்கள் ராசிக்கேற்ற 'கற்கள்' அணிந்து உங்கள் பிரச்சனைகளை தீர்க்கலாம்.
- ★ வீட்டின் 'வாஸ்து' நிலைமை சரி செய்து உங்கள் பிரச்சனைகளை சரி செய்யலாம்.
- ★ உடல் உபாதைகளை 'ரெய்கி' மூலம் சரி செய்யலாம்.
- ★ யந்திரங்கள் மூலம் உங்கள் பிரச்சனைகளை தீர்த்துக் கொள்ளலாம்.

*இப்படி உங்கள் பிரச்னைகள் தீர பலவழிகள் உள்ளது. இன்றே அணுகுவீர்*



**நியூமராலஜி, ஜெம்மாலஜி, பெங்சூய் (சீனவாஸ்து), ரெய்கி, யந்தராஸ்**

ஆகியவற்றின் மூலம் தீர்வு காண்கிறார்

ஸ்ரீதேவி உபாசகர் **பி.ஆர்.ஸ்ரீராம்**

முகவரி : புதிய எண்.84, பழைய எண்.90, ஜி.என்.செட்டி தெரு,
2வது மாடி, வாணிமஹால் எதிரில், தி.நகர், சென்னை - 17.
செல் : 98400 63723 E-mail : prsriram@yahoo.com



**வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.**

அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி (Regd)
89, (ப.எண் 42) காமாக்ஷி ஜோஸியர் தெரு, கும்பகோணம்-612 001.
E-mail : vedagdps@sancharnet.in - Website : www.geocities.com/gdpskmu

☎ : (0435)
Off : 425948
Fax : 423777
Patasala : 422866

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு, பராமரிப்பு செலவை ஒரு குடும்பம் எடுத்துக்கொண்டால், பேருபகாரமாக இருக்கும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 460 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 120 மாணவர்களுக்கு 12 வேத, சாஸ்திர அத்யாபகர்கள், புராதனமான குருகுல முறைப்படி ரிக் வேதம், க்ருஷ்ண, சுக்ல யஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம். *புதிய பாடசாலை கட்டிட நிர்மாணப்பணி துவங்கப்பட்டு நடைபெற்று வருகிறது. நன்கொடை வரவேற்கப்படுகிறது.*

| தங்கள் நன்கொடைக்கு U/S 80-G பிரிவின்படி வருமான வரி விலக்கு உண்டு<br>திட்ட விபரங்கள் | ஒரு முறைக்கான நன்கொடை தொகை (One Time) | நிரந்தர வைப்பு நிதி 'Corpus Fund' |
|---|---|---|
| ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி தொகை) | Rs. 500 | Rs. 5000 |
| அமாவாஸ்யை (or) பௌர்ணமி (or) க்ருஷ்ண (or) சுக்ல பக்ஷ த்வாதசி ஸமாராதனைக்கு<br>[Please choose one specific (the above said ) day of a particular month in a year for Samaradhana] | Rs. 1,500 | Rs.15,000 |
| ஒரு வேதம் பயிலும் மாணவனின் பராமரிப்பு ஒரு மாத செலவு ரூ.1000/- | Rs. 12,000 P.A | Rs. 1 Lakh |

**Cross** செய்யப்பட்ட **D.D.**-ஐ **A.V.M.S.G.D.P.S. Samithi** என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.





• பி. சுப்பிரமணியன்

# சைதாப்பேட்டை லேட்டஸ்ட்!

**வடசென்னை ஏற்கெனவே கையை விட்டுப்போன நிலையில் தென் சென்னை தொகுதியான சைதையில் வெற்றி பெற வேண்டுமென்பது தி.மு.க.வுக்கு கௌரவப் பிரச்னை!**



• தமுக்கு அடித்துப் பிரசாரம்...

ஜீப்புக்கு முன்னே பதினைந்து குதிரைகளில் தொண்டர்கள் (?) கொடி பிடித்தபடி அணி வகுத்துச் செல்ல, அதைத் தொடர்ந்து சூரிதாரில் இளம்பெண் கள், மகளிர் அணி என்று வர, வேர்க்க விறுவிறுக்க, ஜீப்பில் நின்றபடி வருகிறார் ராதாரவி. உடன் சைதை துரைசாமி, கராத்தே தியாகராஜன், சுலோசனா சம்பத். அனல் காற்றில், சுட்டெரிக்கும் சூரியனின் கீழ் பத்து நாட் களாகச் செய்யும் பிரசாரத் தின் காரணமாக முகம் கறுத்துப் போயி ருக்கிறது. ஜீப்பில் இருக்கும் ஒளிவிளக்குகள் அவர் முகத்தை ஓரளவு பிரகாசமாக்குகின்றன. சந்துக்குச் சந்து பத்தாயிரம் வாலாக்களின் சப்தம் காதை டிரில் செய்கிறது. மாடிகளிலிருந்து உதிரி மலர்கள் கொட்டப்படுகின்றன. சைதை தொகுதியில் 135ம் வட்டத்தில் ஆடம்பரமான பிரசாரத்தின் உச்ச கட்டம் அரங்கேற்றப்படுகிறது. போலீஸ் லைனில் வீட்டு வாசலில் வந்து வோட்டு கேட்கும் ராதாரவியிடம் இதுதான் வாய்ப்பு என்று ஒரு பெண்மணி "குடிநீர்த் தவிர மற்ற தேவைகளுக்காக போர்வெல் போட்டு

# கலகலக்குதா கழகக் கோட்டை?

மோட்டாரும் வைச்சுட்டாங்க. ஆனா கனெக்ஷன் கொடுக்கலை. ஒரு வருஷமா இதுதான் நிலை. நீங்க கனெக்ஷன் கொடுத்திங்கன்னா புண்ணியமாப் போகும். இங்கு இருக்கிற 250 வோட்டும் உங்களுக்குத்தான்'' என்கிறார். உடனே சைதை துரைசாமி "மனு எழுதிக் கொடுங்கம்மா. நாளைக்கே பார்த்து விடுகிறோம்'' என்று லோக்கல் கட்சிப் பிரமுகரிடம் மறுநாள் மனுவாங்கி வரும்படி உத்தரவு போடுகிறார். இந்த வட்டத்தில்



மட்டுமல்ல, சைதை தொகுதிக்கு உட்பட்ட பத்து வட்டங்களிலும் அமைச்சர்களும் அதிகாரிகளும் ஓடி, ஓடி மக்கள் குறைகளைக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். 'எப்படியும் தி.மு.க.வைத் தோற்கடிக்க வேண்டும்' என்பது அவர்களின் ஒரே குறிக்கோள். தி.மு.க.வுக்கு இந்தத் தொகுதியில் ஜெயிக்க வேண்டுமென்பது ஒரு கௌரவப் பிரச்னை. இந்தத் தொகுதியில் தோற்றால் சென்னை தி.மு.க.வின் கோட்டை என்ற இமேஜ் தூள்தூளாகும் என்ற உக்ரமான போட்டி. வட சென்னை தி.மு.க. கையைவிட்டுப் போய்விட்டது.

"புரட்சித் தலைவி சைதை துரைசாமியை நிறுத்தியிருந்தால் இவ்வளவு கஷ்டப்பட வேண்டியதில்லை'' என்கிறார் ஓர் ஆளுங் கட்சிப் பிரமுகர். பண பலமும் படை பலமும் இருக்க அசுர பலத்தோடு களத்தில் நிற்கிறது அ.தி.மு.க. தொகுதிகளைச் சுற்றிப் பார்த்தால் வேறு யாரும் போட்டியிடவில்லையோ என்று சொல்கிற அளவுக்கு அ.தி.மு.க. கொடிகள், பேனர்கள் சுவர் விளம்பரங்கள். "நாங்கள் ஒவ்வொரு வீட்டிலும் அனுமதி கேட்டு சுவர் விளம்பரம் எழுதுகிறோம். ஆனால் அடாவடித்தனமாக ஆளுங்கட்சி அனுமதி கேட்காமலேயே சுவர்களில் எழுதுகிறது. இதனால் செட்டித் தெரு மக்கள் கோபப்பட்டு ஆளுங்கட்சிக்கு வோட்டுப் போட வேண்டாம் என்று முடிவெடுத்துவிட்டார்கள்'' என்கிறார் முன்னாள் தி.மு.க. அமைச்சர் பொன்முடி.

"சென்னை தி.மு.க.வின் கோட்டை என்பது ஒரு மாயத் தோற்றம். தொடர்ந்து தி.மு.க. இங்கு வெற்றி பெறக் காரணம் கள்ள வோட்டுதான். அது இந்த முறை நடக்காது''

என்கிறார் அதி.மு.க. சட்டமன்ற உறுப்பினர் மனோஜ் பாண்டியன். சைதை தொகுதியின் ஒவ்வொரு வட்டத்திலும் வெளியூர் ஆட்களைக் கொண்டு குவித்திருக்கிறது. ஆளுங்கட்சி வாக்காளர் பட்டியலும் கையுமாக ஆளுங்கட்சிப் பிரமுகர்கள், வீட்டுக்கு வீடு, இருப்பவர்கள், செத்தவர்கள் மற்றும் வெளியூர் போனவர்கள் லிஸ்ட் எடுக்கிறார்கள். ஒவ்வொரு வாக்காளர் தோற்றமும் குறித்து வைத்துக் கொள்ளப்படுகிறது. "அதிகார வர்க்கமும் துணையிருக்க இந்த முறை தி.மு.க. கண்டிப்பாக கள்ள வோட்டுப் போட முடியாது" என்கிறார் ஓர் அதி.மு.க. பிரமுகர். "இவர்கள் செய்கிற முஸ்தீபுகளைப் பார்த்தால் ஆளுங்கட்சிதான் கள்ள வோட்டுப்போட முழு முயற்சி எடுக்கும் என்று தெரிகிறது. ஏற்கெனவே 18000 வாக்காளர்களைச் சேர்க்கப் பார்த்தார்கள். நாங்கள் விழிப்புடன் இருந்ததால் முடியவில்லை. போலி அடையாள அட்டை தயார் செய்ய, புகைப் படமெடுக்கும் வேலையை மூன்று நாள் நீட்டிக்கும்படி கேட்டார்கள். அவர்களின் கோல்மாலை உணர்ந்த நாங்கள் 'நீட்டிக்கக் கூடாது' என்று மனு கொடுத்து குறிப்பிட்ட தேதியுடன் நிறுத்தினோம். அதன் பின் வாக்குச் சாவடியில் பட்டியலில் பெயர் இருக்கும் பட்சத்தில் அடையாள அட்டை இல்லாதவர்கள் கிராம நிர்வாக அதிகாரி சான்றிதழ் கொடுத்தால் வோட்டுப் போடலாம் என்றிருந்ததை மாற்றி தாசில்தாரும் கூடுதல் கையெழுத்துப் போட வேண்டும்'' என்று தேர்தல் கமிஷன் உத்தரவிட வேண்டி மனு கொடுத்தோம். இப்போது வி.ஏ.ஓ. சான்றிதழில் தாசில்தார் கையெழுத்தும் இருக்க வேண்டும் என்று தேர்தல் கமிஷன் உத்தரவு போட்டுவிட்டது. இப்படியாக ஆளுங்கட்சி கள்ள வோட்டுப் போட தயாராக வைத்திருந்த திட்டங்களை நொறுக்கிவிட்டோம். அதனால் இப்போது வாக்குப்பதிவு அன்று எங்கள் தொண்டர்களை அடித்துவிரட்டி விட்டு போலீஸ் துணையுடன் வோட்டிங் மிஷினைக் கையாள திட்டம் போடுகிறார்கள். அதையும் முறியடிப்போம்'' என்கிறார் தி.மு.க. தேர்தல் பொறுப்புக் குழு உறுப்பினரான கே.எஸ். ராதாகிருஷ்ணன்.

பால் கட்டணம், பஸ் கட்டணம், மின் கட்டணம் ஆகியவற்றை உயர்த்தி நகர மக்களை நோகடித்த ஆளுங்கட்சி, சாதனைகள் ஏதும் சொல்லி வோட்டுக் கேட்பதில்லை. மாறாக 1996 - 2001ல் சைதை கிட்டு தொகுதிக்குச் செய்த பணிகளைப் பட்டியலிட்டு வோட்டு கேட்கிறார் தி.மு.க. வேட்பாளர் மா. சுப்பிரமணியன். தொகுதி முழுக்க கழகத் தொண்டர்களுக்கு நன்கு அறிமுகமானவர் இவர்.

"எதிர்க்கட்சி வேட்பாளருக்கு வோட்டுக் போட்டு வெற்றி பெற வைத்தால் பணிகள் ஏதும் நடைபெறாது. எனவே ஆளுங்கட்சிக்கே போட்டு விடலாம்'' என்ற மனோபாவம் மக்களிடம் இருக்கிறதா என்று மா.சு. விடம் கேட்டோம். "நான் ஏற்கெனவே இந்தத் தொகுதிக்கு மாநகராட்சி ஜோனல் சேர்மன். எனவே என் மூலமாகத்தான் தொகுதியின் அடிப்படைப் பிரச்னைகள் தீர்க்கப்பட வேண்டும். எனவே வளர்ச்சிப் பணிகளுக்கு எந்த பாதிப்பும் இருக்காது" என்றார் அவர்.

"பாராளுமன்ற உறுப்பினர் டி.ஆர்.பாலுவின் தொகுதி நிதியிலிருந்து பல நல்ல காரியங்கள் தொகுதியில் செய்யப்பட்டிருக்கின்றன. குறிப்பாக, அடையாறு ஆற்றைச் சுத்தப்படுத்தவும், வெள்ளத் தடுப்புச் சுவர் கட்டவும் மத்திய சுற்றுச் சூழல் இலாகா நிதி ஒதுக்கியிருக்கிறது. ஆனால் அ.தி.மு.க. அரசு இதில் வேகம் காட்ட மறுக்கிறது. அதே போல் கிண்டி பகுதியையும், சைதையையும் இணைக்கும் விதமாக பாலம் கட்ட தி.மு.க. அரசில் அனுமதி தரப்பட்டது. கடந்த ஒரு வருட காலமாக அ.தி.மு.க. அரசு இது குறித்து எந்த நடவடிக்கையும்

---

**''நாம காதலிச்சிருக்கவே கூடாது உமா!''**

**''ஏன்? உங்க அப்பா அம்மா திட்டறாங்களா?''**

**''ம்ஹூம். பாக்கிக்காக சுண்டல்காரன் திட்டறான்!''**

**- எம். அசோக்ராஜா**



எடுக்கவில்லை" என்கிறார் மா.சுப்ரமணியம். சி.பி.எம். சார்பில் நந்தகோபால் என்பவர் நிற்கிறார். பரந்த தொகுதியில் இவரது எளிமையான பிரசாரம் எடுபடுவது சந்தேகமே. ம.தி.மு.க. சார்பில் ப. சுப்பிரமணியம் போட்டியிடுகிறார். பெயர்க் குழப்பம் காரணமாக தி.மு.க. வோட்டுக்கள் ம.தி.க.வுக்கு விழக்கூடும். ஜாபர்கான் பேட்டைப் பகுதியில் இவரது பிரசாரம் பளிச்சென்று தெரிகிறது.

மா.சு. பிரசாரம் மிக எளிமை. காலையில் ஒரு குறிப்பிட்ட வட்டத்தில் வீடு வீடாகச் சென்று வோட்டு கேட்கிறார் இவர். அதே வட்டத்தில் மாலை ஸ்டாலினுடன் ஜீப்பில் தெருத்தெருவாகச் சென்று வோட்டு கேட்கிறார். எட்டு, எட்டரை மணி வாக்கில் பிரசாரத்தை முடிக்கும் ஸ்டாலின், கட்சி தேர்தல் அலுவலகத்துக்கு வந்து ஆலோசனையில் ஈடுபடுகிறார். சைதை தொகுதிக்கு இடைத் தேர்தல் எப்படி வந்தது என்பதை விளக்கும் வகையில், தி.மு.க. பேரணியில் போலீஸ் அடக்குமுறை, அதன் காரணமாக அதிர்ச்சியில் வை.பெருமாள் மரணம் என்பதைச் சொல்லி வோட்டுக் கேட்கிறார்கள் தி.மு.க. பிரமுகர்கள். தி.மு.க. தேர்தல் அலுவலகத்தைவிட அ.தி.மு.க. தேர்தல் அலுவலகத்தில் கூட்டம் ஜெ... ஜெ... வென்று இருக்கிறது. காரணம் தெரிந்ததுதான்.

"ஏற்கெனவே மாநகராட்சி தேர்தலில் வோட்டுப்பதிவன்றும், பின்னர் எண்ணிக்கையின் போதும் போலீஸ் துணையுடன் அராஜகத்தை ஏவி விட்டது ஆளுங்கட்சி. இந்த முறையும் அதே யுக்தியைக் கையாள நினைத்தால் தக்க பதிலடி கொடுப்போம் என்கிறார்கள் தொகுதி தி.மு.க. பொறுப்பாளர்கள்.

சென்னை போலீஸ் தி.மு.க. பிரமுகர்கள், சில கீழ்மட்ட போலீஸ் அதிகாரிகள் போயஸ் தோட்டத்துக்கு விஸ்வாசமானவர்கள் என்பதைச் சுட்டிக் காண்பிக்கிறார்கள். "என்னதான் மத்திய போலீஸைப் போட்டாலும், அவர்கள் லோக்கல் போலீஸ் உத்தரவுபடித்தானே செயல்படணும்" என்கிறார் ஒரு தி.மு.க. பிரமுகர். தேர்தலுக்கு ஒரு மாதம் முன்பே தேர்தல் வேலையில் அனுபவம் வாய்ந்த 20 தி.மு.க. தொண்டர்களை, குண்டர்கள் சட்டத்தில் பிடித்து விட்டார்களாம். தேர்தல் நெருக்கத்தில் இன்னும் சிலரைக் கைது செய்யக் கூடும்.



"ஆனாலும் அந்த ரவுடிக்கு பந்தா ஜாஸ்திதான்."
"எதை வைச்சுச் சொல்றே?"
"பின்னே பாரேன், 'கபாலி, எலும்பு முறிவு நிபுணர்'னு வீட்டு வாசல்லே போர்டு மாட்டி வச்சிருக்கான்!"
- எல். கோபாலகிருஷ்ணன்

தேர்தல் அன்று 135, 138, 139, 141 ஆகிய வட்டங்கள் கலவர பிரதேசங்கள் ஆகக் கூடும். "காலை பத்து மணிக்குள் ஆட்களை வோட்டுப் போட வைத்துவிட்டு வாக்குச் சாவடி அருகில் கலவரத்தை அரங்கேற்ற ஆளுங்கட்சி தயாராகிறது. அப்படிக் கலவரம் செய்தால் நடுநிலை வாக்காளர்களை வாக்குச் சாவடி பக்கம் வரவிடாமல் தடுக்கலாம் அல்லவா?" என்கிறார் ஒரு தி.மு.க. பிரமுகர். எந்தவித சூழலுக்கும் பயப்படாமல் வாக்காளர்கள் துணிந்து வந்து வோட்டுப் போட வேண்டும்" என்கிறார் மா. சுப்பிரமணியம் "முறையாகத் தேர்தல் நடந்தால் தி.மு.க. தான் வெற்றி பெறும்" என்கிறார் அவர். சென்ற சட்டமன்றத் தேர்தலில் 135, 141 ஆகிய வட்டங்களில் அதிகம் வோட்டு பெற்று தி.மு.க. வென்றதால் அங்கு ஆளுங்கட்சி கூடுதல் கவனம் செலுத்துகிறது.

தேர்தல்களம் தயாராகி விட்டது. இருபுறமும் படைகள் அணிவகுத்து நிற்கின்றன. மகாபாரதப் போரில் கையாளப்பட்ட சூதுவாது, சூழ்ச்சி, யுக்தி அனைத்தும் இந்தத் தேர்தல் மோதலிலும் பிரயோகிக்கப்படும் வாய்ப்பிருக்கிறது. எந்த அணி ஜெயித்தாலும் வோட்டு வித்தியாசம் மிகக் குறைவாகவே இருக்கும்.

- ப்ரியன்

படங்கள் : ராஜன்

# அதெல்லாம் ஒரு காலம்!



சமூக வாழ்க்கை -
வி.எஸ்.வி. மணி
(முன்னாள் தலைவர் பேங்க் ஆஃப் தமிழ்நாடு)

"நெல்லை சந்திப்பிலிருந்து புறப்பட்டு, நெல்லையப்பர் கோவில் மேலப்பாளையம் முருகன்குறிச்சி வரையிலும் நீண்ட நெடிய ஒரே சாலையாக அன்று நெல்லையப்பர் நெடுஞ்சாலை விளங்கியது. அந்த சாலையின் இருமருங்கிலும் பிரமாண்ட இலுப்ப மரங்கள் நெடிதாய் வளர்ந்து நிழல் குடை பரப்பியிருக்கும் அழகு இன்று மனக்கண்ணில் பசுமையாய் நிழலாடுகிறது. நெல்லைநகரில் அன்று பிள்ளைமாரும், நிலச்சுவான்தாரர்களும் அதிகமாக வாழ்ந்து வந்தனர். எத்தனை பெரிய பணக்காரர் என்றாலும் காலையில் வண்டி கட்டிக் கொண்டு வந்து, தாமிரபரணியில் நீராடுவார்கள். திரும்பும் வழியில் நெல்லையப்பரையும், காந்திமதி அம்மனையும் தரிசித்த பின்னரே அன்றைய அலுவல்களையே தொடங்குவார்கள். தெய்வ வழிபாட்டில் அதிக ஈடுபாடு கொண்டவர்கள் நெல்லை மக்கள்.

ஒவ்வொரு வீட்டிலும் உள்ள உரையில் (மாடம்) காலையிலேயே குத்துவிளக்கு ஏற்றும் வழக்கம் உண்டு. திருவிளக்கு வழிபாட்டுக்கு திருநெல்வேலிதான் முன்னோடி. தவிர பல்வேறு சைவத் திருமடங்கள் தோன்றிச் செழித்ததும் இங்கேதான். ஆன்மிக மார்க்கத்தில் இவ்வாறு செழித்தோங்கிய காரணத்தினால் தேச பக்தியும், சுதந்திர தாகமும் தீவிரமாக இருந்தது.

நெல்லையை ஒட்டிய பாளையங்கோட்டை அன்று ராணுவ கண்டோன்மெண்டாக இருந்ததால் கிருஸ்தவர்களும், வெள்ளைக்காரர்களும் அதிகமாக வாழ்ந்தனர். இதனால் அப்போதே பாளையங்கோட்டையில் மேற்கத்திய கலாசாரம் இருந்தது. இங்கே கல்விப் பணியில் சிறந்து விளங்கி வரும் சேவியர் கல்லூரி, அன்றும் சரி, இன்றும் சரி, கிருஸ்தவ மதத்தைப் பரப்ப முயற்சி செய்யவில்லை.

அன்று விக்கிரமசிங்கபுரத்திலும், தூத்துக்குடியிலும் நூற்பாலைகள் இருந்தன. இன்று சர்க்கரை ஆலை, சிமெண்ட் தொழில்கள் வந்துவிட்டன. அன்று



நெல்லைச் சிறப்பிதழ்

• போத்தீஸ் ரமேஷ்

மேலப்பாளையம் முஸ்லீம்கள் பாய் முடைதல், கைத்தறி புடைவைகள் நெய்தல் மட்டுமே செய்து வந்தனர். இன்றோ இவற்றை விட்டுவிட்டு பீடி சுற்றுகிறார்கள். மக்கள் தொகை பல மடங்கு பெருகிவிட்டதில் அடுக்குமாடி குடியிருப்புகள் பெருகிவிட்டன. நெல்லையில் சீர் பெற்று விளங்கிய கூட்டுக் குடும்பம் ஒழிந்துபோய் அபார்ட்மென்ட் வாழ்க்கை அறிமுகமாகி விட்டது. அரசியலில் நேர்மையில்லாததால் இங்கே ஜாதி அரசியல் தலை தூக்கிவிட்டது. சிலைகளுக்குக் கூட இங்கே கம்பிச் சிறை வைக்க வேண்டிய நிலை ஏற்பட்டு, ஜாதிக் கலவரத்தின் பிடியில் ஊர் முகம் நசுங்கிக் கிடக்கிறது. ஒன்று மட்டும் இன்று வரை இங்கேயும் மாறவில்லை. செவிக்கினிய நெல்லையின் பேச்சுத் தமிழ்தான் அது.

### கல்வி - டி. இராமச்சந்திரன், (முன்னாள் முதல்வர் இந்துக்கல்லூரி.)

• ராமச்சந்திரன்



திருநெல்வேலிக்காரர் முனைவர் பட்டம் பெற விரும்பினால் தூர தேசமான சென்னைக்கு வர வேண்டும் என்றிருந்தது அந்தக் காலம். இன்று நெல்லையின் எல்லையிலேயே ஒரு பல்கலைக் கழகம். முன்பு தொழிற் கல்லூரிகளைப் பொருத்தவரை தேடி அலைந்தாலும் கிடைக்காது. மருத்துவக் கல்லூரி மருந்துக்குக் கூட கிடையாது. சட்டக் கல்லூரியும் அப்படித்தான். இப்போது தடுக்காமலேயே விழுந்தாலும் ஒரு கல்வி நிலையத்தின் வாசலில்தான் விழ வேண்டும். முன்பு புனிதசேவியர், புனித ஜான், சாராள் தக்கர், இந்துக் கல்லூரி என நான்கு கல்லூரிகள்தான் இருந்தன. இன்று எழுபது கல்லூரிகள், 'ஆக்ஸ்ஃபோர்டு ஆஃப் சௌத் இண்டியா' என்ற அடைமொழியோடு.

1991-ஆம் ஆண்டு கணக்கெடுப்பின்படி பார்த்தால் நெல்லை மாவட்டம் எழுத்தறிவில் ஒன்பதாவது இடத்திற்கு வந்துவிட்டது. கல்வித் தரம் உயர வேண்டுமானால் கல்லூரிகள் தன்னாட்சி பெற வேண்டும்... பல்கலைக் கழக மானியக் குழு நிர்ணயித்த தரத்தில் புனித சேவியர் கல்லூரியும், ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரியும் மட்டுமே கல்வி வழங்கி வருகின்றன. ஆசிரியர்கள், பேராசிரியர்களின் வாழ்க்கைத் தரமும் வருமானமும் உயர்ந்திருக்கிறதே தவிர கல்வித் தரம் உயரவில்லை.



சிறைக்குள் சிலை



• வி.எஸ்.மணி

## பொருளாதாரம் - (ரமேஷ், போத்தீஸ் உரிமையாளர்)

நெல்லையின் பொருளாதாரப் பின்புலத்திற்கு அடிப்படையாக விளங்குவது விவசாயம். நெல் மற்றும் உளுந்து போன்ற பருப்பு வகை, பணப் பயிர்களில் பருத்தி உற்பத்தியும் அதிகரித்து வருகிறது. தொழில்துறையில் இந்தியா சிமெண்ட் தொழிற் சாலையும், அம்பா சமுத்திரம், நாங்குநேரி நூற்பாலைகளும் குறிப்பிட்டுச் சொல்லக் கூடியவை. பித்தளை பாத்திர உற்பத்தியும், (குறிப்பாக திருநெல்வேலி குத்து விளக்கு) சிறந்து விளங்குகிறது. வியாபாரத்தைப் பொருத்த வரை ஜவுளி விற்பனை, நகை வணிகம் சிறந்து விளங்குகின்றன. இப்போது கட்டுமானத் தொழிலும் வளர்ச்சி பெற்று வருகிறது. மற்ற மாநகரங்களோடு ஒப்பிடும் போது நெல்லையின் விலைவாசி ஜீரணிக்கும்படி இருக்கிறது.

வியாபாரம் மற்றும் தொழில்துறையில் நெல்லையைச் சேர்ந்தவர்கள் சிறந்து விளங்கி வருவதற்கு காரணம் தொழில் பக்தியும், கடின உழைப்பும்தான்.



• ராதாகிருஷ்ணன்



• பிரபாகரன்

## நுகர்வோர் - பிரபாகரன் (வழக்குரைஞர்) செயலர் மாவட்ட நுகர்வோர் பாதுகாப்பு சங்கம்

நெல்லை நுகர்வோர் முழுமையான விழிப்புணர்வு பெற்றவர்கள் என்பதற்குச் சமீபத்திய உதாரணம், புருடென்ஷியல் கேபிடல் மார்க்கெட்ஸ் நிறுவனத்தின் மீது நெல்லை மாவட்ட நுகர்வோர் நீதிமன்றத்தில் போடப்பட்ட வழக்கு. இந்த நிறுவனத்தில் போடப்பட்ட வைப்பு நிதி மூப்படைந்தும் திருப்பித் தராத நிலையில் பாதிக்கப்பட்ட திருநாவுக்கரசு என்பவர் நீதிமன்றத்தைத் துணிந்து நாடினார். இந்திய இராணுவத்தில் மிக உயர்ந்த பொறுப்பு வகித்து ஓய்வு பெற்ற பீல்டுமார்ஷல் மானக்ஷா, இந்த நிறுவனத்தின் இயக்குனர்களில் ஒருவர். வழக்கை விசாரித்த நெல்லை நுகர்வோர் நீதிமன்றம் மானக்ஷா மீது பிடிவாரண்டு பிறப்பித்தது. உடன் அவரது உதவியாளர் முப்பதாயிரம் ரூபாய் டெபாசிட் மூப்பு பணத்தைக் கொடுக்க அறுபதாயிரம் செலவழித்து நெல்லைக்கு வந்து போனார். இந்தியா முழுக்க பரபரப்பாக பேசப்பட்டது இந்த வழக்கு.

நெல்லை நுகர்வோர் நீதிமன்றத்தில் இரண்டு உறுப்பினர்கள் பதவி காலியாக இருப்பதால், கடந்த ஆறுமாத காலமாக நீதிமன்றம் செயல்படாமல் முடங்கிக் கிடக்கிறது. மாநில உணவுத்துறைச் செயலாளர் பரிந்துரையின் பேரில்தான் இந்த இடங்கள் நிரப்பப்பட வேண்டும்... நெல்லை நுகர்வோர் எதிர்பார்த்துக் காத்திருக்கிறார்கள்.

## இளைஞர் மனோபாவம்- கே.எஸ். ராதாகிருஷ்ணன் (தி.மு.க செய்தி தொடர்பாளர்)

"கால் நூற்றாண்டுக்கு முன்னர்கூட ஜங்ஷன் பஸ் நிலையம் அமைதிப் பூங்காவாக காட்சியளித்திருக்கிறது. இப்போது இருக்கும் பரபரப்பும், அசுத்தமும் நினைத்தால் குமட்டிக் கொண்டு வருகிறது.

தச்சநல்லூர் சாலையில் பசுமை குலுங்கும் வயல்கள்; மனதுக்கு அமைதி தரும் நெல்லையப்பர் கோயில் பிராகாரம், இருபத்து நான்கு மணி நேரமும் அல்வா விற்பனை, சரித்திரங்களை உள்ளடக்கிய தாமிரபரணி, சொல்லிக் கொண்டே போகலாம். இப்போது எல்லாம் வியாபாரம், வர்த்தக மனம். சமுதாயத்தின் இந்த மாறுதல், மாணவர்களையும் பாதித்திருக்கிறது. என் கல்லூரிக் காலத்தை நினைத்துப் பார்க்கிறேன்.

"காந்தி மைதானத்தில் காமராஜ் பேசுகிறாரோமே... அடுத்த மாதம் ஹைகிரவுண்டில் கலைஞர் மீட்டிங் தோழா" - கட்சி சார்பைக் கடந்து பொதுக்கூட்டங்களுக்குச் செல்லும் மாணவர்கள் கூட்டம். தலைவர்களின் பேச்சு பற்றியும், நாட்டு நடப்பைக் குறித்தும் பட்டாணியைக் கொரித்து நடந்து கொண்டே ஹாஸ்டல் வரை உரத்த குரலில் வாக்குவாதம். எங்கள் உச்ச ஸ்தாயியைக் கண்டு உறங்கும் பறவைகள் மரங்களில் சிலிர்த்து அடங்கும். ஆனால் பேச்சில் சமூக உணர்வு இருக்குமே தவிர சாக்கடை வாசனை வீசாது. எமர்ஜென்ஸியை எதிர்த்து நெல்லையில் கலைஞர் முழங்கியதை மறக்க முடியுமா?

"நமக்கென்ன?" என்ற மனோபாவமே அப்போது கிடையாது. சின்ன பிரச்னைகளுக்குக் கூட எதிர்மூச்சு எழுந்து அடங்கும். போலீஸ் போராட்டங்களில் பிடித்துக் கொண்டு போகும்போது எதிர் முகாம் மாணவர் ரவா தோசை பொட்டலத்துடன் நம்மைப் பார்க்க வரும் நிலையை இப்போது நினைத்துப் பார்க்க முடியுமா?

வெளிக்கிழமை வந்தவுடன் ஒரு விறுவிறுப்பு தொற்றிக் கொள்ளும். ரத்னா, ராயல், சென்ட்ரல், பார்வதி என்று தியேட்டர்களில் புதுப் படம் ஓடுவதைக் குறித்து ஓர் அலசு அலசி, மறுநாள் இரண்டு படங்களுக்குக் குறையாமல் பார்த்து, டவுனில் என்.வி.யை ஒரு வெட்டு வெட்டி, லேட்டாக ஹாஸ்டலுக்கு வந்து வார்டனிடம் வாங்கிக் கட்டிக் கொள்வோம். இப்படி குஷியாகக் காலம் போகும்போது மார்ச், ஏப்ரல் வந்துவிட்டால் சூழல் இறுகிப் போகும். ஹாஸ்டல் ரூமை விட்டு வெளியில் டீ குடிக்க, சாப்பிட மட்டுமே தலையைக் காட்டுவோம். எஸ்.ஆர்.எஸ். புத்தகக் கடையை அலசி 'கைடு'களை கைப்பற்றுவோம். பரீட்சை முடித்து நண்பர்களைப் பிரியும்போது விழிகளில் தாமிரபரணி.

— ப்ரியன், ஜெ...

# தொடரல்ல; வரம்!

பதினேழு வாரங்கள் 'மூலிகை கேலரி' தொடர் மூலம் பல அரிய விஷயங்களைத் தெரிந்து கொள்ள உதவிய ராஜம் முரளிக்கு நன்றி. விஷ்ணுவுக்குப் பிடித்த துளசியில் ஆரம்பித்து சிவனுக்கு ஏற்ற வில்வத்தில் கட்டுரையை முடித்திருந்த பாங்கு வெகு அருமை.

மொரட்டுப்பாளையம், கருநா. இராஜேஸ்வரன்.

'தேடிப் போன மூலிகை காலில் சுற்றியது'- கல்கியில் கேலரியாக வந்த தொடரால். இது தொடரல்ல, வரம். சிறிது காலம் ஆனபின் மீண்டும் மூலிகை வாசம் வீசும் என நம்புகிறேன்.

பொள்ளாச்சி, சி.ஆர். நாகராஜன்.

இவ்வளவு அருமையான தமிழ் வைத்திய மூலிகைகளைக் கையில் வைத்துக் கொண்டு அவற்றின் பயனை இதுகாறும் அறியவில்லையே என்று மனது சங்கடப்படுகிறது.

திருச்சி, சரஸ்வதி பஞ்சு.



இது போன்ற பயனுள்ள பல கட்டுரைகளை எதிர்பார்க்கிறோம்.

மதுரை, பாலு.

'மூலிகை கேலரி' பகுதி மிகுந்த பயனுள்ளதாக இருந்தது. இலேசான நகைச்சுவையுடன் இருந்தால் ஆவலுடன் படிக்கும்படி இருந்தது. அதற்குள் முடிந்து விட்டதே!

திருச்சி-14, ஜெயலக்ஷ்மி.

வாரந்தோறும் மணம் வீசிய மூலிகை கேலரியை இவ்வளவு சீக்கிரம் முடித்து விட்டீர்களே!

சென்னை - 4, சீனு. சந்திரா.



# துள்ளுவதோ இளமை

**த**மிழக கிராமங்களில் தேடினாலும் கிடைக்காத், பஞ்சாயத்து ஆலமரத்தையும், முறுக்கு மீசை பண்ணையார்களையும், உடும்பு மாதிரிப் பிடித்துக் கொண்டிருந்த இயக்குனர் கஸ்தூரி ராஜா தான் இதை எடுத்தாரா என சந்தேகிக்க வைக்கிறது படம்!

பள்ளிப் பிள்ளைகளின் பருவகால ஏக்கங்கள், மனநிலை மாற்றங்கள் எதுவாயினும், பெற்றோர் புரிந்து கொண்டு பிள்ளைகளை அணுக வேண்டும். இல்லையென்றால் நிம்மதி பறிபோவது உறுதி என்பதைப் பொட்டில் அடித்த மாதிரி யதார்த்தமாய்ச் சொல்ல முயன்று அதில் பாதிக் கிணறு தாண்டியிருக்கிறார். மீதிக் கிணறு...? குடலைப் புரட்டுவது போன்ற சதை வியாபாரமாகி அருவருப்பூட்டுகிறது!

ஏழை மீன் வியாபாரியின் மகனாக, கதாநாயகனுக்குரிய பந்தா எதுவுமின்றி பக்கத்து வீட்டுப் பையன் மாதிரி எளிமையான தோற்றத்தில் வரும் மகேஷும், அவரோடு அன்பாகப் பழகும் பணக்கார வகுப்பு மாணவியாக ஷெரினும், யதார்த்தமாய் நடித்திருக்கிறார்கள். பள்ளி வாசலில் ஆபாசப் புத்தகங்கள் விற்றாலும், மாணவர்கள் மத்தியில் 'அன்புக்குரிய மணி'யாக வலம் வரும், ரமேஷ் கண்ணா பாத்திரம் பளிச்சென்று நெஞ்சில் பதிகிறது.

திரைக்கதையில் தொய்வில்லை என்றாலும், எடுத்துக்கொண்ட எல்லா குடும்பங்களுமே மோசம் என்பதுபோல் சித்திரித்திருப்பது பெரிய ஓட்டை!

படத்தில் தனித்துத் தெரியும் அம்சம் செல்வராகவனின் துள்ளலும் துடிப்புமான வசனங்கள்.

'ஏ' சான்றிதழோடு வந்துள்ள படத்தை எச்சரிக்கை மருந்தாகவும் கொள்வதற்கில்லை; பொழுதுபோக்கு விருந்தாகவும் ஏற்பதற்கில்லை.

**— விஷுவல்தாசன்**

● அபவ் ஆவரெஜ்

**Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi**
**Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**
**Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.**
**Annual Subscription : India : Rs. 330/-; Overseas : Rs. 2000/- (Air Mail)**
**Half Yearly Subscription : India : Rs. 165/-; Overseas : Rs. 1000/- (Air Mail)**

என் மகள் வீட்டுப்பாடங்களை நிமிஷத்தில் முடித்து விட்டு
மணிக்கணக்காக விளையாடுவாள்.




## அவளுடைய ஞாபகசக்திக்கும், துடிப்பிற்கும் ரகசியம் என்ன தெரியுமா?






**Anjis CHYAWANPRASH**

நோய் எதிர்ப்பு சக்தியை வலுவாக்குகிறது
ஞாபக சக்தியை அதிகரிக்கிறது
இளமையாக உணர உதவுகிறது

அவள் காலை 7.30 மணிக்கே வீட்டைவிட்டுப் போவாள். பள்ளிக்கும் வீட்டிற்கும் இடையே ஸ்பெஷல் க்ளாஸ், கம்ப்யூட்டர் க்ளாஸ், டான்ஸ் க்ளாஸ் எல்லாம் முடித்துவிட்டு வருவாள். வீட்டிற்குத் திரும்பும் போது நிறைய ஹோம் வொர்க்கோடு வருவாள். அது தவிர கார்ட்டூன் பார்க்க வேண்டும். தூங்கவும் வேண்டும். போட்டி நிறைந்த உலகில் அவள் படிப்பிலும், விளையாட்டிலும் முன்னிலை வகிக்கிறாள். ஆஞ்சிஸ் சாவன்ப்ராஷுக்குத்தான் நன்றி சொல்ல வேண்டும். நாள் முழுக்க துடிப்போடும், சுறுசுறுப்போடும் இருக்க அவளுக்கு ஆஞ்சிஸ் சாவன்ப்ராஷ் மகத்தான ஞாபகச் சக்தியையும், ஆற்றல்களையும் தருகிறது.

சாஸ்திரிய ரீதியான ஆயுர்வேத நிபுணர்களால் தயாரிக்கப்படும் ஆஞ்சிஸ் சாவன்ப்ராஷில் உள்ளவை : பிரம்மி -ஞாபகத்திறனை அதிகரிக்கச் செய்வது, வைட்டமின் 'சி' உள்ள நெல்லி மற்றும் பிப்பலி - பதட்டத்தை போக்கும் குணங்களை அதிகமாகக் கொண்டது. ஆரோக்ய வாழ்வுக்கான முழு ஆற்றல்களையும் தற்காப்பு வலிமைகளையும் அளிக்கிறது ஆஞ்சிஸ் சாவன்ப்ராஷ்.
இன்றே பயன்படுத்திப் பாருங்கள். வித்தியாசத்தை உணர்வீர்கள்.

Manufacturer:
**Anjis Herbcure Product Pvt. Ltd.,**
Chennai-17. Fax : 814 3947

Marketed by :
**Franch Herbs Technologies Ltd.,**
Fax : +91-44-6444370 or e-mail:franchproducts@vsnl.com

# ஓவியப் பட்டு




RmKV

Tirunelveli-6

## ஹம்ச தமயந்தி

ராஜா ரவிவர்மாவின் உலகப் பிரசித்தி பெற்ற
ஓவியத்தைப்புதிய தொழில்நுட்பத்துடன்
நெய்ததற்காக தேசிய விருதுபெற்ற
ஒப்பற்ற பட்டுப்புடவை